அனைத்திந்திய நூல்வரிசை

# மூன்று மலையாள நாடகங்கள்

என். கிருஷ்ண பிள்ளை
ஸி.ஜெ. தாமஸ்
கெ.டி. முகம்மது

தமிழாக்கம்
ம. இராஜாராம்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ISBN 81-237-1342-8

1995 (சக 1916)

*Original Title* : **Moonu Malayala Natakangal**
*Tamil Translation* : **Moonru Malayala Natakangal**

**ரூ. 35.00**

வெளியீடு. இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
ஏ-5, கிரீன் பார்க், புது தில்லி-110 016

# பொருளடக்கம்

# முன்னுரை

மலையாள நாடக இலக்கியத்தின் 'யதார்த்த எழுத்தென்னும் மண்ணில் பசுமையுடன் தலையுயர்த்தி நின்று பூத்துக் குலுங்கும் மூன்று விருட்சங்களே இங்கே அறிமுகப்படுத்தப் படுகின்றன – ஸ்ரீ என். கிருஷ்ண பிள்ளையின் "கன்னிகை", ஸி.ஜெ. தாமஸின் "அவன் மீண்டும் வ ருகிறான்", ஸ்ரீ கெ.டி.முகம்மதுவின் "இது உலகம்". மலை யாள நாடககர்த்தாக்கள் அதுவரை பயிரிட்டிருந்தவை வைரம் பாயாத பாலை மரமும், இலவ மரமும், முருங்கை மரமுமாக மட்டுமே இருந்தன; நல்ல வைரமும், பருமனும், ஏராளமான பழங்களும் நிறைந்த வரிக்கைப் பலா மரங்களைப் பயிரிட ஸ்ரீ என். கிருஷ்ணபிள்ளையும், ஸி.ஜெ.தாமஸும், கெ.டி. முகம்மதுவும் முயன்றனர்.

ஈ.வி. கிருஷ்ணபிள்ளையும், என்.பி. செல்லப்பன் நாயருமே அக்கால கட்டத்தில் பிரதான நாடக கர்த்தாக்கள். "ஒரு புறம் சரித்திரம் அல்லது அது போன்ற வீரசாகசக் கதைகளைத் திரித்து காலும் தலையுமில்லாத அமானுஷ பாத்திரங்களும், கோஷ வார்த்தைகளை சிமின்ட்டில் வார்த்த நீண்டநெடு பிரசங்கங்களும் குத்தித் திணிக்கப்பட்ட மெலோட்ராமா; மறுபுறம் நகைச்சுவையின் பெயரில் யதார்த்தித்தின் சுவடு கூட இல்லாமல் கட்டி நிறுவப்பட்டகேலிக் கூத்துக்கள்,[1] "இவைதான் இந்நாடக ஆசிரியர்களின் படைப்புக்கள். இன்னொரு வகையான நாடகங்களும் இக்கால கட்டத்தில் வெளிவரத் தொடங்கியிருந்தன. சமூக சீர்திருத்தமும், தேசீய உணர்ச்சிப் 'பிரசாரமும் இலட்சியங்களாகக் கொண்டு எழுதப்பட்ட "அடுக்களையிலிருந்து அரங்கத்திற்கு", "பாட்ட பாக்கி" என்பவற்றையே நான் குறிப்பிடுகிறேன். ஆனால் இவற்றின் கலைநுட்பத்தரம் பெரும்பாலும் முந்தையவகையைச் சார்ந்ததாகவேயிருந்தது. விஷயத்திலும், நுட்பத்திலும் சேர்ந்து மாற்றம் தோன்றியது இன்னும் சற்றுக் காலம் ஆன பிறபாடு தான். 1934–ல் ஸ்ரீ.ஏ. பாலகிருஷ்ண பிள்ளை, நார்வீஜியன் நாடகாசிரியரான ஹென்றி இப்ஸனின், 'பிரேதங்கள்' என்ற

---

1. மலையாள நாடகங்களிலூடே – காடுமாடம் நாராயணன்.

நாடகத்தை மொழிபெயர்த்து, ஐரோப்பாவில் பிரபலமாயிருந்த 'ரியலிஸ்ட்' நாடக இலக்கியத்தின் சிறப்புக்களை அந்த மொழிபெயர்ப்பின் அறிமுகத்தில்[2] விவரிக்கவும் செய்தார். இலக்கமிட்டு ஏழு சிறப்புக்களை ஸ்ரீ பாலகிருஷ்ணபிள்ளை அம்மொழிபெயர்ப்பின் முன்னுரையில் விவரித்திருந்தார். அவற்றைக் கீழே தருகிறேன் :

1. இன்றைய நாடகத்தின் கருப்பொருள் காலத்தாலோ இடத்தாலோ நம்மிடமிருந்து அகன்று நிற்பதாக இல்லை. சரித்திர நாடகங்களுக்கும், தொலைவிடங்களில் நடந்த சம்பவங்களை மையமாக்கிப் படைக்கப்பட்ட நாடகங்களுக்கும் இன்றைய நாடக உலகத்தில் இடமில்லை. நம்மைச் சுற்றி நடக்கும் அன்றாட சம்பவங்களே இன்றைய ட்ராமாவின் விஷயம், இதற்கெதிராக, சரித்திர சம்பவங்கள் அசாதாரணமாக கொலை, கொள்ளை, யுத்தம் மற்றும் கிளர்ச்சியூட்டும் விஷயங்கள் ஆகியவற்றையே பழைய ட்ராமாக்கள் கருப்பொருளாகக் கொண்டிருந்தவை.

2. அன்றாட வாழ்க்கை ட்ராமாவின் விஷயமானவுடன் அது நேரடியாகவோ மறைமுகமாகவோ கருத்துக்களோ எண்ணங்களோ வெளிப்படுகிற ட்ராமாவாகி விட்டது. இதற்கு மாறாக, சம்பவங்களை, அசைவு நிலைகளை சித்தரிப்பவைகளாக இருந்தன முந்தியவை. ட்ராமாவின் போக்கு, வெளித் தோற்றங்களின் சித்தரிப்பிலிருந்து உள்நிலை சித்தரிப்பை நோக்கி என்று ப்ரொஃபஸர் வோகன் சுட்டிக் காட்டியது இங்கே நினைவுகூரத் தக்கது. (Types of Tragic Drama by Prof. Vaughan)

3. இந்நாடகங்கள் பெரும்பாலும் பழைய கருத்துக்கள். ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் பெருமையைக் கேள்விக்கு இலக்காக்கின. பழைய ட்ராமா மாமூல் ஆசாரங்களையும், ஸ்தாபனங்களையும் புனிதமும் புரட்சி மிக்கதாவும் கருதி வந்திருந்தது. பழைய ட்ராமா விலக்கியிருந்த பாலுறவுகளும், தொழிலாளர் பிரச்னைகளும் இன்றைய ட்ராமாவில் மேலோங்கி நிற்கின்றன.

4. பழைய ட்ராமா, இயக்கம் சார்ந்ததாகவும் (Dyamic), இன்றைய ட்ராமா நிலையமைதிப் பண்புற்றதாயும் (Static) இருக்கின்றன. சம்பவங்களை விலக்கிக் கருத்துக்களை வெளிப்படுத்துகின்ற நவீன ட்ராமா இப்படி நிலையமைதிப் பண்புற்றதாக ஆகாமலிருக்க முடியாதல்லவா ? பழைய ட்ராமாவின் இயக்க வித்தைகளுக்குப் பதில் மனத்தத்துவப் பரிமாறல்களே கருவாகிவிட்டது.

---

2. ப்ரேதங்கள் – பாலகிருஷ்ண பிள்ளையின் மொழிபெயர்ப்பின் முன்னுரை.

5. இம் மனத்தத்துவப் பரிமாறல்களையும், மனப் போராட்டங்களையும் மேடையின் மீது முழுமையாக வெளிப் படுத்துவதற்கு சாதாரண வார்த்தைகள் போதுமானவையாக இல்லாததால், நவீன ட்ராமா வார்த்தைகளைத் தவிர குறியீடுகளையும் உபயோகத் தொடங்கிற்று.

6. நவீன ட்ராமாவில் மனத்தத்துவப் பரிமாறல்களின் வெளிப்பாடு அதிகரிக்கவும், பாத்திரங்களை விலக்கி மக்கள் கூட்டங்களையும், ஆண், பெண் என்கிற பெயர்களில் வர்க்கத்தை முழுவதாகவும், மனிதர்களையே விலக்கிக் கண்ணுக்குப் புலப்படாத சக்திகளையும், சில நாடகாசிரியர்கள் கதாபாத்திரங்களாக்கி வருகிறார்கள்.

7. நாடக இலக்கியத்தின் நுட்பங்களில் பழையதும் புதியதுமான நாடகங்களுக்கிடையே கனமான வேறுபாடு களுண்டு.

ஸ்ரீ.பாலகிருஷ்ண பிள்ளையின் இவ்விளக்கத்தைப் படித்து அதன் மூலம் உத்வேகம் பெற்றுச் சிலர் புதிய முறையில் நாடகங்கள் எழுதினார்களென்றும், அதனால் நாடகங்களின் அமைப்பில் முன்னேற்றங்கள் ஏற்பட்டதென்றும் நான் சொல்ல வரவில்லை.

ப்ரேதங்களின் மொழிபெயர்ப்பு, அம்மொழிபெயர்ப்பில் நவீன நாடகங்களின் சிறப்புக்களைக் குறித்து ஸ்ரீ பாலகிருஷ்ண பிள்ளை எழுதிய கட்டுரை தொடர்ந்து இட்ஸனின் "ரோஸ் மாஷாம்" என்ற நாடகத்தை "முல்லைக்கல் பவனம்" என்ற பெயரில் ஸ்ரீ.ஸீ. நாராயணபிள்ளை தனியாக பிரசுரித்தது. இப்ஸனின், இங்கிலீஷில் மொழிபெயர்க்கப்பட்ட மற்ற நாடகங்கள் ஆகிய எல்லாவற்றினுடையவும் கூட்டுமொத்தமான பாதிப்புத்தான் ஸ்ரீ என்.கிருஷ்ணபிள்ளை போன்ற ஒரு இளைஞர் நாடகத்தில் புதிய பிரிசோதனைகளை மேற்கொள்ளுவதற்குக் காரணமாயிருந்திருக்கிறது. ஸ்ரீ.கிருஷ்ண பிள்ளையே இவ்விஷயத்தை அங்கீகரித்திருக்கிறார். அவர் எழுதுகிறார்.

"கனமானதும் அடிப்படையானதுமான ஏதேனுமொரு வாழ்க்கைப் பிரச்சினையை யதார்த்த உணர்வுடன் நுண்மையாக ஆராய்ந்து, செறிவான கதைக் கருவும், இடம், காலங்களும், கதாபாத்திரங்களும், சந்தர்ப்பங்களும், சம்பாஷணைகளும், வாக்கியங்களும் தேவைக்கேற்ப அமைத்து, அவ்வுட்கூறுகளை யெல்லாம், ஏற்கப்பட்ட பிரச்சனையின் முழுமையான வெளிப்பாட்டில் மையமாக்கி நாடகம் படைக்க வேண்டுமென் பதே என் ஆசையாகவிருந்தது. இந்த இலட்சியத்தை நோக்கி என்னை ஊக்கப்படுத்தியது பிரஸ்தாபிக்கப்பட்ட விஷயங்களின் பால் உதாசீனமோ அல்லது அவை பற்றி அறியாமையோ கொண்டவர்களாயிருந்த அன்றைய நாடககர்த்தாக்களின் படைப்புக்களும், அந்தப் பண்புகளை முழுவதும் வார்த்தைக்கு

வார்த்தை புலப்படுத்தி வெற்றியடைந்திருந்த இப்ஸனின் நாடகங்களுமே. இரட்டை நூலிட்டு கதைக் கருவை நெய்கின்ற பழைய வழக்கம் செறிவுக்கு இடையூறு விளைவிப்பதால் ஒரிழை மட்டுமேயுள்ள கதைக் கருக்களை எடுத்துக் கொள்வது, வீண் அளவுக்கு இடம் கொடாதிருப்பதற்காகக் காட்சி எண்களை வெட்டிக் குறைப்பது, அப்படி எண்ணிக்கையில் குறைந்த காட்சிகளையும் முடிந்த அளவு உணர்ச்சி மிக்கவையாயும், மனப்போராட்டங்களாகவும் ஆக்குவது, செறிவும் இறுக்கமும் கொண்ட கதைக்கேற்ப பாத்திரங்களைக் குறைப்பது, நீண்ட சொற்பொழிவுகள் விவரிப்புகள், உணர்ச்சி பூர்வமான வருணனைகள் கதைகள் தனி மொழி முதலிய இயற்கைக்குப் புறம்பானவைகளைத் தவிர்ப்பது, என்ற மார்க்கங்களை நான் சரணடைந்தது மேற்கூறிய இலட்சியத்தை அடைய வேண்டுமென்ற வெறியோடும் திடமான தீர்மானத்துடனுமே" (கைரளியுடெ கத–என்.கிருஷ்ணபிள்ளை)

'கன்னிகை' மேற்கூறிய சிறப்புக்களை உள்ளடக்கிய நாடகம். கிருஷ்ணபிள்ளையின் முதல்நாடகமான 'சிதைந்த கோட்டை (பக்ன பவனம்) முழுக்க முழுக்க இப்ஸனை முன்மாதிரியாகக் கொண்டு படைக்கப்பட்டது என்று சொல்ல முடியாது. கருவின் போராட்டத் தன்மையிலும், குடும்பத் தன்மையிலும் மட்டுமே 'சிதைந்த கோட்டை' இப்ஸனின் நாடகங்களை ஒத்திருக்கின்றது. 'கன்னிகை' யோவெனில் எல்லாவிதங்களிலும் இப்ஸனின் யதார்த்த நாடங்கள் முன் மாதிரியாக்கி எழுதப்பட்டதாகும் ஒரே இழையான கதையே இந்நாடகத்திலுள்ளது. தேவகிக்குட்டி என்ற யுவதி திருமணமின்றி வெகுகாலம் வேலை பார்த்து ப்ரமோஷன் பெறத்தகுதி பெற்றபின்னரும் தான் வாழ்ந்தோம் என்று தோன்றாமல், "பெண் பெண்ணாவது–வாழ அருகதை பெறுவது–அவள் ஒரு மனைவியாகவும் தாயாகவும் ஆகும்போதே", என்ற தங்கையின் சித்தாந்தத்தை அங்கீகரித்து வேலையை ராஜினாமா செய்து, வேலைப்பிள்ளை என்ற தன் ப்யூனை கணவனா வரித்து வீட்டை வட்டுப் போவதுதான் இந்நாடகத்தின் கதைக்கரு. விமர்சன கட்டத்தின் சற்று முன் பிலிருந்து நாடகத்தைத் தொடங்குவது, மனப் போராட்டங்களினூடே கதையை வேய்ந்து விரைவாக முன்னே நடத்திச் செல்வது, என்ற ஒரு முறையையே ஸ்ரீ கிருஷ்ணபிள்ளை இந்நாடகத்தில் கையாண்டிருக்கிறார். கனமான ஒரு காட்சிக்குப் பிறகு நகைச்சுவை நிறைந்த ஒரு காட்சி என்ற பரம்பரையிலிருந்து முற்றிலும் விலி, விறுவிறுப்புடன், கதையை முன் நடத்திச் செல்வதிலேயே நாடகாசிரியர் கவனம் செலுத்துகிறார். நான்கு அங்கங்களே இந் நாடகத்திலுள்ளன. ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் உணர்ச்சி நிறைந்ததாக ஆக்க நாடகாசிரியர் பெருமளவு முயன்றிருக்கிறார். இவ்வுணர்ச்சி நிறைவுக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டு நாலாம் அங்கத்தில்

தாயிடம் தேவகிக்குட்டி தன் தீர்மானத்தை வெளிப்படுத்தும் இடம்:

"ஓ! உனக்குக் கல்யாணம் செய்யாததோ? எங்களுக்கு அந் நினைப்பே உண்டாகலை தேவகிக் குட்டி" என்று கூறும் மாதவியம்மாவிடம் தேவகிக்குட்டி சொல்கிறாள். ஏன் உண் டாகலைம்மா ஏன் உண்டாகலை? உங்கள் வாழ்க்கையின் கடந்துபோன நாட்களை ஏனம்மா திரும்பிப் பார்க்கவில்லை? இப்போது கண் குழி விழுந்து, நரை உண்டாகி, தளர்ந்து போய் விட்டீர்கள். ஆனாலும் அம்மா, எனக்காகக் கொஞ்சம் கஷ்டப்பட்டு அப் பழைய நாட்களைச் சற்றுத் திருப்பிப் பாருங்கள். அம்மா, உங்கள் கல்யாணத்திற்கு முன்பு நீங்கள் ஒரு கன்னியாகவிருந்த காலத்தில், தோலுக்குப் பளபளப்பும், சதைக்குத் திரட்சியும், இரத்தத்திற்கு வெம்மையும் இருந்த காலத்தில், எத்தனை நாள் கணவனின் உருவத்தைக் கனவு கண்டு கொண்டு நீங்கள் உறங்காமல் கிடந்திருக்கிறீர்கள்? எத்தனையெத்தனை தண்மையான இரவுகளில், மென்மையான நிலா தட்டும் அறையில், தலையணையைக் கட்டிப் பிடித்துக் கொண்டு நீங்கள் தெரிந்தும் தெரியாமலும் விம்மியிருக்கிறீர்கள்? அக்கனவு ஆடவன் உங்களைத் திருமணம் செய்து கொள்ளும் நாளைப் பற்றி நினைத்து நினைத்து எத்தனையெத்தனை நீண்ட மணி நேரங்களைக் கழித்திருக்கிறீர்கள்? நீங்கள் முதன் முதலாகக் கணவனுடன் குடித்தனம் வைக்கிற நாளையும், மெல்ல மெல்ல அவ்வீட்டின் நாயகியாலதையும், எத்தனை வருடங்களுக்கு முன்பே நீங்கள் கற்பனையில் சிருஷ்டித்திருக்கிறீர்கள்? நீங்கள் முதலாகப் பெற்ற எனது சிரிப்பு, நடையும், உடல் வடிவும், கொஞ்சு மொழியும், முகவடிவும் எத்தனையோ மாதங்களுக்கு முன்பே நீங்கள் கற்பனையில் சிருஷ்டித்திருக்கிறீர்கள்? நீங்கள் முதலாகப் பெற்ற எனது சிரிப்பும், நடையும், உடல் வடிவும், கொஞ்சுமொழியும், முகவடிவும் எத்தனையோ மாதங்களுக்கு முன்பே நீங்கள் சொல்கிறீர்கள் 'எங்களுக்கு அந்த நினைப்பே உண்டாகலை' யென்று".

இவ்வார்த்தைகளின் தீட்சண்யத்திற்கு முன்னால் அந்தத் தாய் சுருங்கிப்போயிருக்க வேண்டும். இப்படிப்பட்ட உணர்ச்சி பூர்வமான சந்தர்ப்பங்களை சிருஷ்டிப்பதில் ஸ்ரீ கிருஷ்ண பிள்ளைக்கு பிரத்யேகமான ஓர் திறமையே உண்டு. மொத்தம் எட்டுக் கதாபாத்திரங்களே இந்நாடகத்திலுள்ளர். இவர் களெல்லோரும் மிகவும் தேவையானவர்கள். 'பலா பல'த்திலோ, 'அனுஜைன'த்திலோ உள்ள அத்தனை நேரடித் தன்மையும் எளிமையும் 'கன்னிகை'யின் சம்பாஷணையில் கிடையாதாயினும் உணர்ச்சி வெளிப்பாடற்ற சந்தர்ப்பங்கள் இந்நாடகத்தில் எங்கும் காணப்படவில்லை. இரண்டு கதாபாத்திரங்கள் பேசிக்கொண்டிருக்கையிலேயே ஒருவர் தனக்குத்தானே பேசிக் கொள்வது வாழ்க்கையில் நடக்கக் கூடியதுதானெனினும், காண்

பவர்களுக்குப் புரிய வேண்டுமெனில் அதுவும் உரக்கவே பேசப்பட வேண்டும். அதனால் நாடகத்தில் அது இயல்பாகிவிடுகிறது என்ற வகையில், இப்ஸன் பாத்திரங்கள் தானே பேசுவதை முற்றிலும் விலக்குவாராயினார். ஸ்ரீ. கிருஷ்ணபிள்ளையும் இந்நாடகத்தி லிருந்து தனக்குத்தானே பேசுவதைத் தவிர்த்திருக்கிறார். அப்படி ஒரே இழையுள்ள போராட்டங்கள் நிறைந்த, விறுவிறுப்பான, உச்சக்கட்டத்திற்கு மிக விரைவில் நகரும் ஒரு பிரச்னை நாடகத்தைப் படைப்பதில் ஸ்ரீ.கிருஷ்ணபிள்ளை முழு வெற்றியடைந்திருக்கிறார்.

'கன்னிகை'யில் பிரச்னை சமூகமோ, பொருளாதாரமோ அல்ல; உத்தியோகமும், கௌரவமும், பொருளாதாரப் பாதுகாப்பும் ஒரு ஸ்திரீயை முழுமையானவளாக ஆக்குமா என் பதே பிரச்னை. 'ஆக்காது' என்ற முடிவுக்கு அழைத்துச் செல்வதே இந்நாடகம். ஆனால் பாலுணாச்சியை ஆதாரமாகக் கொண்ட ஆவேசமல்ல, மற்றவர்கள் குடும்பமாக, இல்லாமையிலும் நிறைவுடன் இருப்பதைக் காண்கையில் உண் டாகும் அசூயையே, பொறுக்க மாட்டாமையே, தேவகிக் குட்டியை வேலையை விட்டு வேலுகப்பிள்ளையென்ற ப்யூனை கணவன் ஸ் தானத்தில் ஏற்றி அலங்கரிக்கத் தூண்டுகிறது. நாடகாசிரியர் முன்னுரையில் இவ்விஷயத்தைக் கோடி காட்டுகிறார். "தனக்கு இல்லாதது வேறு ஒருவருக்குக் கிடைத்திருப்பதைக் கண்டு வெகு சிலரே மகிழக்கூடும். அத்தகையவர்களின் எண்ணிக்கை பெருகுவதாக. ஆனால் சாமான்யர்களுக்கு அம்மகிழ்ச்சி உண் டாக வேண்டுமென்பதில்லை. அதற்குப் பதில் குரூரமான ஒரு அழிவு சக்தி உருவாகி நாசகரமான தீப்பொறிகள் சிதறிப் பறக்கவே வாய்ப்புள்ளது". இவ்வாக்கியங்களில் உணர்த்தப் படும் அழிவு சக்தியே, சமூகத்தின் கண்ணில் மோசமான, கல்வியறிவிலும், வேலையிலும், பதவியிலுமெல்லாம் தன் னைவிடத் தாழ்ந்த ஒரு புருஷனைக் கணவனாக வரிக்கிற ஒரு செயலுக்குத் தேவகிக் குட்டியை உந்தியது. தன்னை ஒரு கறவைப் பசுவாகக் கருதிவிட்ட மாதாபிதாக்களின் பாலுள்ள எதிர்ப்பும் பழிவாங்குதலும் கூட அச்செயலில் உண்டு. வயது வந்துவிட்டால் ஸ்திரீயை மணம் செய்து கொடுக்காமல், உத்யோகம் புரிய மட்டுமே விடுவது அபகாரம் என்று எச்சரிக்கை இந்நாடகத்தில் அடங்கியிருக்கிறது. அதுவரையிலும் யாரும் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் பாரதியின் வார்த்தைகள் வழியாக நாடகாசிரியன் வெளிப்படுத்துகிற கருத்து சற்று எல்லை மீறியதென்று சொல்லாமல் முடியாது. தமக்கையின் சம்ரட்சணையில் நாளை ஓட்டுகிற பாரதி, கணவனின் வீட்டுக்குக் குடிபோன பிறகு தமக்கைக்கு எழுதிய கடிதத்தில் சொல்லியிருக்கிறாள், "ஒரு ஸ் திரீயின் ஸ்தானம், தனம், ஐச்வர்யம், மோட்சம் இவையெல்லாம் அவளது மணவாழ்க்கையே என்று நான் நம்புகிறேன். ஸ்திரீ ஸ் திரீயாவது, வாழ அருகதை பெறுகிறவளாவது, அவள் ஒரு

மனைவியும், தாயுமாகும்போதுதான்". இத்தனை தூரம் போக வேண்டுமா? போவது ஸ்திரீயை இடுங்கிய கண்களின் வழியாகப் பார்ப்பதின் பலனல்லவா? எதுவாயினும், ஸ்திரீகள் உத்யோகம் பார்ப்பதைத் தடை செய்வது போன்ற மனப்போக்கு இன்றையக் காலத்திற்கு ஏற்றதல்ல.

'உயரும் திரை' என்ற நாடக ஆய்வு நூலின் ஆசிரியருமான ஸ்ரீ.ஸி.ஜெ. தாமஸ் நாடகத்தைப் பற்றிச் சிந்தித்தும் படித்தும் உருவாக்கிய அபிப்பிராயத்தின் வெளிச்சத்தில் எழுதிய ஒரு நாடகமே 'அவன் மீண்டும் வருகிறான்' இப்ஸனின் நாடகத்துணிபிலிருந்து மிகவும் வேறுபட்டதல்ல ஸ்ரீ.தாமஸின் நாடகத் துணிபு. அதீத உணர்ச்சிகளின் ஆட்டக்களமல்ல ; மனப்போராட்டங்களின் விளைவாயுண்டாகும் உணர்வு ஜவாலையின் நாட்டிய அரங்கமே நாடகம், என்று ஸி.ஜெ.நம்பினார். ஆனால் இப்ஸனைப் போல முழுதாகவும் குடும்ப மேடையில் ஒதுங்கி நிற்க அவர் தயாராயில்லை. அடிவேர் குடும்பமேடையில்தான், ஆனால் சில வேர்கள் சமூக, தேசீய அரங்கங்களிலும் ஓடியிருப்பதை நாம் ஸி.ஜெ.யின் நாடகத்தில் காணலாம். 'கன்னிகை' யிலுள்ளதைப் போல அடிப்படையானது என்று சிறப்பாகக் கூற முடியாதெனினும், ஒரு பிரச்னையை ' அவன் மீண்டும் வருகிறான்' என்ற நாடகமும் அறிமுகம் செய்கிறது. தம்பதியர், ஒருவரிடமிருந்து ஒருவர் தூர வசிப்பதே பிரச்னை. வெறும் தாலியால் மட்டும் கட்டி நிறுத்தக் கூடியதல்ல துடிக்கும் யௌவனத்தின் காமதாகம் என்பதையே இந்நாடகம் பறைசாற்றுகிறது. திருமணம் செய்துகொண்ட மனைவியை வீட்டில் விட்டுவிட்டு வெகுதூரத்தில் இருக்கும் கணவன், யுவதியான மனைவி வழி தவறிப் போவதற்கான சூழ்நிலையை உருவாக்குகிறான், பத்தினியல்லவா, காத்திருக்க வேண்டாமா என்றெல்லாம் கேட்கலாமெனினும், இயல்பான உடல் வேட்கை கட்டுப்பாடுகளையெல்லாம் அறுத்தெறியும்; வீணைத் தந்தியில் விரல் பட்டால் சப்தம் எழாதிருக்காது என்று ஸி.ஜெ. இந்நாடகத்தில் காட்டுகிறார். மாத்துக்குட்டி ராணுவத்தினன் அவன் ஸாராம்மாவைத் திருமணம் செய்துகொண்டு மதனிலவின் மயக்கம் தீரும் முன்பே. அவனுக்கு ஊரை விட்டுப் போக வேண்டி வருகிறது. நீண்டு நான்கு வருடங்கள் கடந்த பின்னரே அவன் திரும்பி வருகிறான். அதற்கிடையில் ஸாராம்மா பக்கத்து வீட்டுக்காரனான குஞ்ஞுவாக்கியினால் காப்பவதியாகி விடுகிறாள். கணவன் திரும்பி வரும் நேரத்தில் அன்னியனின் விதையை வயிற்றில்தாங்கி அவனை வரவேற்க சங்கடப்படும் ஸாராம்மா குஞ்ஞுவர்க்கியுடன் சேர்ந்து எங்காவது போய்விடத் தயாராகிவிட்டாள், ஆனால் தனக்கென்று ஒரு வேலையா வருமானமோ இல்லாத குஞ்ஞுவர்க்கி ஸாராம்மாவின் அபிலாஷையை நிறைவேற்றத் தயாராயில்லை, தனது மனைவி அன்னியனால் கர்ப்பமுற்றாள் என்பதையறிந்த மாத்துக்குட்டி

முதலில் வெகுண்ட போதிரும் பிற்பாடு அவளை மன்னித்து விட்டான். சேர்ந்து வாழ்ந்த போதிலும் ஒரு மனைவி என்ற நிலையில் அவளை நேசிக்க முடியாமல் மாயின் மரணமும் தேசீய வாதிகளின் அழைப்பும் அனுகூலமான ஓர் சூழ்நிலையை உருவாக்கிய போது அவன் வீட்டை விட்டுப் போய்விட்டான். புரோகிதம் அங்கீகரிக்கவில்லையாயினும் ஸாராம்மாவும் குஞ்ஞுவர்க்கியும் தம்பதியராக வாழ்கின்றனர்.

எல்லாக் கதாபாத்திரங்களும் நல்லவர்களேயென்பது இந்நாடகத்தின் ஒரு முக்யமான சிறப்பு. தவறு செய்யும் ஸாராம்மாவும் குஞ்ஞுவாக்கியும் கூடக் கெட்டவர்களாக இந்நாடகத்தில் அறிமுகப்படுத்தப் படவில்லை, சில நிமிடங்களின் பலவீனம் அவர்களைத் தவறிழைக்க வைத்து விட்டது. ஒரு சூழ்நிலையில் அது தவறேயல்ல. அதவாது தவறானாலும் கூட அத்தவறிழைக்கும் சூழ்நிலையை உருவாக்கியவர்களுக்குமன் அதில் ஒரு பெரும் பங்குண்டு என்று தோன்றும் வகையிலேயே அமைந்துள்ளது ஸ்ரீ.ஸி.ஜெ. தாமஸின் சம்பவ அமைப்பு "போதும், நிறுத்துங்கள். இனிமேல் நான் என்ன செய்யனும், சாகணுமோ? இப்படிச் சிரிக்க என்ன இருக்கிறது ? நான் தவறு செய்துட்டேன். அதற்கு வேண்டியளவு அனுபவிச்சாயிடிச்சு. இன்னும் என்னைப் போட்டு எதுக்காக மிதிக்கிறீங்க? என்னை விரட்டியடிச்சுடுங்க. இங்கு வச்சுக்கிட்டு ஏன் கொல்லுறீங்க? நான் ஒரு பெண். எனக்கு வாழணும். நாலு வருஷம் யாரும் எதுவும் இல்லாம, நேசிக்கவும் உதவவும் யாருமில்லாம என்னைத் தனியாவிட்டு, பேருக்குக் கல்யாணமானவன்னும் சொல்லி, இப்போ வந்திருக்கீங்க கேக்க". என்றிவ்வாறு தன்னைத் தவற்றுள் கொண்டு சேர்த்த சூழ்நிலையை ஸாராம்மா சுட்டிக் காட்டுகையில் மாத்துக்குட்டி மௌனமாகிப் போவது அத்தவறில் தனக்கொரு பங்குண்டு என்று உணர்வதாலேயே. ஆனால் தான் செய்த தவற்றை எல்லா வகையிலும் சரியென நிறுவும் இயல்புடையவளல்ல ஸாராம்மா என்று அடுத்த பக்கத்திலேயே உள்ள அவளுடைய வார்த்தைகள் தெளிவாக்குகின்றன. அவள் சொல்கிறாள்.

"அப்படிச் சொல்லாதீங்க. நான் தவறு செய்துட்டேன். மன்னிக்கக் கூடாத தவறு. அதற்கான எல்லாத் தண்டனையையும் நான் அனுபவிச்சிக்கிறேன். நான் ஒரு சுகத்தையும் விரும்பலை, ஆனாலும் ஒரு வேலைக்காரியைப் போல ..... "

இவ்வார்த்தைகளைக் கேட்கையில், படிப்பவர்களுக்கு ஸாராம்மாவிடம் மிகுந்த பரிதாபமே உண்டாகிறது. அடக்க முடியாத காம இச்சையால் பரபுருஷனுடன் தன்னிச்சையாக ஸமஸர்க்கம் நடத்திய தன்போக்குக்காரியான ஒரு ஸ்திரீயாக அல்ல, ஒரு நிமிடத்தின் பலவீனத்தால் மற்றொரு ஆடவனிடம் பணிந்துவிட்ட ஒரு சாது ஸ்திரீயாகவே ஸாராம்மாலை ஸி.ஜெ. சித்தரித்திருக்கிறார். ஸாராம்மாவின் தலையிரை அள்ளிப் பிடித்துத் தண்டனையளிக்கும் வெறிகொண்ட புருஷகை ஒரு

நிமிடம் நம் முன்னால் விளங்கிய மாத்துக்குட்டி பிற்பாடு ஸாராம்மாவுக்கு மன்னிப்பளித்துக் காக்கும் கடவுளாக விளங்குவதைக் காண்கையில் அக்கதாபாத்திரமும் நமது இரக்கத்தை அள்ளிக் கொள்கிறது. ஒவ்வொரு படைப்பிலுமே இருளையும் ஒளியையும் இப்படி சம அளவு காட்ட பெரும்பாலான நாடகாசிரியர்களுக்கு இயல்வதில்லை, எல்லாக் கதா பாத்திரங்களையும் இந்த வகையிலேயே ஸி.ஜெ.சித்தரித்திருக்கிறார். மாத்துக்குட்டியின் தாயார், குஞ்ஞுவர்க்கி ஆகியவர்களெல்லாம் இப்படிபட்டவர்களே. எதற்காக கர்த்திரின் எளிய அடிமையென்று தன்னைக் கூறிக் கொள்ளும் ஒரு உபதேசியார் கூடி குஞ்ஞுவாக்கியுடையவும் ஸாராம்மாவுடையவும் தாம்பத்தியத்தை அங்கீகரிக்காமல் இருளின் போதகராகி விடுகிறார் என்று தொனிக்கிறார் ஸி.ஜெ. ஆஸ்கார் வைல்ஷின் 'ஸலோமி' என்று நாடகத்தின் ஸ்தாபக யோஹனானை நினைவுறுத்தும் இக்கதாபாத்திரம் சுவிசேஷங்களிலிருந்து உள்ள சந்தர்ப்பத்திற்கேற்ற மொழிகளால் ரசிகர்களின் விசேஷ கவனத்தைக் கவர்கிறது.

'கன்னிகை' யில் தேவகிக் குட்டி என்ற ஒரு கதாபாத்திரத்தின் உள்ளப் போராட்டத்திற்கே இடமிருக்கிறது. 'அவன் மீண்டும் வருகிறான்' என்று நாடகத்திலோவென்றால் இப்போராட்டம் அநேகமாக எல்லாக் கதாபாத்திரங்களிலும் பரவியிருக்கிறது என்பது ஒரு சிறப்பாகும். மாத்துக்குட்டியும் ஸாராம்மாவும் குஞ்ஞுவாக்கியும் தாயாரும் எல்லோரும் உள்ளப் போராட்டத்தின் நடுவிலேயே வாழ்கின்றனர். நாடகத்தைமிகவும் உயிர்த்துடிப்பு உடையதாகக் இந்த முறை உதவியிருக்கிறது என் பதில் சந்தேகமில்லை "சாகாத புழுவும், அணையாத தீயும் நிறைந்த நித்யநரகத்துள் தள்ளப் படுவார்கள் " என்ற உபதேசியாரின் சுவிசேஷ வார்த்தையைக் கேட்பது முதல் – அல்லது ஒருவேளை தான் கர்ப்பிணியாயிருக்கிறோம் என்று அறிந்த நிமிடத்திலிருந்தே–வாழ வேண்டுமா, சாக வேண்டுமா என்ற போராட்டச் சிந்தனைகளுக்கு இரையாகி வாழும் ஸாராம்மா இந்த உயிர்த் துடிட்பை மேலும் அர்த்தமுள்ளதாக்குகிறாள், அவ்வளவு தான்.

இப்ஸனுடையும் கிருஷ்ணபிள்ளையுடையவும் வழித்தோன் றலாக 'கறவையற்ற பசு' வையும் கொண்டு கெ.டி. முகம்மது நாடக உலகிற்குள் பிரவேசித்தார். 1953–ல் கோழிக்கோட்டில் நடத்தப்பட்ட முதல் நாடக விழாவில் தம் நாடகத்திற்கு முதற்பரிசு பெற்ற நாடகத்தின் ஆசிரியரென்ற முறையில் கலனத்திற்குரியவரான கெ.டி. தொடர்ந்து பழி மாறி சஞ்சரிக்கும் தையாயத்தைப் புலப்படுத்தினார். மலையாள நாடக அரங்கத்தில் சோதனைகளின் மூலகர்த்தாவாக அவர் பிற்காலத்தில் அறிஸ்பட்டார். இன்றும் அந்த சோதனையை அவர் தொடர்கிறார். ஆனால் 'இது உலகம்' என்ற நாடகம் ஒரு சோதனை என்று சொல்ல முடியாது. 'கறவையற்ற பசு' என்ற

முதல் நாடகத்திலிருந்து ஒரு திருப்பமே 'இது உலகம்' என்பது ஒரு உண்மை ஆனால் இந்நாடகத்தின் கலைரநுட்பம் ஸ்ரீ.வி.டி.. பட்டதரிப்பாடு எழுதிய "அடுக்களையிலிருந்து அரங்கத்திற்கு' என்ற சமூக நகைச்சுவை நாடகத்தினுடையது தான். நம் பூதிரி சமூகத்தின் அநாசாரங்களுக்கெதிராக வி.டி. தனது வாளையுளர்த்தினாரென்றால், முஸ்லிம் சமூகத்தின் குருட்டு நம்பிக்கைகளுக்கெதிராக கெ.டி. தனது வாளை ஓங்குகிறார், என்பது தான் வேறுபாடு தலைமயிரை ஒட்ட மழிக்க வேண்டும். இல்லாவிட்டால் முஸ்லிமல்ல, நோன்பு நோற்கவில்லையென்றால், பாவம், முஸ்லிம்கள் நாடகத்தில் நடிக்கக் கூடாது முஸ்லிம் பெண்கள் தத்தம் வீட்டின் வெளியேயுள்ள உலகத்தைக் காணக் கூடாது. அவர்கள் சினிமாப் பார்க்கக் கூடாது. ஸாரி உடுத்தக் கூடாது. துணியைக் கணுக்காலுக்கு மேலே மட்டுமே உடுத்தலாம்—என்றிவ்வாறான குருட்டு நம்பிக்கைகள் இவற்றைப் போற்றி வளர்க்கும் முதலாளி; அவற்றை சமூகத்திலிருந்து அடித்து விரட்ட சகல சக்திகளையும் உபயோகிக்கும் காலிது என்ற இளைஞன்—இவர்களுடைய மோதலே இந்நாடகத்தின் முக்கிய விஷயம் இம் மோதலில் குரட்டு நம்பிக்கைகளின் ஆதரவாளர் மதால்லியடைகிறார். புதிய தலைமுறை தடைகளைத் தட்டி விலக்கி முன்னேறுகிறது. முதலாளித்துவம் இந்நாடகத்தின் பிரச்னையாகவில்லையென்றும் ஆனால் முதலாளியின் எழுதுகிறார். தங்களுடைய லஞ்சனைகள், வாழும் முயற்சியில் செய்துவிடும் பல துர்ச்செயல்கள், ஆகியவற்றுக்கான பொறுப்பிலிருந்து மதத்தின் பெயரால் தப்பிக்கப் பார்க்கும் முஸ்லிம்களின் "சட்டை உரிப்பே" இந்நாடகம்.

வாழ்க்கையின் துடிக்கும் ஓர் உறவை நம் முன்னால் எடுத்து வைக்கிறார் ஸ்ரீ.கெ.டி. வாழ்க்கை நிகழ்ச்சிகளில் மிகவும் தேவையான ஒழுங்குகளை அவர் செய்வதோடு சரி மனப்போராட்டம் இந்நாடகத்தின் ஒரு கதாபாத்திரத்திற்கும் இல்லை. சம்பாஷணைகளை செதுக்கி அவற்றுக்குப் பளபளப்பூட்டவோ, குதாக்கமான பரஸ்பரத் தொடர்பை அவற்றிற்குக் கொடுக்கவோ நாடகாசிரியர் முயற்சி செய்யவல்லை ஏறநாடன் மாப்பிள் மலையாளம் அதனுடைய எல்லா இலட்சணங்களுடனும் பளபளப்புடனும் விளங்குவதை நாம் இந்நாடகத்தினூடே காணலாம். மாப்பிள மலையாளம் முழுமையாக பயன்படுத்தப்பட்டிருப்பது முதன் முதலாக 'இது உலகம்' என்ற நூலில் தான். இடைசேரியின் கூட்டுக்கிருஷியிலும்' செருகாடின் 'நம்மளொன்னு' விலும் மாப்பிள கதாபாத்திரங்கள் உள்ளனரெனினும், அவர்களது சம்பாஷணைகள் முழுவதும் மாப்பிள் மலையாளத்தில் இல்லை. நாடக ரசிகர்களே சந்தித்தவரையிலும் ஒரு புதுமையாகத்தானிருந்தது இம்மாப்பிள மலையாளம்.

மேடையேற்றும் முக்கிய உத்தேசத்துடன் ஏழுதப்பட்டது இந்நாடகம். அதன் விளைவாக ஒரு சீரான போக்கு இந்நாடகத்திலிருக்கிறது. ஸ்ரீ.என். கிருஷ்ணபிள்ளை இவ்விஷயத்தைக் குறித்து இவ்வாறு அபிப்பிராயப் படுகிறார். "பிரச்னைக்குப் பிரச்னை இருக்கிறது. கருத்து வெளிப்பாடென்றால் அதுவும் இருக்கிறது. கனம் நிறைந்த கதை வேண்டுமென்றால் அதற்கும் குறைவில்லை. ஆனால் நாடகத்தின் பொதுவான வெளிப்பாட்டுத்தன்மையில் கேலிக் கூத்தினுடையவும் நகைச்சுவை நாடகத்தினுரைடயவும் பண்புகளே நிறைந்திருக்கின்றன. இந்த விசித்திரமான கலவையே கெ.டி. முகம்மதுவின் 'இது உலகம்' என்ற படைப்பில் வெளிப்படுகிறது" – கைரளியுடெ கத.

பார்வையாளர்களை நடுவில் முட்டாளாக்குவது என்பதில் கெ.டி.க்கு ஒரு சுவாரஸ்யம். 'நான் பயப்படுகிறேன்' 'சிவந்த கடிகாரம்' என்ற நாடகங்களில் பூர்ண மலர்ச்சி அடைந்திருந்தது இந்தப் போக்கு. 'இது உலகம்' என்னும் நாடகத்தில் காலிதுக்கும் பாத்தேயிக்கும் நடுவிலுண்பாகும் சம்பாஷணைகளைக் கேட்கும் போது அவர்கள் திருமணம் செய்து கொண்டு விட்டனர் என்றும், கணவனாகிவிட்ட காலிது மனைவியை அடக்கி வைக்க முயற்சிப்பவனாக மாறிப்போய்விட்டான் என்றும் இது ஆச்சரியமல்லவோ என்றும் நமக்குத் தோன்றிவிடும். சிறிது கழியும் போதுதான் காலிதும் பாத்தேயியும் சேர்ந்து நாடக ரிஹர்ஸல் செய்து கொண்டிருந்தனர் என்று நமக்குப் புரிகிறது. நாம் நாடகத்தின் இரண்டாவது, மூன்றாவது காட்சிகள் கனவு என்று கடைசியிலேயே நமக்குத் தெரிவித்து நம்மை முட்டாள்களாக்குவதும், 'சிவந்த கடிகாரத்தில் இறந்துபோய்விட்ட கதாபாத்திரம் திரும்பி வருகிறதோ என்ற கேள்விளை எழுப்ப நம்மைத் தூண்டுமாறு லீலா என்ற கதாபாத்திரத்தின் நினைவுகளை அறிமுகப்படுத்துவதும் இதே வகையைச் சேர்ந்தவை. பார்வையாளர்களைக் குழப்பத்திலாழ்த்தி அக்குழப்பத்தைத் தனது கலையை ரசிக்க வைப்பதற்குச் சாதகமாக்கிக் கொள்வது குழந்தைத் தனமானதென்று சிலருக்காவது தோன்றும். நாடகத்தில் ஒளிந்து ஆடுவதை விட வெளிப்படையான ஆட்டத்துக்கே முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். ஆனாலும் ஒரு சிரிப்பை உண்டாக்கும் சந்தர்ப்பம் என்ற வகையில் கெ.டி.இதைக் கொண்டாடத் தான் கெட்கிறார் என்றே தோன்றுகிறது.

நாடமாடுவது பாபமென்று நம்பிவிட்ட ஒரு சமூகத்தை நாடகத்திலேயே சிறைப்பிடித்ததோடு தொடர்ந்து ஏராளமான நாடகாசிரியர்களை புதிய பாயில் செல்லத் தூண்டியவர் கெ.டி.என்பது ஒரு சாதாரண விஷயமில்லை. அதற்குக் கருவியாக விளங்கிய முதல் படைப்பு என்ற வகையில் 'இது உலகம்' என்ற நாடகத்திற்கு சரித்திரபூர்வமான முக்யத்துவம் உண்டு. ஆனால் கெ.டி.யின் நாடகங்கள் எல்லாவற்றையும்

எடுத்துப் பரிசோதிக்கையில் 'இது உலகம்' என்ற நாடகம் அவ்வளவு அதிகமான முக்யத்துவம் வாய்ந்ததா என்பது சந்தேகமே.

ஆரம்பத்தில் குறிப்பிட்டது போல, கன்னிகை, அவன் மீண்டும் வருகிறான், இது உலகம் என்ற இம் மூன்று நாடகங்களும் ரியலிஸத்தின் மண்ணில் தலையுயர்த்தி நிற்கும் விருட்கங்கள். வைரம் பாய்ந்திருப்பதைப் பார்க்கையில் இவை ஒரே மாதிரியானவையான போதிலும், அளிக்கிற பழங்களின் சுவையில் வேறுபாடுகளுண்டு. இவற்றின் வைரமும் சுவையும் சேர்ந்து அறிய ரசிகர்களுக்கு வசதியளித்ததற்காக நேஷனல் புக் டிரஸ்ட்டுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு இந்த நாடகத் தொகுப்பை நான் மகிழ்ச்சியுடன் அறிமுகப்படுத்துகிறேன்.

*பேராசிரியர்*

**எ.பி.பி. நம்பூதிரி**

# கன்னிகை

## — என். கிருஷ்ணபிள்ளை —

### முன்னுரை

பிறக்கையிலேயே ஆரம்பிக்கும் ஈடுபாடுகளும், பிறந்தபின் உண்டாகும் சூழ்நிலைகளும் ஒன்று சேர்ந்து, ஆழமான சில ஆசைகளை, அழிக்க முடியாத சில வாழ்க்கை இலட்சியங்களை உருவாக்கிக் கொள்ளும் மனிதர்கள் இருக்கிறார்கள். சில சமயம் அவை மங்கியணைந்து புகைந்து கொண்டிருக்கும். மற்ற சில வேளைகளில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கும். அமைதியாகவேயிருக்கும் சில நேரங்களின் செயல்கள், அட்டகாசமாக இருக்கும் பிறிதொரு வேளையில். ஆனால் அவை செயல்பட்டுக் கொண்டேயிருக்கும்; செயல்படவும் வைக்கும். ஆடுவதுண்டு; ஆட்டி வைப்பதுவுமுண்டு. அறிந்தோ அறியாமலோ அவை வாழ்க்கையில் எப்படியாவது தம் ஆதிக்கத்தை வெளிப்படுத்தும்.

தெரிந்தோ தெரியாமலோ, பல வேளைகளிலும் சமுதாயம் அந்த அபிலாஷைகளுக்கு வேலியிட நேரிடும். சமூக வாழ்க்கையின் பல சிலந்தி வலைகளில் சில குறுக்கே நின்று அவற்றை எதிர்த்து நிற்கவும் நேரிடலாம். பாரம்பரியமான சமுதாய விதிகளைத் தட்டிப் பிளந்து முன்னேறத் தைரியமில்லாத சாமான்யர்களின் வாழ்வு அப்படி நசித்து அடங்கிப் போன கனவுகளின் மயானமாகப் பரிணமிக்கிறது. ஏமாற்றம் நிறைந்த இருள் மேடையாக அம்மனிதன் மாறிப்போகிறான்.

ஒவ்வொரு நிமிடமும் போற்றிவளர்க்கும் ஆசைகள் வெந்து எரிந்து சாம்பலாகையில், அவ்வாசைகளை நிறைவேற்றிக் கொண்டிருப்போரை நோக்கி மனிதன் பெருமூச்சு விடுவது வழக்கம்தான். பெருமூச்சு சிலசமயம் கோபமாகவும், கோபம்

பொறாமையாகவும், பொறாமை அழிக்கும் வெறியாகவும் உருவெடுப்பது இயல்பே. தனக்குக் கிட்டாதது இன்னொருவருக்குக் கிடைத்திருப்பதைக் கண்டு சந்தோஷப் படுபவர்கள் வெகு ஆபூர்வம். அப் புண்ணியவான்களின் எண்ணிக்கை பெருகட்டும். ஆனால் சாமான்யர்களுக்கு அத்தகைய சந்தோஷம் உண்டாக வேண்டுமென்பதில்லை. அதற்குப் பதிலாக குரூரமான ஒரு அழிவுச் சக்தி உருவாகி, நாசமிகு சில தீப்பொறிகள் சிதறிப் பறக்கவே வாய்ப்புள்ளது. பலவீனமான இந்த நிகழ்வின் நேரிடல் அடக்கப் படுவதில்லை.

ஏமாற்றங்களிலிருந்து விலகி நிற்கக் கையாளும் இந்தத் தீமை மிக்க பாதையும் பலனற்றதாகி முடிந்து போனால் அந்தக் கதை என்னவாகும்? வேறொன்றுமில்லை. சகல சமுதாய நியதிகளையும் மீறி, வாழ்க்கையைக் காப்பாற்றிக் கொள்ளும் பகீரதப் பிரயத்தனம். கற்சுவர்களை இடித்தெறிவர், இரும்புக் கம்பிகளை வளைத்தொடிப்பர், அந்நிலை வந்துவிட்டால். நியதிகளைப் பின்பற்றுவதற்காகத் தம் சுகங்களை விற்றுத் தொலைத்த முட்டாள்தனத்தை நினைத்து நியதி மீறுவதைக் கடமையாக்கிக் கொள்வதையே அந்த ஜீவன் பிறகு செய்யும்.

கோபத்தால் குதிக்கும் சமூகம் அந்த நபரைப் பைத்தியமென முடிவு கட்டும். அம்முடிவுக்கெல்லாம் அப்பாற்போய்விட்ட அந்நபர் அதையே புத்திசாலித்தனமென்று கொண்டாடி முன்னேறுவார்.

இந்நாடகத்தின் உள்ளடக்கம் இவ்வளவே. நாடகத்தின் 'நாடகமும்' மற்ற அங்கங்களும் கண்டு திருப்தியுறவோ அதிருப்தியுறவோ தயாராயிருக்கும் நல்லிதயத்தோரை அன்புடன் அழைக்கிறேன்.

திருவனந்தபுரம்
13.11.1943

— ஆசிரியர்

## கதாபாத்திரங்கள்

1. **கிருஷ்ண பணிக்கர்** — சமூகத்தின் உயர்நிலைகளை அடைய முயற்சிசெய்யும் ஒரு குடும்பஸ்தர். இலட்சிய நிறைவேற்றத்திற்கு பண சம்பாத்தியம் ஒரு வழியெனக் கருதுகிறார். வயது அறுபத்து மூன்று.

2. **மாதவியம்மா** — கணவனின் குறிக்கோள்களையே அநேகமாகக் கொண்டிருக்கும் ஒரு அறுபது வயது மனைவி.

3. **தேவகிக்குட்டி** — மணமாகாத மூத்த மகள். வேலையிலிருப்பவள். மனைவி ஸ்தானத்தையும், தாய்மை யையும், வீட்டுத் தலைவி ஸ்தானத்தையும் கனவு கண்டே கழிக்கும் முப்பத்தைந்து வயது யுவதி.

4. **பாரதி** — இளைய மகள். ஒரு மனைவி. ஒரு தாய். இருபத்தியாறு வயது.

5. **ராஜசேகரன்** — மகன். நாகரிக ஆபாசங்களை இறுகப் பற்றிக் கொண்டு உதவாக்கரையாகத் திரியும் இளைஞன். முப்பது வயது.

6. **செல்லப்பன் பிள்ளை** — பாரதியின் கணவன். இலட்சிய வாதியும், பொறுப்புணர்ந்தவனுமாக வாழ்ந்து தோல்வியடையும் சாது. முப்பது வயது.

7. **ஜானகி** — ஏழையான ஒரு பெண். மாதவி சதனத்தின் வேலைக்காரி. இருபத்தைந்து வயது.

8. **வேலுப்பிள்ளை** — தேவகியின் சேவகன். இளமையும், ஆரோக்கியமும் நிறைந்தவன். வயது முப்பதுக்கு மேல்.

**இடம் :-** திருவனந்த புரத்தில் மாதவி சதனம்

**காலம் :-** ஒரு மாதம்

# காட்சி ஒன்று

*(திருவனந்தபுரத்தில் நவீனமும் அழகும் பொருந்திய மாதவி சதனம். பற்பல விதங்களில் அலங்கரிக்கப்பட்ட ஓர் ஹால். வேலைப்பாடுகள் நிறைந்த இருக்கைகள், மேஜை, கட்டில் ஆகியவற்றைத் தவிர, சில நவீன ஓவியங்களும் ஒரு பெரிய கண்ணாடியும் அங்கே இருக்கின்றன.*

*நேரம் இரவு எட்டு மணி. கிருஷ்ண பணிக்கரும் மாதவியம்மையும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.*

*அண்மைக்காலத்தில் பல துன்பங்களையும் அனுபவித்திருப்பதைப் பறைசாற்றும் பணிக்கரின் உடல் இவ்வயதான காலத்தில் கூட இரும்பைப் போலத் திடமானது. வழக்கத்திற்கதிகமாகக் குழி விழுந்த கன்னங்களும், வெறித்திருந்து அவ்வப்போது துழாவும் பார்வையும் புருவத்தில் கூடக் கொஞ்சம் நுழைந்து விட்டிருக்கும் நரையும் முதலிலேயே நம்மைக் கவரும். ஒரு வேஷ்டியும் துண்டுமே அணிந்திருக்கிறார்.*

*மாதவியம்மை ஒரு ஊளைச் சதைக்காரி. வாழ்க்கையின் மீது அடக்க முடியாத பிடிப்பு அந்த வயதான தம்பதியின் இயல்பான சுபாவம் என்று முகபாவம் வெளிப்படுத்துகிறது. தான் ஒரு கிழவியென்று மாதவியம்மை ஒத்துக் கொள்வதில்லை. அந்த வேளையிலும் அசாதாரணமாக உடைகள் உடுத்திருக்கிறள்.*

**மாதவி** : *நாம எதுக்காக அவங்க சொல்றதப் பெரிசா எடுத்துக்கணும்? எவ்வளவு வருஷமாச்சு பேசத் தொடங்கி! அதுனால என்ன கெடைச்சுது அவங்களுக்கு?*

**கிருஷ்ண** : *கெடைச்சாலும் கெடைக்காட்டாலும் அவங்க சொல்லிட்டேயிருப்பாங்க.*

**மாதவி** : *நாக்கு தழும்பெடுக்கற வரை சொல்வாங்க. வேறென்ன?*

**கிருஷ்ண**: *என்ன செய்யறது? அவங்க நாக்கு தழும்பெடுக்கறதில்லை. அது இரும்பால பண்ணினது.*

**மாதவி** : *சே, எவ்வளவு பொறாமை பிடிச்சவங்க. நாம அவங்களுக்கு ஒரு கெடுதலும் செய்யறதில்லை. ஒருத்தனக் கூடச் சங்கடப் படுத்தறதில்லெ.*

**கிருஷ்ண** : ஆனா நாம சுகமா வாழ்ந்துக்கிட்டுருக்கோ மில்லே? அதைவிட வேற காரணம் வேணுமா ?

**மாதவி :** அந்தக் கதய விடுங்க. மிஞ்சிப்போனா நாம சாகறது வரை இப்பிடி ஓலமிடுவாங்க.

**கிருஷ்ண** : (விரக்தியுடன்) அப்புறம் பயப்படுவாங்களோ? அவங்க மறந்து போயிடுவாங்களோ ?

**மாதவி** : அவங்க அப்படி எவ்வளவு பயந்திருக்காங்க, எத்தனை மறந்து போய் விட்டிருக்காங்க ? ஏராளம் ... ஏராளம் ..

**கிருஷ்ண** : கடவுளே, இதுவும் அவற்றில் ஒன்றாகிப் போகக் கூடாதா.

**மாதவி** : ஆனாலும் ஆகாட்டாலும் நாம இப்படியே முன் னேறுவோம். அந்த சாஸ்தாமங்கலத்துக் கட்டிடத்தின் விஷயம் என்னாச்சு ?

**கிருஷ்ண** : வெள்ளிக் கிழமை பத்திரம் எழுதணும்.

**மாதவி** : மூவாயிரத்துக்கே ஒப்புக் கொண்டாச்சா ?

**கிருஷ்ண** : என்ன செய்றது ? அவன் மூவாயிரத்தைந்நூறு வேணுமுன்னு ஒரே பிடியாயிருந்தான். நான் அதை ஒத்துக்கிட்டேன். ஆனால் யாருடைய கணக்குப்படியும் எந்தவொரு நஷ்டமுமில்லை.

**மாதவி** : அன்றைக்கு அந்தப் பப்புநாயர் சொன்ன நிலங்கள் இருக்கே. அதை விட்டுரக் கூடாது. எவ்வளவு ரூபாயானாலும் எழுதிவாங்கிடணும். விளைநிலமாக்கும். நல்ல விளைச்சலு முண்டு.

**கிருஷ்ண** : (உற்சாகத்துடனும் கர்வத்துடனும்) உம்... அதை விட்டுடுவேனா ? என் உயிர் இருக்கும்போது வாங்கிடுவேன். ஆனால் விலை ரொம்ப அதிகம். ஆனாலும் நம்மிடம் தேவகிக் குட்டியின் பணம் இருக்கே.

**மாதவி** : இல்லையில்லை, அந்தப் பணத்தில் நாம திருவனந்தபுரத்திலேயே சொத்து வாங்க வேண்டும். நிலம் வாங்க நான் தருகிறேன் பணம்.

**கிருஷ்ண** : எப்படியானாலும் சரிதான். இந்த ஓலமிடுறவங்களுக்கு பதிலுக்குப் பதில் கேட்க வேண்டியது இப்படித்தான்.

**மாதவி** : அவங்களெல்லாம் ஒரு நாள் வெறும் கஞ்சிக்கு இந்த வாசல்ல வந்து கெஞ்சணும்.

**கிருஷ்ண** : கடவுள் விருப்பமிருந்தா என் தேவகிக்குட்டி போதும் அதையெல்லாம் சாதிக்க.

**மாதவி** : கடவுள் கருணையிருக்காதோ? கருணையில்லாமலா நினைத்துப் பார்த்திராத இந்தப் பதவி உயர்வு கிடைத்தது? இப்போ நூற்றைம்பதிலிருந்து முன்னூறாகியிருக்கு. நாளை அது அறுநூறாகாதென்று யார் கண்டார்கள் ?

**கிருஷ்ண** : அன்றைக்கு இந்தத் திருவனந்தபுரத்தின் கால் பாகமாவது நம்மகையில்.

**மாதவி** : அன்றைக்கு இந்தப் பயலுகள் நம்மைப் பூப்போட்டு பூஜை செய்வாங்க.

**கிருஷ்ண** : நமக்குப் பாடம் கற்பிக்க நினைச்சவங்களுக்கு நாம பாடம் கற்றுத்தரணும்.

**மாதவி** : ஆனா ஒரு விஷயம். இன்னும் கொஞ்ச காலத்துக்கு அவங்களோட நாம சண்டை போடக் கூடாது. ஒவ்வொரு தேங்காய்த் துண்டு எறிந்துகொண்டே இருக்கணும்.

**கிருஷ்ண** : சரிதான். ரொம்ப சரி. தேவகிக் குட்டியின் பிறந்த நாளுக்கு இவங்களையெல்லாம் கூப்பிட்டு ஒரு விருந்து வைத்தாலென்ன ?

**மாதவி** : நான் திரும்பவும் யோசிக்கிறேன். எதற்காக இந்த நன்றி கெட்டவங்களுக்குச் சாப்பாடு போடணும்னு.

**கிருஷ்ண** : சே, சே, அப்படியில்லை. காரியங்களுக்கெல்லாம் ஒரு நயம் வேண்டாமா..? இவங்களெல்லாம் நேர் வழியில் போனால் பிடி கொடுப்பவர்களில்லை,

**மாதவி** : அப்படியானால் அந்த மாதிரியே நடக்கட்டும்.

**கிருஷ்ண** : எனக்கு ஒரே ஒரு பயந்தான். தேவகிக் குட்டிக்கு அதெல்லாம் பிடிக்காது. அவளுக்கென்னவோ கொஞ்ச நாட்களாக ஒரு பெரிய வாட்டம்... முந்தா நாள் அந்தப் பதவி உயர்வின் ஆர்டர் கிடைத்தும் ....

**மாதவி** : அவளுடைய முகம் வாடியிருந்தது.

**கிருஷ்ண** : அவள் ஒரு வார்த்தை கூடப் பேசலை.

**மாதவி** : நம் முன்னாலிருந்து போய்விட்டாள்.

**கிருஷ்ண** : எனக்கொரு சந்தேகம். இந்த ஊராரின் மேளதாளமெல்லாம் அவள் காதில் விழுந்திருக்குமோ ?

**மாதவி**: சே, இருக்காது. அவள் அப்படி யாரோடும் பழகுவதில்லை. ரொம்ப நெருங்கின சிநேகிதிகள் இருக்காங்களே, அவங்களோடு கூட அத்தனை அதிகமாப் பேசறதில்லை.

**கிருஷ்ண** : ஒரு வேளை நம்ம ஜானுவுக்குத் தெரிந்திருக்கும் தேவகிக் குட்டியின் வாட்டத்துக்குக் காரணம். என்னவானாலும்

எனக்கு அது தெரிந்தாகணும். அவள் ரொம்ப நாளாக என் பக்கத்தில் வருவதும் பேசுவதுமில்லை.

**மாதவி** : என் கிட்ட மட்டும் வருகிறாளா என்ன? ஆனால் இதையெல்லாம் பாத்தா. அவள் நம்மைப் போலவா? ஒரு உத்யோகஸ்தையில்லையா? கொஞ்சமாவது அந்த மதிப்பும் கௌரவமும் இருக்க வேண்டாமா ?

**கிருஷ்ண** : அது சரி. ஆனாலும் அந்த ஜானுவக் கூப்பிட்டுக் கொஞ்சம் கேட்டுப் பார்க்கலாம்.

**மாதவி** : ஜானூ, ஜானூ! (ஜானு நுழைகிறாள். நன்றாக வேலை செய்து காட்டமாகிப் போன உடம்பு. சாதாரண வேலைக்காரியின் வேஷம். ஒரு திருப்தி நிறைந்த பாவம் முகத்தில் தெரிகிறது).

**மாதவி** : டீ, ஜானு, நீ தேவகிக் குட்டியின் பெரிய சிநேகிதியும் அதுவும் இதுவுமில்லே? அவளுக்கென்ன இப்பக் கொஞ்ச நாளா ஒரு வாட்டமும் துக்கமும் எல்லாம் ?

**ஜானு** : எனக்குத் தெரியாது பெரியம்மா. அதோடு மூத்த சின்னம்மா அதையெல்லாம் என்கிட்ட சொல்லிட்டிருக்காங்களா? நல்லாருக்கே.

**கிருஷ்ண** : ஆனாலும் ஒனக்குத் தெரியாமப் போகுமா? நீ கெட்டிக்காரியில்லையா? சொல்லாட்டாலும் தெரிந்து கொண்டு விடுவாய்.

**ஜானு** : எனக்கென்ன தெரியும் சாமி. மூத்த சின்னம்மா எப்பவும் பெருமூச்சு விட்டுக் கொண்டேயிருக்காங்க, ராத்திரியில பாருங்க, நான் பக்கத்துலதானே படுத்துக்கிறேன், சில சமயம் நான் பயந்து நடுங்கிப் போவேன் சின்னம்மா அப்படி விம்மி அழுவறதக் கேட்டு. நான் கேட்டா ஒருவார்த்தை கூடச் சொல்றதில்லை.

**மாதவி** : தேவகிக் குட்டி பாரதிகிட்ட இதப் பற்றி ஏதானும் சொல்றதக் கேட்டியா ?

**ஜானு** : சரியாப் போச்சு. முன்னாலெல்லாம் தோழிகளைப் போல இருந்தாலும் இப்ப அப்படியில்லை. இப்ப மூத்த சின்னம்மா தனியாத்தான் இருக்கறது. எப்பாவது நான் கூட இருப்பேன்.

**கிருஷ்ண** : அக்காவும் தங்கையும் என்னத்துக்காவது சண்டை போட்டுக்கிட்டிருக்காங்களோ என்னவோ.

**மாதவி** : அந்த மண்டு பாரதிப் பொண்ணுக்கு ஏதாவது அறிவுண்டா ? அவள் ஏதாவது மூக்கை நீட்டிச் சொன்னாளோ என்னவோ ?

**ஜானு** : *அதொண்ணுமில்லை, பாவம், அந்தச் சின்னம்மாவும், செல்லப்பன் பிள்ளையவங்களும் குழந்தையுமா எப்பவும் அவங்க அறைக்குள்ளேயே இருக்காங்க. ஏதானும் பேசிக்கிட்டாத்தானே சண்டை போடறதுக்கு ?*

**கிருஷ்ண** : *ஆமாமாம். அவள் எப்பவும் அவளுடைய குழந்தைக்கு விளையாட்டுக் காட்டிக்கிட்டும் அந்த மடையன் செல்லப்பன் பிள்ளையுடைய பேச்சுக்களைக் கேட்டுக்கிட்டும் இருப்பாள் .*

**மாதவி** : *ஒரு வேளை அவள் போய் முன்போல பேசாததுனால அக்காவுக்கு வாட்டம் இருக்கலாம்.*

**ஜானு** : *எனக்கு அப்படியொண்ணும் தோணலை அம்மா, இந்த மனிதர்கள், மனிதர்களென்று சொல்கிற பிராணிகள் இருக்காங்களே அம்மா, அவங்களுக்குப் பொறாமை தாங்கலை. இந்த சம்பளம், யோக்யதை, நிலைமையெல்லாம் பார்த்து ஏதோ சூன்யமோ, கைவிஷமோ ஏதாவது செய்திருப்பாங்களோ என்னவோ ?*

**மாதவி** : *நீ தான் புத்திசாலி. சரியான விஷயந்தான். அப்படி நடக்க ரொம்ப வாய்ப்பிருக்கு.*

**கிருஷ்ண** : *ஆ, அப்படிச் சொல்லு. அதுதான் காரணம். அதனாலென்ன, பரவாயில்லை. எவ்வளவு பணம் செலவழிந்தாலும் முதல்தரமான மந்திரவாதம் நடத்திடலாம்.*

**ஜானு** : *(மகிழ்ச்சியுடன்) அய்யோ, அப்படியே செய்யுங்கம்மா, சீக்கிரமாச் செய்யணும். ஒடம்பு கெட்டுப் போயிடும். எப்படி எரியும் தெரியுமா இந்த சூன்யமும் அதுவும் இதுவும்?*

**மாதவி** : *எல்லாத்தயும் சரிப்படுத்திடலாம். நீ போ (ஜானு போகிறாள். ராஜ சேகரன் பிரவேசிக்கிறான். ஆர்ப்பாட்டமான வேஷம். ஒரு பச்சை நாகரிகமானவனின் இலட்சணம். நடையிலும், பார்வையிலும், பாவத்திலும் ஒரு வெறுக்கத்தக்க விஷமத்தனமும், உதவாக்கரைத் தனமும் வெளிப்படையாகத் தெரிகின்றன கோபாவேசனாக வந்திருக்கிறான்)*

**கிருஷ்ண** : *என்ன, ராஜா, ரொம்ப கோபமாயிருக்கிறே ?*

**ராஜ** : *என் கோபத்தப் பத்தித்தானே அப்பாவுக்குக் குறை ?*

**கிருஷ்ண** : *சொல்லு,ஒனக்கென்ன ஆச்சு ?*

**மாதவி** : *சொல்லு, கொழந்தே, நீயும் ஒன் அக்காவப் போல ஏன் இப்பிடி வெறுத்து அலையுறே ?*

**ராஜ** : *அப்பிடி இருக்கத் தானே தலையெழுத்து !*

**மாதவி** : *அந்த அவசியம் ஒனக்கு இதுவரை வந்ததில்லை.*

**ராஜ :** அவனவனுடைய திறமைகளைப் பத்திப் பீற்றிக்கிட்டா மட்டும் போதாது.

**கிருஷ்ண :** நீ பீடிகை போட்டே விடிஞ்சுடும் போலயிருக்கு.

**ராஜ :** அப்பா, நான் வெளிப்படையாச் சொல்றேன் செல்லப்பன் பிள்ளையோட எனக்குப் போதும் போதும்னு ஆயிடிச்சு.

**மாதவி :** அவன் ஒன்னத் திட்டினானா?

**ராஜ :** அதாவது பரவாயில்லியே!

**கிருஷ்ண :** பின்னே?

**ராஜா :** இதவிட அதிகமா எனக்கு அவமானம் நேராது. இந்த வீட்டார்களுக்குநேராது.

**கிருஷ்ண :** என்ன ஆச்சு? தெரிஞ்சுக்கிடப் பரபரப்பாயிருக்கு.

**ராஜ :** ஆனது வேறொண்ணுமில்லெ. என் சகோதரியப் பிடிச்சு அவனுக்குக் கொடுத்தீங்க.

**கிருஷ்ண :** அப்படிப் பண்ணியிருக்க வேண்டாம்னா நீ இப்போச் சொல்றே?

**ராஜ :** சந்தேகமா? ஒரு இளைஞனானால் ஆட்களிடம் பழகக் கற்கணும். இன்று என் நண்பர்கள் யாரெல்லாம் தெரியுமா? சீஃப் ஸெக்ரட்ரியின் மகன், பேஷ்காரின் மகன், ஹைக்கோர்ட் ஜட்ஜின் மகன், இவர்களெல்லாமாக்கும். அவங்களையெல்லாம் பார்த்தால் அவன் பேசுகிறதில்லை. அவங்க பெரியமனசு பண்ணி அவனிடம் ஏதாவது கேட்டால் அவன் அங்கிருந்து உடனே போயிடறான்.

**மாதவி :** சீச்சீ, அது வெட்கக் கேடுதான், பெரிய வெட்கக் கேடு, பட்டிக்காட்டான்ங்கிறதுனால வந்த வினையப் பாருங்க.

**ராஜ :** அந்த ஆளுக்கு ஒரு வெட்கமும் உண்டாகிறதில்லை. சுரணையுள்ளவங்களுக்குத்தானே அவமானம் தோணும். இன்னும் கேட்கணுமா மருமகனின் பெருமைகளை? அவன் ஒரு பார்ட்டிக்கும் போகிறதில்லை. சினிமாப் பார்க்கக் கூப்பிட்டால் வருவதில்லை. நன்றாக டிரஸ் செய்து கொள்வதில்லை. அந்த ஆளுக்கு வேஷ்டியும், ஷர்ட்டும், துண்டும் தான். கஷ்டம், அவனும் காலேஜில் படிச்சிருக்கேன்னு சொல்றான்.

**கிருஷ்ண :** இப்படியானாலும் அவன் ஒரு சாதுதான் ராஜா.

**மாதவி :** நல்ல சாது, காசுக்கு உதவாதவன்.

**ராஜ :** சாதுவாமே, இப்படிப்பட்ட சாதுக்களை ஊறுகாய் போடத்தான் உதவும், அப்பா, இன்னொரு விஷயம் கேக்கறீங்களா? அவனுக்கு சைக்கிள் விடக் கூடத் தெரியாது. (குலுங்கிச் சிரிக்கிறான்)

**கிருஷ்ண** : அவன் நாட்டுப்புறத்தானில்லையா ? கொஞ்சம் நாளானால், கொஞ்சம் பழகினால் சரியாகிவிடுவான்.

**ராஜு** :அப்படி ஆனால் அன்றைக்கு என் கழுத்தை வெட்டி ஒங்க முன்னால வைக்கிறேன். ஷேவ் செய்துகொள்ள வேண்டிய நாள் கூட பெண்டாட்டி சொல்லிக் கொடுக்கணும். அப்படிப் பட்டகாட்டான்.

**மாதவி** : ராஜா, இதுக்கு ஒரு வழி கண்டு பிடிக்கலாம், நான் பாரதிகிட்டச் சொல்லித் தட்டிக் கொடுத்து எல்லாம் சரியாக்கறேன்.

**ராஜு** : சரியாக்கலைன்னா எனக்குத் தெரியும் சரியாக்க. நான் டி.எம்.எஸ். ஃபஸ்ட் கோர்ட்டில் சீஃப் ஸெக்ரட்டரியின் மகனோடு விளையாடி ஸெட் எடுக்கிறவன், இன்றைக்கு இந்த டௌனிலேயே மிகவும் விலையுயர்ந்த துணிகளே நான் உடுப்பது.

**கிருஷ்ண** : உனக்கு அதற்குத் தகுந்த வசதிகளுண்டு, அவனுக்கில்லை, அவ்வளவுதான்.

**ராஜு** : (கேட்காத பாவனையில்) நான் ஒரு நாளில் செலவாக்கும் பணம் ஆயிரம் ரூபாய்க்காரனின் மகன் ஒரு மாதத்தில் கூடச் செலவாக்குறதில்லை. நான் ஒரு இடத்தில் காபி குடிக்க நுழைகிற போது என்னோடு ஒரு பத்துப் பேராவது இல்லாமலிருந்ததில்லை இன்று வரை. அந்தப் பத்துப் பேர்களும் கண்ட மட்டியும் மடையனுமில்லை. பெரிய மனிதர்களின் பிள்ளைகள். எனக்கு இந்தநாள் வரை நாலு காசுக்காக வேலை பார்க்கவேண்டி வந்ததில்லை.

**மாதவி** : அந்த அவசியம் இனிமேலும் உனக்கு வராது குழந்தை. அதற்கு நாங்க ஏற்பாடு செய்திருக்கோம்.

**ராஜு** : ஆனால் என் மாப்பிள்ளையோ? கடவுளே, ஒடம்பெல்லாம் எரியுது. அவன் இன்று வரை நாலு பேரை மொத்தமாகக் கண்டதில்லை. ஹூம், அவனுக்குத் தெரியக் கூடச் செய்யாது அந்த பேக்கர் ரெஸ்ட்டாரண்ட். அப்பா, நான் கேட்கிறேன், அவனுக்கு ஒரு சிகரெட் குடிச்சுட்டா என்ன கொறஞ்சு போயிடும் ? ஏழு வருஷமா அவன் திருவனந்தபுரத்துல இருக்கான். அதான் அதுல சுவாரஸ்யம். எதுக்காக அப்பா அவன் படிச்சான் ?

**கிருஷ்ண** : அவனுடைய நிலைமை அப்படியிருந்தது ராஜா. காலேஜில் கொடுக்க வேண்டிய ஃபீஸ் கூடக் கஷ்டப் பட்டுத்தான் அனுப்பிக் கொண்டிருந்ததாக அவனுடைய அப்பா சொல்லியிருக்கார்.

**ராஜு** : அது சரி, நான் சம்மதிக்கிறேன். அதுக்குப் பேரு கதிகெட்டத்தனம். ஆனால் அவன் பாவனை அப்படி ஏதாவதா ? அவனுக்கு இந்தத் திருவனந்தபுரத்துக் காரங்களை,

முக்கியமாக என்னை எவ்வளவு இளக்காரம்னு தெரியுமா, அப்பா?

**கிருஷ்ண** : ஆ, அப்படியா? அது நிச்சயமா அவனுக்குத் தகாது.

**ராஜ** : அந்த பாவனையை அவன் ஒரு பெரிய மதிப்பாகவாக்கும் நினைத்திருக்கான். எப்போதும் ஒரு பெரிய சிந்தனையாளனைப் போலத்தான் அவனுடைய நினைப்பு. எனக்கு இன்று வரை ஒரு விஷயத்தைப் பற்றியும் ஐந்து நிமிஷத்துக்கு மேல் யோசிக்க வேண்டி வந்ததில்லை. அதனால் என் தலைமயிர் முழுவதும் கருப்பாகவே இருக்கு. அவனுக்கு இந்தச் சின்ன வயசிலேயே வெறும் நரைத்த மயிர் ஆனதுதான் லாபம்னு சொல்லிக்கிறதுக்கு.

**மாதவி** : யோசனை செய்து செய்து அந்தப் பெண்ணையும் பைத்தியமாக்கிடுவானோ, என்னவோ? அந்தப் பொண்ணு முன்னாலேயே ஒரு முட்டாள் பொணம்.

**கிருஷ்ண** : அதொண்ணுமில்லை. என் பொண்ணுக்கு அப்படியெல்லாம் ஆகாது. நீங்களெல்லாம் சொல்றது போல அவள் அத்தனை முட்டாளொண்ணுமில்லை.

**மாதவி** : முட்டாள் இல்லை, முட்டாள் இல்லை. அவள் அந்த மெட்ரிக்குலேஷன் கிளாஸில் எத்தனை தடவை தோற்றாள்?

**கிருஷ்ண** : ஹோ, இந்தக் கிளாஸுல தோற்கிறதிலயும், ஜெயிக்கிறதிலயுமா மனுஷனின் புத்திசாலித் தனம் தெரிகிறது? சே, அசட்டுத்தனம்?

**ராஜ** : அப்படின்னா அவ புருஷன் பி.ஏ. ஜெயிச்சிருக்கானே, அதனால அவன் ஒரு புத்திசாலியா இருக்கணுமில்லியாம்மா?

**மாதவி** : அது ஒருத்தன் அப்படி ஆயிட்டான்னு வச்சுக்க .....

**ராஜ** : ஒருத்தனில்லைம்மா, ஆயிரச் கணக்கில அப்படித்தான் எனக்கு அதுதானே சமாதானம்! நான் பாஸாகாதது எனக்கு சந்தோஷம்தானே.

**கிருஷ்ண** : எங்களுக்கும் சந்தோஷம்தான். ஆனால், ராஜா, நீ ஒரு நல்ல தொழில் தொடங்கணும். ஒனக்கு ஒரு நல்ல தொகையை, அப்படின்னு வேண்டாம், ஒனக்குத் தேவையான தொகையை முதலாப் போட்டுத் தரோம்.

**ராஜ** : (மிகவும் பொறுக்க மாட்டாமல்) என்னால் ஆகாது அப்பா. ஹோ, என்ன வீண் வேலை! எப்போதும் ஒரு வேலையிலேயே கவனமாயிருக்கனும். கணக்குக் காட்டணும். ஒரேயிடத்துலயே இருக்கணும். எனக்கு அதன் அவசியமென்ன?

**கிருஷ்ண** : வேலையெல்லாம் கூலிக்காரங்க செய்துக்கு வாங்க, நீ மேற்பார்வை பார்த்தா போதும்.

**ராஜ** : அப்பா, எனக்கு அதக் கேக்கறப்பவே தலைவலி வருது. தொழில் செய்து வாழ்கிறதாவது! எவ்வளவு வெட்கக் கேடு. அப்பா! ஒங்களுக்கு வயசாகறதுனால அப்படித் தோணுது.

**கிருஷ்ண** : இல்லை. நான் சொன்னது வேறெதுனாலவு மில்லை. நமக்கு எப்படியாவது பணம் சம்பாதிக்கணும். நமக்குப் பத்து வருஷத்துக்குள்ள இந்தத் திருவனந்தபுரத்துல நல்லா வசதியாயிடணும். அதுக்காகத் தான் ராஜா.

**ராஜ** : ஓ, அதெல்லாம் வந்துடும்பா, அதுக்கென்ன பெரிய கவலை ? அக்காவின் சம்பளத்தை வைத்து மாத்திரமே அதை சாதித்து விடலாமே.

**கிருஷ்ண** : சம்பளத்தை மட்டும் வைத்து என்ன பண்றது?

**ராஜ** : அப்பா, தெரியாமச் சொல்றீங்க. இன்றைக்குத் திருவனந்தபுரத்துல ரொம்பப் பெரியவங்களெல்லாம் மாதச் சம்பளக்காரங்க தான்.

**மாதவி** : (வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தவள் போட்டு முடித்து) எதுக்காக அவன் வாயைக் கிண்டறீங்க ? அவன் ஒரு தொழில் செய்து இங்க விளங்க வேண்டாம்

**கிருஷ்ண** : வேண்டாம், எனக்குக் கட்டாயம் ஒண்ணுமில்லை. அதிருக்கட்டும் ராஜா. நீ ஒரு வேலை பண்ணு. நீ அந்தச் செல்லப்பன் பிள்ளை பக்கம் அதிகம் போகாதே. இந்த விஷயத்துல சும்மா உங்களுக்குள்ள சண்டை உண்டாகும். பெரிய அவமானமாப் போயிடும்.

**ராஜ** : வலியச் சண்டைக்குப் போகணும்னு யார் நெனைச்சாங்க ? ஆனாலும் அந்த ஆளுடைய வேதாந்தத்தைக் கேட்கறப்போ எனக்குப் பொல்லாத கோபம் வருது. நாமெல்லாம் அவன் பாஷையில சொள்ளைகள் போலிருக்கு. மனிதத் தன் மையை இனிமேல் அவங்கிட்டயிருந்து விலைக்கு வாங்கணும் போலிருக்கு! (கேலியாகச் சிரிக்கிறான்)

**மாதவி** : மகனே, அவங்கிட்ட இந்த விஷயத்தைப் பற்றி நானே பேசறேன். நீ கொஞ்ச நாளைக்குக் கொஞ்சம் சும்மாயி ருக்கணும்.

**ராஜ** : சும்மாயிருந்து சும்மாயிருந்து சுயமரியாதை கெட்டுப் போச்சு.

**கிருஷ்ண** : நீ பொருட்படுத்தாதே, விஷயங்களைச் சரிப்படுத் தலாம்.

**ராஜ** : அது போகட்டும் அப்பா. எனக்கு ஒரு நூறு ரூபாய் வேணும்.

**மாதவி** : (சட்டென்று) எதுக்கு ?

**ராஜ :** டி.எம்.எஸ். காரங்களுக்கு ஒரு பாரட்டி கொடுக்கணும். ஒரு ரிட்டர்ன் பார்ட்டி. நான் இந்தத் தடவை எல்லாரையும் தோற்கடிச்சு கப் வாங்கினேன். நான்தான் இந்த வருஷத்துச் சாம்பியன். அவங்க எனக்கொரு பார்ட்டி கொடுத்தாங்க. இப்போ அவங்களுக்கு நான் கொடுக்கணும்.

**கிருஷ்ண :** ரூபாய் இன்னிக்கே தரேன். ஆனா ஒரு விஷயம். அவங்க கொடுத்த பார்ட்டிய விட ரொம்ப மோசமாப் போயிடக் கூடாது நம்ம பார்ட்டி.

**மாதவி :** அத விடப் பத்து மடங்கு பிரமாதமாயிருக்கணும்.

**கிருஷ்ண :** நீ ஒரு உத்யோகஸ்தனின் மகனில்லாவிட்டாலும் அந்த வர்க்கத்தை விட ரொம்ப ஒண்ணும் குறைந்தவங்க இல்லைன்னு காட்டிக் கொடுக்கணும். போகட்டும் ஒரு நூறு அதுக்கு.

**ராஜ :** அப்புறம் அப்பா, நமக்கொரு கார் வாங்க வேண்டாமா? கார் இல்லாம என்ன மதிப்பு ?

**மாதவி :** நெஜந்தான், போதாததுக்கு தேவகிக் குட்டிக்குப் பதவி உயர்வு வேறு கிடைச்சிருக்கு. இனியாவது சொந்தக் கார் இல்லாம இருக்கிறது சரியா ?

**கிருஷ்ண :** கார் வாங்கிடலாம் ராஜா. நீ கொஞ்சம் தேடு. சீக்கிரமே வாங்கிடலாம்.

**ராஜ :** இந்த வாடகைக் காரில் ஏறி உட்கார்கையில் என் மேலல்லாம் சுட்டுப் போகும். நம்ம மாப்பிள்ளையும் அப்பிடித்தான். ஏதாவது காரில் ஏறிட்டா ஒடம்பு சுட்டுப் போயிடும். (ஏளமாகச் சிரித்துக் கொண்டே போகிறான்)

**மாதவி :** ராஜனுக்கு ரொம்ப மன வேதனை. பாவம் குழந்தை.

**கிருஷ்ண :** இன்றைக்கு எத்தனை பெரிய ஆட்கள் இங்க வந்தாங்க.தேவகிக் குட்டியின் பதவி உயர்வு பற்றி விசாரிக்க. அப்பவாவது அந்தச் செல்லப்பன் பிள்ளை அவங்ககிட்ட ஒரு வார்த்தையாவது பேசக் கூடாதா? கஷ்டகாலம், அவங்க என்ன நெனச்சிருப்பாங்க ?

**மாதவி :** இல்லை, இனிமெ இன்னொருசமயத்துக்குத் தள்ளிப் போட வேண்டாம். நான் இப்பவே அவனைப் பார்த்துடறேன். (போகிறாள்)

(கிருஷ்ணப் பணிக்கர் தூர வெறிக்கப் பார்த்துக் கொண்டிருக்கிறார். தேவகிக் குட்டி வருகிறாள். வாடியுலர்ந்த உடல், பாழ்பட்டு வீணாகிப் போன இளமையின் ரேகைகளாய் மீந்துள்ளவை பரிதாபத்தை மிகைப் படுத்திக் காட்டுகின்றன. நாகரிகமான யுவதியின் உடையலங்காரங்கள். பெறவேண்டியதைப் பெறாத ஒரு ஜீவனின் களைப்பு. ஒரே பார்வையில்

தெரிந்து விடுகிறது. முதலில் கண்ணாடியின் பக்கம் போகிறாள். தலை மயிரை ஒதுக்கிக் கொண்டு, முகத்தைத் துடைத்துக் கொண்டு முகம் மலர்த்திக் கண்ணாடியில் பார்க்கிறாள். ஏதோ தோல்வியுற்றதைப் போல அவள் நெடுமூச்சு விடுகிறாள்)

**கிருஷ்ண** : என்ன மகளே, கல்யாணம் நன்றாக நடந்ததா?

**தேவ** : (பேச்சில்லை)

**கிருஷ்ண** : நடக்காம என்ன? பரமேஸ்வரன் பிள்ளைக்கு நல்ல வசதிகளும், நிலைமையும் இருக்கு இல்லையா? பையன் எப்படியிருக்கான் பார்க்க ? யோக்கியன்தானே?

**தேவ** : (பேச்சில்லை)

**கிருஷ்ண** : இல்லாட்டா அத ஏன் யோசிக்கணும் ? அவனுக்கு ஒரு லட்சத்துக்குக் குறையாம சொத்து வரும்னு கேள்விப் பட்டேன், அந்தப் பெண்ணின் அதிருஷ்டம். அப்புறம் விருந்தெல்லாம் எப்படியிருந்தது?

**தேவ** : சாப்பிட்டவங்களுக்குத் தெரியும் !

**கிருஷ்ண** : அதுனால்தான் கேக்கறேன்.

**தேவ** : அதுக்குத் தேடித் தெரிஞ்சுக்க வேண்டியிருக்கு.

**கிருஷ்ண** : நீ சாப்பிடலியா ?

**தேவ** : இல்லை.

**கிருஷ்ண** : ஹ, அதுவும் ஒரு விதத்துல நல்லதாப் போச்சு. உன் நிலைமைக்கு அது தப்பில்லை. கேட்டியா மகளே, இன்னைக்கு இங்கே எவ்வளவு பேர் வந்திருந்தாங்க தெரியுமா? ஓரளவு பெரிய உத்யோகஸ்தர்களெல்லாம் வந்திருந்தாங்க.

**தேவ** : ம்ஹும்? இங்கே இன்றைக்கு என்ன விசேஷம் ?

**கிருஷ்ண** : உன்னுடைய இந்த விளையாட்டை நிறுத்து, தேவகிக் குட்டி.

**தேவ** : என் விளையாட்டு நிறுத்தினா நிக்கிறதில்லை அப்பா.

**கிருஷ்ண** : உனக்குத் தெரியாமலா இப்படிப் பேசுகிறாய் ?

**தேவ** : எனக்குத் தெரிஞ்ச வரை இங்கே ஒரு விசேஷமும் இல்லை.

**கிருஷ்ண** : ஒண்ணுமில்லை, இல்லையா? நூற்றைம்பது முன்னூறானது?

**தேவ** : எனக்கு அது விசேஷமாகத் தோணலை.

**கிருஷ்ண** : ஓ, எனக்குப் புரிந்தது. ப்ரமோஷன் மோசம்னு ஒன் நினைப்பு.

**தேவ :** ஆமாம், இதொரு உயர்வுன்னு எனக்குத் தோணலை.

**கிருஷ்ண** : இல்லை. அது எனக்குத் தெரியும். ஒன் படிப்புக்கும், தகுதிக்கும், நிலைமைக்கும் இதொண்ணும் பெரிய உயர்வில்லை. அவங்கள்ளாம் ஒரே மாதிரி சொன்னாங்களே ! ஆனா ஒரு விஷயம். நீ சின்னவள் தானே ..... இன்னும் எவ்வளவு காலம் இருக்கு.

**தேவ :** (*கண்ணாடியில் பார்த்துக் கொண்டு*) ஆமாம், சின்னவள் தான். ரொம்பக் காலம் இருக்கு.

**கிருஷ்ண** : ஒன் அதிருஷ்டத்தைப் பற்றி ஜோஸ்யர்களெல்லாம் ஒரேமாதிரி சொல்றாங்க.

**தேவ :** ஜோஸ்யர்களுக்கு மட்டுமில்லை, எல்லோருக்குமே அதைப் பற்றி ஒரே அபிப்பிராயமே இருக்கு.

**கிருஷ்ண** : அப்புறம் கொழந்தே, உன் பிறந்த நாள் இந்த மாசத்திலயாக்கும். இன்றைக்கு இங்கே வந்தவங்களுக்கெல்லாம் சேர்த்து அன்றைக்கு ஒரு விருந்து நடத்தினாலென்ன ?

**தேவ :** (*பேசாமல் நிற்கிறாள்*)

**கிருஷ்ண** : செலவைப் பற்றி ஒன்றும் யோசிக்க வேண்டாம். இது அவசியமானதில்லையா ?

**தேவ :** அப்பா, எனக்கு அடுத்த பிறந்த நாளுக்கு எத்தனை வயசு நிறையும்?

**கிருஷ்ண** : பாவம், ஒனக்கு நினைவில்லையா? முப்பத்தியஞ்சு.

**தேவ :** (*நெடுமூச்சு விட்டு, மெல்ல*) முப்பத்தியஞ்சு.

**கிருஷ்ண** : உன் அம்மாவுக்கு இப்போ அறுபதாச்சு. இருபத்தஞ்சாம் வயசிலயாக்கும் ஒன்னைப் பெற்றாள்.

**தேவ :** அம்மாவின் கல்யாணம் எத்தனாம் வயதில் நடந்தது ?

**கிருஷ்ண** : இருபத்து நாலில்.

**தேவ :** (*மனம் கிரகிக்காதது போல் நின்று நெடுமூச்சு விடுகிறாள்*)

**கிருஷ்ண** : எனக்கு அப்போது இருபத்தியெட்டு.

**தேவ :** ரெண்டு பேரும் நல்ல எளவயசு இல்லியா?

**கிருஷ்ண** : பிறகு ? அப்போ என்னவெல்லாம் செய்ய முடிஞ்சது தெரியுமா? ஒரு மூட்டை அரிசி எல்லாம் கூடப் பிடிச்சுத் தூக்கிடுவேன். (*சட்டென்று குனிகிறார்*).

**தேவ :** அம்மா கூட அப்பிடித் தானிருந்திருப்பா.

**கிருஷ்ண** : *பரவாயில்லை. ஒரு வீட்டுவேலை முழுவதையும் அவள் தான் செய்வாள்.*

**தேவ** : *(கனவு காண்பவளைப் போல நிற்கிறாள்)*

**கிருஷ்ண** : *அப்ப நாம அந்தப் பிறந்த நாள் விருந்தைப் பிரமாதமா நடத்தணும்.*

**தேவ** : *(விழிப்படைவதில்லை)*

**கிருஷ்ண** : *எல்லாம் புது மாதிரியாகவும், சிறப்பாகவும் இருக்கணும்.*

**தேவ** : *(விழிப்படைவதில்லை).*

**கிருஷ்ண** : *நீ என்ன குழந்தே யோசித்துக் கொண்டு நிற்கிறாய்?*

**தேவ** : *இல்லை, அன்றையிலிருந்து நீங்களும் அம்மாவும் எவ்வளவு மாறிப் போயிட்டீங்கண்ணு யோசிச்சுக் கிட்டிருக்கேன்.*

**கிருஷ்ண** : *அதில் அத்தனை யோசிக்க என்ன இருக்கு ? ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு விதமாக ....*

**தேவ** : *எல்லா சமயத்திலும் ஒரே விதமாகக் கழிக்கிறதை விட அது பரவாயில்லை.*

**கிருஷ்ண** : *அப்போ அந்த விருந்து விஷயம் ?*

**தேவ** : *எனக்கு அதைப் பற்றி ஒரு அபிப்பிராயமுமில்லை. இல்லாட்டாலும் இதப்போல விஷயங்களில் என் அபிப்பிராயத்தை ஏன் கேக்கறீங்க ?*

**கிருஷ்ண** : *கேட்டாலும் கேட்காவிட்டாலும் உன் அபிப்பிராயமும் எங்களுக்குத் தெரிய வேண்டாமா?*

**தேவ** : *தெரிய வேண்டிய அவசியமில்லை.*

**கிருஷ்ண** : *அட கடவுளே, இந்த சாதுப் பெண் எப்படித்தான் உத்யோகம் பார்ப்பாள்?*

**தேவ** : *எனக்கு அதுதான் சந்தேகம் அப்பா.*

**கிருஷ்ண** : *இல்லை, நான் சொல்றது என்னன்னா, வெறும் பெண்ணாக நடந்தால் ஒரு பிடிப்போடு, உத்யோகம் பார்க்க முடியாது. கொஞ்சமாவது புருஷத் தன்மையும் வேணும்.*

**தேவ** : *(நெடுமூச்சுடன்) நான் புருஷனாவதற்கு நன்றாக முயற்சி செய்கிறேனப்பா. ஆனாலும் கடவுள் கூப்பிட்டுச் சொல்கிறார் 'நீ பெண்'ணென்று.*

**கிருஷ்ண** : *(சிரித்தவாறு) இந்த வேடிக்கை மட்டும் தான் கண்ட பலன். இல்லாவிட்டால் இதற்கு முன்னாலேயே தீர்ந்து*

போயிருக்கும். அதெல்லாம் போகட்டும் குழந்தே. நாம சாப்பிடப் போகலாம். நீ பண்டிகை வீட்டில் சாப்பிடலியே !

**தேவ** : நீங்க போங்க. நான் கொஞ்ச நேரம் கழிந்து வரேன்.

**கிருஷ்ண** : நேரமாக்காதே (போகிறார்)

(தேவகிக் குட்டி திரும்பவும் கண்ணடியின் பக்கம் போகிறாள். நகைகளை ஒவ்வொன்றாகக் கழற்றி அலட்சியமாய் எறிகிறாள். 'விளையாட்டாம், விளையாட்டு' என்று பொருள் பொதிய உரக்கக் கூறுகிறாள், கட்டிலில் சாய்கிறாள். தலையணையைக் கட்டியணைத்துக் கொண்டு விம்முகிறாள், ஜானு பிரவேசித்து திகைத்து நிற்கிறாள்).

**ஜானு** : ஐயோ, சின்னம்மா, இந்த வளையல், மாலை, லோலாக்கு எல்லாத்தயும் இப்படிக் கண்ட எடத்துல போட்டுருந்தா?

**தேவ** : ஒனக்கு அவ்வளவு கவலைன்னா எடுத்துப் போட்டுக்கோ.

**ஜானு** : (திகைக்கிறாள்) அப்புறம் சின்னம்மாவுக்கு ?

**தேவ** : நீயேபோட்டுக்கோ.

**ஜானு** : இதென்னடா கஷ்டம் ! அப்புறமா வேண்டாமா ?

**தேவ** : இல்லாட்டா என்ன ? செத்துப் போயிடுவேனா?

**ஜானு** : செத்துப் போகாம இருக்கவா பெண்கள் நகை போடறாங்க ? நல்லாருக்கு, நல்லாருக்கு.

**தேவ** : நீ ஒரு வேலை பண்ணுவியா ஜானு ? இந்தக் கண் ணாடியை இந்த அறையிலிருந்து எடுத்துக்கிட்டுப் போயிடறியா ?

**ஜானு** : அந்தக் கண்ணாடி என்ன தப்பு செய்தது ?

**தேவ** : அந்த உபயோகமத்த கண்ணாடியை எனக்குப் பார்க்க வேண்டாம்.

**ஜானு** : அதுக்குப் பதிலா இளைய சின்னம்மாவோட கண் ணாடிய இங்க கொண்டுவந்து வைக்கிறேன்.

**தேவ** : அந்த அம்மாவின் கண்ணாடி நான் பார்க்கக் கூடியதில்லை. அதில் பார்த்தால் நான் பயந்து போவேன். ஒன்னு அலறிடுவேன். வேண்டாம் ஜானு, வேண்டாம்

**ஜானு** : ஐயோ சின்னம்மா, எனக்கொண்ணும் புரியலை.

(பாரதியின் அறையிலிருந்து காதலர்கள் சேர்ந்து பாடும் பாட்டொன்று இசைத் தட்டில் கேட்கிறது. பயத்துடன் சேர்ந்த ஒரு வெறுப்பு தேவகிக்குட்டியின் முகத்தில் பரவுகிறது).

**தேவ** : ஜானு, நீ ஓடிப் போய் பாரதிகிட்ட சொல்லு, அந்த இசைத் தட்டை இங்கே கொடுத்தனுப்பணும்னு. தயவு செய்து

கொஞ்சம் வேகமாப் போயிட்டு வா. (ஜானு பதறிக் கொண்டு போகிறாள். தேவகிக் குட்டி தளர்ந்து போய் அங்குமிங்கும் நடக்கிறாள். சற்று நேரம் கழிந்து ஜானு நுழைந்து இசைத் தட்டைக் கொடுக்கிறாள். தேவகி வேகத்துடன் அந்த இசைத் தட்டைத் தரையிலெறிந்து உடைக்கிறாள்).

**ஜானு** : ஐயோ, அது ஒரு நல்ல பாட்டு.

**தேவ** : அந்தப் பாட்டு இனிமேல் இந்த வீட்டில் ஒலிக்காது.

**ஜானு** : அதில் ஏதாவது அநாவசியமோ வேண்டாததோ இருந்ததா சின்னம்மா ? தெரியாமத் தான் கேக்கறேன்.

**தேவ** : இஷ்டம் போலக் கேலி பண்ணிக்கோ. எனக்கு ஆட்சேபணையில்லை. எனக்கு நிம்மதி கெடைச்சாப் போறும்.

**ஜானு** : ஐயோ, என் சின்னம்மாவே, நான் சின்னம்மாவக் கேலி பண்ணுவேனா? கடவுளே, இது என்ன கஷ்ட காலம், ஏழைகளுக்கு உண்டாகிற கதியப் பாரு.

**தேவ** : நீ இவ்வளவு நாள் இந்த வீட்டிலிருந்து என்னைக் கேலி பண்ணிக்கிட்டிருந்தாய். நீ மட்டுமில்ல, இந்த வீட்டிலிருக் கிறவங்க எல்லோருமே என்னைக் கேலி பண் ணிக்கிட்டிருந்தாங்க.

**ஜானு** : கடவுளே இதன் உண்மையை அறியட்டும், சின்னம்மா, அவர்தானே இதெல்லாம் கண்டும் கேட்டுக்கிட்டும் இருக்கார் ?

**தேவ** : காணவும் இல்லை, கேக்கவுமில்லை, கண்டுருந்தால்... கேட்டிருந்தால் ... ஜானு, அந்த நகைகளில் ஒன்றைக் கூட இனிமேல் இங்க பார்க்கக் கூடாது. பார்த்தால் ...

**ஜானு** : சின்னம்மா என்ன சொன்னாலும் கேட்க வேண் டியவளில்லையா ஜானு ! (நகைகளை எடுக்கிறாள்)

**தேவ** : நீ ஒடனேயே இந்த அறையிலிருந்து போயிடு. எனக்குக் கொஞ்ச நேரம் இங்க தனியா இருக்கணும். யாருமில்லாமல், ஏகாந்தமாய், சுகமாய் ....

**ஜானு** : (பேசாமல் வெளியே போகிறாள்).

**தேவ** : இந்த நிம்மதியாவது எனக்கு எப்போதும் கிடைத்திருந்தால் – (மறுபுறத்திலிருந்து பாரதி குழந்தையுடன் பிரவேசிக்கிறாள்).

**பாரதி** : அக்கா, அந்த இசைத்தட்டை உடைச்சுப் போட்டுட்டியா? எனக்கு எவ்வளவு பிடிச்ச பாட்டு அது !

**தேவ** : ஆனால் எனக்குப் பிடிக்கலை. நான் அத உடைச்சுப் போட்டுட்டேன், (குழந்தையைத் தூக்கக் கை நீட்டுகிறாள். குழந்தை பாய்ந்து பாரதியைக் கட்டியணைத்துக் கொள்கிறது)

**பாரதி** : அதிகப் பிரசங்கி. அவனோட ஒதவாக்கரைத் தனத்தப் பாத்தியா?

**தேவ** : இல்லை, பாரதி. ஒங்களெல்லாரையும் போல அவனும் என்னைக் கேலி பண்ணுறான். அம்மாவைப் புரிஞ்சுக்கிட்ட குழந்தை, அவ்வளவுதான் ! இனிமே நான் கையை அந்தப் பக்கம் நீட்ட மாட்டேன் (மேஜையிலிருந்து குழந்தையின் படத்தை எடுத்து அறைக்கு வெளியே எறிகிறாள்)

**பாரதி** : ஐயோ, அக்கா, என் குழந்தை என்ன தப்பு செய்தது ?

(தேவகிக் குட்டி யாதொரு அசைவுமின்றி நிற்கிறாள்).

**( திரை )**

# காட்சி இரண்டு

*(மாதவி சதனத்தில் இளந் தம்பதியரின் அறை. கட்டில், மெத்தை, ஒரு கண்ணாடி, மேஜை, தொட்டில், விதவிதமான விளையாட்டுப் பொம்மைகள், நாலைந்து குழந்தை உடைகள் இவ்வளவும் இருக்கின்றன. செல்லப்பன் பிள்ளையும் ராஜசேகரனும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். செல்லப்பன் பிள்ளையின் உடல் வாடி வதங்கியது. தீட்சண்யமான கண்கள் உடம்பின் குறையை நிவர்த்தி செய்கின்றன. உடை முதலான விஷயங்களில் குறிப்பிடத்தக்க அலட்சியம். நேரம் பகல் மூன்று மணி)*

**ராஜ** : என்னிடம் இனிமேல் கேள்வி இல்லை. இதுவே கடைசிக் கேள்வி. நீங்க பார்ட்டிக்கு வரீங்களா இல்லியா?

**செல்** : எத்தனைதடவை கேட்டாலும் என்னிடம் ஒரே பதில்தான்.

**ராஜ** : அந்த பதிலுக்காக நான் கேட்கலை

**செல்** : வேறு பதிலுக்காகக் கேட்டுப் பயனில்லை.

**ராஜ** : ஹே, மனுஷா! உமக்கு அந்த மேனன் அவர்களைப் பற்றி ஏதாவது தெரிந்திருந்தால் என்னோடு துள்ளிக் குதித்து வந்திருப்பீர். அவங்களைப் போல பணமோ, புகழோ, ஆள் வசதியோ, நற்குணமோ உள்ள ஒருத்தர் இந்தத் திருவனந்தபுரத்திலில்லை. நீர் போயி யாருகிட்ட வேணும்னாலும் கேட்டுப் பாரும். பொதுக் காரியங்களுக்கு ஆயிரக் கணக்கில் ரூபாயைத் தூக்கிப் போடுகிற மகான் அவர் என்று உமக்குப் புரியும். அப்படிப் பட்ட ஒருத்தர் நடத்துகிற பார்ட்டிக்கு ....

**செல்** : அவருடைய குணத்தைப் பற்றி நான் ஓரளவு தெரிந்து வைத்திருக்கிறேன். பணத்தைப் பற்றியோ, புகழைப் பற்றியோ, ஆள்வசதியைப் பற்றியோ எனக்குத் தெரியாது. தெரியவும் வேண்டாம். மொடாக்குடியனும் துர்நடத்தை கொண்டவனு மென்றே அவனைப் பற்றி நான் புரிந்து வைத்திருக்கிறேன். அதையெல்லாம் ஜனங்கள் பார்க்காமலிருக்க, பார்த்தாலும் வெளியே சொல்லாமலிருக்க, போதாததற்கு ஊரெல்லாம் பேரைப் பறை சாற்ற, ஏராளமான பணத்தைப் பொதுக்

காரியங்களுக்கென்று சொல்லித் தூக்கி எறிகிறானென்றும் எனக்குத் தெரியும்.

**ராஜ :** போங்கய்யா போங்க, ஒங்களுக்கென்ன தெரியும் ? நீங்க நெனச்சுக்கிட்டிருப்பீங்க அவர் ஏதோ கள்ளோ, சாராயமோ குடிக்கிறார்னு. எவ்வளவு காஸ்ட்லி டிரிங்க் தெரியுமா அவர் குடிக்கிறது ? அதனுடைய பேரெல்லாம் கேட்டாக்கூட நீங்க தலை சுற்றி விழுந்துடுவீங்க. அப்புறம் துர்நடத்தை – ஹோ, அது அவ்வளவு சுகத்திலும் சௌகர்யத்திலும் இருக்கும்போது கொஞ்சமெல்லாம் – நான் கேட்கிறேன், யார்தான் பெரிய மனுஷங்கள்ள இப்படியில்லாமல் வாழ்கிறாங்க? பாவம். நீங்க பார்ட்டிக்கு வரணும்! வந்தாத்தான் திருப்தியாகும்.

**செல் :** நான் சொல்லிட்டேன்லியா, ராஜசேகரன் நாயர். எனக்கு இந்தப் பார்ட்டிக்கொண்ணும் போய் வழக்கம் இல்லைண்ணு.

**ராஜ :** எல்லோருக்கும் இந்த வழக்கம் பிறக்கும்போதே வந்துடுதோ ?

**செல் :** ஹூம், இனிமேல் அதப் பழக்கப் படுத்திக் கொள்ள என்னால் முடியாது. அதற்குத் தேவையுமில்லை.

**ராஜ :** கஷ்டம், என் மாப்பிள்ளை ஒரு ஜென்டில் மேனாக இல்லாம இருக்கானே !

**செல் :** நீங்கள் சொல்கிற விதத்தில் நான் ஒரு ஜென்டில்மேன் இல்லை. உங்கள் ஜென்டில்மேன் வெள்ளைக்காரன் போல நடக்கிறவர். உங்கள் ஜென் டில்மேனுக்கு சொஸைட்டி மிகத் தேவை. உங்கள் ஜென்டில் மேனுக்குப் பார்ட்டி நடத்தணும். காஸ்ட்லி ட்ரிங்க் குடிக்கணும். நியூமாடல் காரில் சுற்றணும்.

**ராஜ :** இல்லையில்லை, நான் சொல்றேன் ஜென்டில் மேனைப் பற்றி. ஜென்டில் மேன் கருப்பட்டிக் காப்பிதான் குடிக்கணும். ஜென்டில் மேன் டெய்லி ஷேவ் செய்து கொள்ளக் கூடாது. அவன் சைக்கிள் மிதிக்கக் கூடாது. அவன் காரில் சுற்றக் கூடாது.மொரட்டு வேஷ்டியும் சுட்டித் துண்டும்தான் அவன் உடுக்கலாம்.

**செல் :** என்னசெய்வது? வேறுபட்ட பார்வைகள். அவ்வளவு தான். ஒருவருடைய விருப்பமல்ல இன்னொருவருடைய விருப்பம்.

**ராஜ :** ஹேய், நான் உங்க கிட்ட நூறுதடவை சொல்லியிருக் கேனில்லையா, உங்களுடைய இந்த வேதாந்தம் எனக்குக் கேட்க வேண்டாம்னு.

**செல் :** எனக்கு வேதாந்தம் இல்லை. இருந்தாலும் பலனுண்டு என்கிற நம்பிக்கையுமில்லை.

**ராஜ :** குறிக்கோள் எதுவும் இல்லாததினாலதான் பார்க்கும் போதல்லாம் இப்படி போர் ரீலை எடுத்து விடறீங்க. கடவுளே, இதையெல்லாம் பொறுத்துக் கொள்கிறவனுக்கு இனி வேறு நரகம் வேணுமா?

**செல் :** இப்போ வேறு ஒரு நரகத்தைக் கடவுள் சிருஷ்டித்துக் கொண்டிருப்பாராயிருக்கலாம்.

**ராஜ :** ஓ, நீங்கதான் கடவுளின் செக்டரட்டரி. நீங்க இனிமேல் என்னைத் திருத்துகிற பேச்சோடு கிளம்பாதீங்க.

**செல் :** நீங்க தயவுசெய்து ஒரு காரியம் பண்ணணும். இனிமேல் நீங்க என் விஷயத்துல தலையிடாதீங்க.

**ராஜ :** என்ன சொன்னீங்க, தலையிடாதேன்னா ? ஹேய், நாங்க இங்க கௌரவத்தோட, அந்தஸ்தோட வாழுறவங்க. எங்களுக்கு அவமானம் உண்டாக்கணும்னு மனப்பூர்வமான எண்ணத்தோட நீங்க நடக்கிறபோது நான் தலையிடக் கூடாதுன்னா, ஹும், நீங்க சொல்றீங்க இப்ப?

**செல் :** ஒங்க கௌரவத்தையும், அந்தஸ்தையும் பற்றிச் சொல்ல எனக்கொண்ணுமில்லை. உங்களை அவமானப் படுத்தணும்ங்கிற எண்ணத்தோட நான் எதுவும் செய்யலைன்னு எனக்கு நன்றாகத் தெரியும்.

**ராஜ :** செய்யறதில்லை, செய்யறதில்லை, ஹோ, நீங்கள் முரட்டுத் துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு, மெயின் ரோட்டில் நடப்பது எங்களை அவமானப் படுத்தவல்லாமல் வேறு எதற்காக? நீங்கள் என் சிநேகிதர்களுக்கெதிரில் ஒரு வார்த்தை பேசினதுண்டா? அவர்கள் ஒரு சிகரெட் தந்தால் இதுவரை நீங்கள் பற்றவைத்ததுண்டா? ஒரு ஜென்டில்மேனாக ஒரு நிமிஷமாவது நீங்கள் வாழ்ந்ததுண்டா?

**செல் :** நிறுத்துங்க ராஜசேகரன் நாயர், எனக்கும் கொஞ்சம் சுயகௌரவம் உண்டு. இந்த கௌரவமும் பெருமையும் உங்களுடைய குத்தகையொன்றுமில்லை.

**ராஜ :** அது எங்களுக்கு நன்றாகவே புரிந்து போயிற்று. உங்கள் திருமணத்திற்குப் பின் இன்று வரை காப்பாற்றின கௌவரம் ..... (வெடித்துச் சிரிக்கிறான்)

**செல் :** புரிந்தது – இந்தச் சிரிப்பின் உள்ளர்த்தம் தெளிவாயிற்று. நான் உங்கள் செலவில் இங்கே வசிப்பதைத் தான் நீங்கள் கோடி காட்டுகிறீர்கள்.

**ராஜ :** ஹா, சந்தேகமுண்டா ?

**செல் :** அப்படியானால் மிஸ்டர் ராஜசேகரன் நாயர், அது என்னுடைய குற்றம்தான். நான் முதலில் உங்களையெல்லாம் தவறாக

எடை போட்டு விட்டேன். இந்தப் பட்டணத்திலும் மனிதர்களைக் காணலாம் என்றிருந்தது என் எண்ணம்.

**ராஜ :** (ஏளனமாக) ஓ, இப்போது உங்களுக்குப் புரிந்துவிட்டது, இவ்வுலகத்தில் நீங்கள் ஒருவர் மட்டுமே மனிதராக இருக்கிறீர்களென்று. கண்டுபிடிப்புக்கு நமஸ்காரம்.

**செல் :** ஓ, நண்பா, இந்தக் கேலியும், வளைத்துத் திரித்துப் பேசுவதும் எனக்கு வழக்கமில்லை. என் வர்க்கத்தாருக்கும் வழக்கமில்லை. நான் ஒன்று சொல்லட்டுமா, நான் உங்கள் வீட்டில் கல்யாணம் செய்து கொண்டேன், சரிதான். ஆனால் அத்துடன் என் வாழ்க்கை முறை முழுவதையும் உடைத்து மாற்ற வேண்டுமென்றோ, எனக்குப் பிடித்தமானவற்றை விட்டு விட வேண்டுமென்றோ நீங்கள் சொல்வது பைத்தியக்காரத்தனம். என் விருப்பத்துக்குத்தான் நான் உணவு உண்பது. என் விருப்பப்படியே நான் வேஷ்டி உடுத்துவது. நான் பெரிய உருளையை உருட்டுவேனா, சின்ன உருளையை உருட்டுவேனா என்று உங்களுக்குத் தெரிந்து பயனில்லை. நான் கதர்த் துண் டைத் தோளில் போடுவேனோ, பட்டுத் துண்டைத் தோளில் போடுவேனோ என்று நீங்கள் அலைய வேண்டிய அவசியமில்லை. நீங்கள் பெருமையையும் கௌரவத்தையும் தப்பாய்க் கணிக்கிறீர்கள். உங்கள் நாகரிகமல்ல என் நாகரிகம்.

**ராஜ :** ஹேய், உங்கள் நாகரிகமல்ல, எங்கள் நாகரிகம். எங்கள் நாகரிகமே இங்கே செல்லுபடியாகும். எங்களுக்கு நாலு பேர் நடுவில் இருக்கணும்.நாலுபேர் முன்னால் நீங்கள் என் மாப்பிள்ளையென்று சொன்னால் அவர்கள் கைகொட்டிச் சிரிக்கக் கூடாது. டீஸன்ட் ஸொஸைட்டியில் காலம் கழிக்க வேண்டியவர்கள் நாங்கள்.

**செல் :** ஆமாம், உங்களுக்கு எப்போதும் நாலு பேர் தாங்க வேண்டும். நாலுபேர் இல்லை என்றால் நீங்களில்லை. கஷ்டகாலம். கடவுளே, இதைவிட ஒரு அடிமைத்தனம் உண்டா? நாலுபேர் சிரித்தால் நீங்கள் சிரிப்பீர்கள், அவர்கள் அழுதால் நீங்கள் அழுவீர்கள். நாலுபேர் நிர்வாணமாய் நடந்தால் நீங்களும் அப்படியே நடப்பீர்கள். முதுகெலும்பில்லாத சமூகத்து முக்கியஸ்தர்கள்.

**ராஜ :** அப்படியிருந்தும் வெட்கமில்லாமல் சுற்றியலைந்து இந்தக் கொம்பர்கள் அந்த முதுகெலும்பில்லாதவர்களின் காலடியில் விழுகிறார்கள்.

**செல் :** சரிதான் நண்பா, சரிதான். அப்படி வெட்கமில்லாமல் காலடியில் விழவேண்டி வருகிறது. என்ன செய்வது ? உங்கள் கையில் தான் சமூகத்தின் சாவி. உங்கள் கையில் தான் மனிதக் கூட்டத்தின் சொத்து. முரட்டு வித்தைகளிலும், கொடிய சதிகளிலும், சர்க்கரை வார்த்தைகளிலும் நாகரிகத்தைக் காண் கிற, நியதியற்ற ஒரு கூட்டத்தினரின் கையில்.

**ராஜ** : *அவ்வளவாவது ஒப்புக் கொண்டீர்களல்லவா... பெரிய விஷயம். என்னவானாலும் இப்பிடி இந்தப் பிரசங்கத்தை ரொம்ப நாளைக்கு வீட்டினுள்ளும் வெளியிலும் தொடருகிற நினைப்புண்டானால் சீக்கிரமாகவே நீங்கள் இங்கேயிருந்து போய் விடுவதுதான் நல்லது. எங்களுக்கு இங்கே மானம் மரியாதையோடு நாலு பேரோடு ஒத்துப் போய்ப் பிழைக்கணும். நீங்கள் முதலில் கொன்னீர்களில்லையா, நீங்கள் எங்களைத் தவறாய் எடை போட்டு விட்டீர்களென்று ?*

**செல்** : *ஆமாம், சொன்னேன். அதை எத்தனை தடவை சொன்னாலும் அதிகமாகிவிடாது.*

**ராஜ** : *ஹும், அதைப் போலத் தான் எங்களுக்கும் ஆயிட்டுது. நாங்கள் உங்களைப் பயங்கரமாய்த் தப்பாய் நினைத்து விட்டோம்.*

**செல்** : *அப்படீன்னா ?*

**ராஜ** : *நீங்கள் ஒரளவு நாகரிகமானவரென்றும், நாலுகாசுக்கு உதவும் நடத்தையும் விசேஷ புத்தியும் உள்ளவரென்றும் நாங்கள் தப்பாய் நினைத்து விட்டோம்.*

**செல்** : *இப்போதாவது அந்த நினைப்பு நீங்கியதல்லவா ? அதிருஷ்டம் தான். நான் அந்த நாகரிகமும், விசேஷ புத்தியும் ஒன்றுமில்லாமல் கொஞ்சம் வாழ்ந்து பார்க்கட்டும்*

**ராஜ** : *டேய், நீ அத்தனை பெரிய மனிதனாகவொண்ணும் ஆக வேண்டாம். எனக்குத் தெரியும், மிகக் கஷ்டப்பட்டு. ஃபீஸ் பணம் சேர்த்து, ஹோட்டல்காரனை ஏமாற்றி திருவனந்தபுரத்தில் வசித்து எப்படியாவது பாஸாகும் வீரன்மார்களில்லையா ? ரொம்ப ஒண்ணும் துள்ள வேண்டாம்.*

**செல்** : *அந்த வீரர்களை நீங்களல்லவா தலையில் தூக்கி வைத்துக் கொண்டு போய் இங்குள்ள குபேரர்களின் மகள்களுக்கும், சகோதரிகளுக்கும் கணவர்களாக்குகிறீர்கள். நீங்களும் அவ்வளவு பெரிய ஆளாக வேண்டாம்.*

**ராஜ** : *டேய், நான் என்ன சொன்னேன், பார்த்துக்கோ, தீர்த்துப்பிடறேன் ஒன் நல்ல கொணமெல்லாத்தையும். ஒண்ணு, உன்னை நான் ஜென்டில்மேனாக்குவேன். இல்லாவிட்டால் உன்னை நான் தொலைத்து விடுவேன். (கோபத்துடன் போகிறான்)*

**செல்** : *(சிரித்தவாறு) இல்லையில்லை, இரண்டும் ஒன்றே தான் நண்பா.*

*(பாரதி வருகிறாள். அவள் ஒரு அழகியே அல்ல, அதாவது அழகின் சாயல் கூட இல்லை. தாறுமாறாய்க் கசங்கிய வேஷம். முகம் மலர்ந்ததல்லவெனினும் சாந்தமும் நிறைவும் உண்டு)*

**செல்** : (ஏளனம், வெறுப்பு ஆகிய பாவங்களை அடக்கி வைக்கும் ஒரு கேலிச் சிரிப்போடு) சகோதரனின் பங்கு தீர்ந்தது. இனிமேல் சகோதரிக்கு ஏதாவது உண்டா ?

**பாரதி** : புரியும் பாஷையில் பேசினால் பதில் சொல்லலாம்.

**செல்** : உங்களுக்கெல்லாம் புரியும் பாஷை எனக்குப் பழக்கமில்லை.

**பாரதி** : (பொருட்செறிவான கேலியுடன்) சே, அதை இப்பவாவது கொஞ்சம் புரிந்துகொண்டிருக்கவில்லையென்றால் கஷ்டமில்லையா ? இப்பத்தான் மூன்று, நாலு வருஷத்துக் கோர்ஸ் ஆயிருக்கே !

**செல்** : பாரதி, பி.ஏ. ஜெயிக்கிறது ரொம்ப சுலபமாயிருந்தது. ஆனால் இந்தப் பரீட்சையில் நான் நூறு தடவை தோற்றாயிற்று.

**பாரதி** : (விளையாட்டாய் பொய்க் கம்பீரத்துடன்) அப்போ, சசியின் பாஷை என்னவாயிருக்கும் ? அம்மாவின் பாஷையா, அப்பாவின் பாஷையா ?

**செல்** : அதைத் தீர்மானிக்கவே வருகிறேன். (அபரிமிதமான கோபத்துடன்) பாரதி, விஷயங்கள் ரொம்ப தூரம் போயிட்டுது. இதுவரை உன் சகோதரனின் தொந்திரவே இருந்தது. இப்போ உன் தாயும் மகனுடைய வேஷத்தில் கிளம்பியிருக்கிறாள்.

**பாரதி** : அண்ணாவின் கட்டாயத்தினால் தான் அம்மா பேசினாள்.

**செல்** : இருக்கலாம், ஆனால் அந்தத் தொனியே கடுமையாயிருந்தது. அவளுக்கு அன்பு, வேண்டாம், கருணை, சரி, அதுவும் வேண்டாம், மரியாதையாவது இருந்திருந்தால் இப்படிப் பேசியிருந்திருக்க மாட்டாள்.

**பாரதி** : அவளுக்கு அத்தனைக்கான அறிவு இருக்காக்கும் அதை நீங்கள் புரிஞ்சுக்கிட்டு நடக்கனும்.

**செல்** : ஆமாம், பாரதி, நான் புரிஞ்சுக்கிட்டு நடக்கவே முடிவு செய்திருக்கேன். இங்கேயிருந்து போய் விடத் தீர்மானிச்சுட்டேன்.

**பாரதி** : என்ன ? இங்கேருந்து போய் விடவா? நீங்க மட்டுமா ?

**செல்** : ஆமாம், நீ வேதனைப் படாதே. தப்பா நினைச்சுக்காதே. எனக்கு இங்கே ரொம்பவும் மூச்சு முட்டுகிறது. எனக்கு இன்னும் ஒரு நாள் மேல இங்க வசிக்க முடியாது.

**பாரதி** : நான் இதுவரை உங்களைத் தப்பாய் எடை போட்டதில்லை. நான் என் வீட்டுக்காரங்க அபிப்பிராயத்துல ஒரு மடைச்சியானாலும் அவர்களை விடச் சிறப்பாக நான் உங்களை எடை போட்டிருக்கிறேன்.

**செல்** : அது எனக்கு நன்றாகவே தெரியும். ஆனால் உன்னிடமுள்ள அன்புக் குறைவினால்தான் நான் போகிறேன் என்று நீ ஒரு வேளை நினைக்கலாம்.

**பாரதி** : அதிருஷ்டவசத்தால் அப்படி நினைக்கிற மனைவியல்ல உங்களுடையவள்.

**செல்** : பாரதி, ஒரு அதிருஷ்டம் மட்டுமே என் வாழ்க்கையில் நேர்ந்திருக்கிறது.

**பாரதி** : அந்த அதிருஷ்டத்தை மறந்து விட்டே தாங்கள் நடந்துகொள்கிறீர்கள்.

**செல்** : என்ன செய்யலாம் ? பாரதி, என்னைச் சுற்றிலும் நான் காண்பது பிசாசாட்டமே. புகழுக்கும், பொருளுக்கும், பதவிகளுக்குமாக மனிதத் தன்மையைப் பணயம் வைக்கும் ஓர் ஆட்கூட்டத்தையே. அக் கூட்டத்தில் இந்த மடைச்சியான நீ மட்டுமே இருக்கிறாய் வித்தியாசமாக.

**பாரதி** : அந்த மடைச்சியை நினைத்துத் தாங்கள் நடந்து கொண்டால் போதும். எல்லாம் மங்களமாக முடியும்.

**செல்** : நான் ஒரு ஜென்டில்மேன் இல்லையென்று முரண்டு பண்ணும் ஒரு மச்சினன்; ஒரு புஷ் இல்லாதவனென்று வருந்தும் ஒரு மாமா; என்னைக் காசுக்கு உதவாதவனாகக் கணிக்கும் ஒரு மாமி. நான் எப்படிப் போகாமலிருப்பேன், பாரதி ?

**பாரதி** : ஆனால் தங்களுக்கு எப்படிப் போக முடியும் ? தங்களுடைய நிழல்போல ஒரு மனைவியும் உயிர்க் காற்றால் உருவாக்கிய ஒரு குழந்தையும் இங்கே இருக்கும்போது ?

**செல்** : அந்த ஒரே ஒரு விஷயம் இல்லாமலிருந்திருந்தால் நான் எவ்வளவு முன்னதாகவே இங்கிருந்து உயிருடன் தப்பியிருப்பேன்.

**பாரதி** : அந்த ஒரு விஷயத்திற்கு மற்றெல்லா விஷயங்களையும் மறைக்கும் சக்தியுண்டு.

**செல்** : பாரதி, நீ என் நிலைமையை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். உன்னிடம் நான் பலமுறைகள் சொன்னதில்லையா என் வீட்டு நிலைமையைப் பற்றி ? எழுபது வயதான என் தந்தையும் ஆறு குழந்தைகளும் என் வருமானத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தினம் ஒரு வேளை கூட அவர்கள் சாப்பிடுகிறார்களோ என்பது சந்தேகம்தான். அவர்களுடைய மூலதனத்தைப் பறித்துக் கொண்டே, கண்டவனும் கேலி செய்ய நேர்ந்த டிகிரியை நான் சம்பாதித்தேன். எனக்குச் சட்டென்று சம்பளம் உண்டாக்கித் தருகிறேனென்று உன் அக்கா வாக்குக் கொடுத்திருக்காவிட்டால் இந்தத் திருமணமே நடந்திருக்காது.

**பாரதி :** (நெடுமூச்சுடன்) அக்காவுக்கு அந்த விஷயத்தைப் பற்றி அன்றைக்கு அத்தனை பெரிதாகத் தோன்றலை. நான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்றும், எனக்கு ஒரு குழந்தை பிறந்தால் அதை அக்கா எனக்குத் தரமாட்டேன் என்றெல்லாம் எத்தனை முறைகள் அக்கா என்னிடம் சொல்லியிருக்கிறாள். இரண்டு மாதத்திற்குள் தங்களுக்கு வேலை வாங்கித் தர முடியும் என்று என் கையில் அடித்துச் சத்தியம் செய்திருக்கிறாள்.

**செல் :** (ஆவேசத்துடன்) அப்புறம் அந்த அக்காதான், அந்தக் கொடியவள்தான் என் குழந்தையின் படத்தைத் தூக்கியெறிந்து உடைத்தாள். பாரதி, அந்த சமயத்தில் நான் அங்கே இருந்திருந்தால்.....

**பாரதி :** ஐயோ, தாங்கள் அவ்விஷயத்தில் அக்கா மேல் குற்றம் சொல்லாதீர்கள், சசியிடம் அதிக அன்பு உள்ளதால்தான், கைநீட்டினபோது அவன் போகாமல் வந்தவுடன், அவ்வளவு அதிகமான விசனமும் கோபமும் கொண்டு படத்தை எடுத்தெறிந்தாள்.

**செல் :** இதெல்லாம் நகரத்தில் அதிக அன்பு ஆக இருக்கலாம். ஆனால் இந்த அன்பை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை பாரதி. இரண்டு மாதத்திற்குள் கிடைக்கும் வேலை நாலு வருஷமாயும் கிடைக்காததுவும் அதுபோலவே அதிக அன்பினாலிருக்கலாம்.

**பாரதி :** அதல்ல எனக்குத் தோன்றுவது; அக்காவுக்கு என்னிடம் ஏதோ வெறுப்பு உண்டாயிருக்கிறதென்றே தோன்றுகிறது. அக்கா என்னைக் கூப்பிட்டு வழக்கம் போலப் பேசியும் இப்போ ரொம்ப நாளாகி விட்டது. நாங்கள் வளர்ந்த காலத்தை நினைத்துப் பார்த்தால்... என்னை அம்மா அடிக்கிற நாளெல்லாம் அக்கா சாப்பிடாமல் கிடந்திருக்கிறார். எனக்கு ஒரு ஜலதோஷ ஜுரம் வந்தால் அக்கா அன்றைக்குக் காலேஜுக்குப் போகமாட்டாள். வருகிறவர்களுடனும் போகிறவர்களுடனும் என்னைப் பற்றித் தான் பேச்சு.

**செல்:** அப்போ பாரதி, வெறுப்பின் காரணம் தெளிவாகிறதல்லவா?

**பாரதி :** தெளிவா? எப்படி? என்ன காரணம்?

**செல் :** கஷ்ட காலம், நான்தான் உங்கள் அன்புப் பந்தத்தை உடைத்தெறிந்தேன்.

**பாரதி :** எப்படி? விளக்கமாய்ச் சொல்லுங்கள். எனக்குத் தெரிஞ்சாகணும்.

**செல்** : அவளுடைய அபிப்பிராயப்படி அநாகரிகமான என்னிடம் உனக்குள்ள உறவினாலேயே அவளுக்கு உன் மேல் வெறுப்பு. சந்தேகம் வேண்டாம்.

**பாரதி** : ஐயோ, தாங்கள் வீணாக என்னவெல்லாமோ ஊகிக்கிறீர்கள். உண்மை ஒரு போதும் அப்படியில்லை. உங்களிடம் அக்காவுக்கு எந்தவொரு வெறுப்பும் விரோதமுமில்லை. கல்யாணத்திற்கு முன் உங்களைப் பற்றி எத்தனை புகழ்ந்து என்னிடம் சொல்லியிருக்கிறாள் தெரியுமா ?

**செல்** : அப்போது அவளுக்கு என்னுடைய இயல்பான சுபாவம் புரிந்திருக்கவில்லை. அதை விடு பாரதி, நாம் நிறையப் பேசிப் பிரயோஜனமில்லை. வீட்டிலிருந்து எனக்கு அடிக்கடி கடிதம் வந்து கொண்டிருக்கிறது. எனக்கு என் குடும்பத்திலுள்ள கடமையை நிறைவேற்றத்தான் வேண்டும். இல்லாவிட்டால் நான் மனிதனல்ல. என்னுடைய வீட்டாரின் தரித்திரத்தை நீக்க எப்படியாவது எனக்கொரு வேலை தேடிக்கொண்டேயாக வேண்டும்.

**பாரதி** : அது கிடைக்கிறவரை நீங்கள் இங்கிருந்து போகக் கூடாது என்றே நான் சொல்லுகிறேன்.

**செல்** : இங்கிருந்து போய் அதைத் தேடுவதே சுலபம் என்று எனக்குத் தோன்றுகிறது.

**பாரதி** : கிடைத்து விட்டதென்றால் உடனே நாம் இங்கிருந்து போய் விடலாம். உங்கள் விருப்பத்திற்கும் இலட்சியங்களுக்கும் தக்கவாறு நாம் வாழலாம்.

**செல்** : இங்கிருந்து போனபிற்பாடு ஒரு வேலை கிடைத்தால் இரண்டு கஷ்டங்கள் தீரும். ஒன்று அடிமைத்தனம். இன்னொன்று, சீழ்பிடித்து நாறும் வாழ்க்கை.

**பாரதி** : நீங்கள்சொல்வதைக் கேட்டால், ஒரு சட்டை மாற்றுவது போல அத்தனை சுலபமாக உங்களுக்கு இவ்விடத்திலிருந்து போய்விட முடியுமென்று தோன்றுகிறது.

**செல்** : அத்தனை சுலபமல்ல. ஆனால் மிக மிக அவசியம். உங்கள் சோற்றையுண்டு, உங்களுடைய எண்ணெய் தேய்த்து, உங்களுடைய செலவில், உங்களுடைய குத்தல் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு என்னால் இனி வாழ முடியாது. நான் உங்களுடைய அடிமையென்று இன்று நீங்கள் நினைக்கிறீர்கள், நீங்கள் ஒரு வேலையும் தேடித்தந்து விட்டால் அந் நினைப்பு நூறு பங்காகிவிடும். அதை விட ....

**பாரதி** : அப்படியல்ல, எப்படியும், எத்தனை கஷ்டப்பட்டும் ஒரு வேலை தேடிக்கொண்டபின் நமக்கு இவ்வீட்டோடுள்ள

எல்லாத் தளைகளையும் அறுத்துக்கொண்டு வெளியே குதித்து விடலாம்.

**செல்** : அது துரோகம்.

**பராதி** : அந்த துரோகத்தைச் செய்துதான் இவர்களுடைய கண்களைத் திறக்க வேண்டும்.

**செல்** : அவர்கள் கண்கள் திறக்கக் கூடியதல்ல. அதோடு நீ–ஒரு மண்டுப்பெண்–நினைத்தால் என்ன முடியும்?

**பராதி** : (புத்திசாலித் தனமாக) என்னைப் போன்ற மண்டுப் பெண்கள் தான் அப்படிப் பலவும் சாதித்திருக்கிறார்கள்.

**செல்** : பாரதீ (பாரதி தலை குனிந்து நிற்கிறாள்)

**செல்** : பாரதீ (பாரதி தலை உயர்த்துகிறாள்)

**செல்** : பாரதி, நீ என்ன சொன்னாலும் நான் போகவே முடிவு செய்திருக்கிறேன். இங்கிருந்து போனபின் என்ன செய்ய வேண்டுமென்றோ, என்ன செய்ய முடியுமென்றோ எனக்குத் தெரியாது. ஏதாவதொரு வசதி கிடைத்துவிட்டால் உடனேயே உன்னையும் குழந்தையையும் அழைத்துக் கொள்ளலாம். அதுவரை பாரதி.... அது வரையிலும்... நமக்குத் தெரியாதா நம்மிடையே பரஸ்பர நம்பிக்கை உண்டென்று ? நாம் பிரிந்து வாழ்வோம்.

**பாரதி** : (கடகடவென்று கண்ணீர் சொரிகிறாள்) நீங்கள் போகிறீர்கள், நீங்கள் போகிறீர்கள். போகத்தான் வேண்டும். போகாதீர்களென்று சொல்ல எனக்கு சக்தியில்லை. உங்களுடைய அப்பாவும் சகோதரர்களும் பாவம் (சற்று நேரத்திற்குப் பின்னர் யோசனையுடன்) நீங்கள் என்றைக்குப் போகத் தீர்மானித்திருக்கிறீர்கள் ?

**செல்** : கூடிய சீக்கிரம். எவ்வளவு விரைவில் இந்தத் தீக்கணப்பிலிருந்து விடுபட முடியுமோ அவ்வளவு சீக்கிரம்.

**பாரதி** : நீங்கள் எனக்காக இன்னும் இரண்டு நாள் கூட இங்கே இருக்க வேண்டும்.

**செல்** : அதனால் என்ன பயன் ?

**பராதி** : நான் அக்காவிடம் சற்றுப் பேசிப் பார்க்கட்டும்

**செல்** : அதற்கு நான் போய்விட்டாலும் நேரம் இருக்கிறதே !

**பாரதி** : இல்லை, நான் இவ்விஷயத்தைப் பற்றி அக்காவிடம் கடைசியாக இன்னுமொரு தடவை மட்டும் பேசப் போகிறேன்.

**செல்** : அதனுடைய பதில் ஒருபோதும் வழக்கத்திற்கு மாறாக இருக்கப் போவதில்லை.

**பாரதி** : இனிமேல் தள்ளிப் போடக் கூடாதென்று நான் அக்காவிடம் சொல்கிறேன்.

**செல்** : எதற்கு வீண் முயற்சி செய்கிறாய் ? அவளுக்கு அதில் எந்தவொரு ஈடுபாடுமில்லை.

**பாரதி** : நான் அப்படி நினைக்கவில்லை.

**செல்** : நீ வீணாகத் தோல்வியடையப் பார்க்கிறாய்.

**பாரதி** : நான் ஒரு தோல்விக்காரி என்றுதான் என் வீட்டாருடைய அபிப்பிராயம்.

**செல்** : ஆகட்டும். நான் எதிர்க்கவில்லை, அந்தச் சோதனையும் நடக்கட்டும்.

**பாரதி** : கடவுளே, இதில் நான் வெற்றி பெற்று விட்டால் ....

**செல்** : கடவுளுக்கு இதிலென்ன செய்ய முடியும் ?

**பராதி** : (சிந்தனாவயப்பட்டு நிற்கிறாள்)

**செல்** : பாரதீ, நான் கொஞ்சம் வெளியில் போய் விட்டு வருகிறேன். (நடக்கிறான்)

**பாரதி** : போய் வரும்போது அந்தப் பம்பரத்தை மறந்து விடாதீர்கள்.

**செல்** : நேரத்தோடு அந்த மருந்தைக் கொடு.

**பாரதி** : (மகிழ்ச்சியும் துயரமும் கலக்க) இந்த ஈடுபாடுள்ளவர் எப்படி இங்கிருந்து போய் வாழ்வார் ?

(செல்லப்பன் பிள்ளை விரக்தியுற்றவனாகப் போகிறான். பாரதி சிறிது நேரம் தலை குனிந்து இருக்கிறாள். தொட்டிலில் கிடக்கும் குழந்தை விழித்து அழுகிறது. தாய் அருகில் சென்று தொட்டிலையாட்டி தாலாட்டுப் பாடி உறங்க வைக்கிறாள். "ஓமனத் திங்கள் கிடாவோ" என்ற பாட்டின் முதல் பகுதி. தாலாட்டைக் கேட்டுப் பொறுக்க முடியாத முக பாவத்துடன் தேவகிக் குட்டி நுழைகிறாள்).

**தேவ** : (சட்டென்று) நீ அந்தத் தாலாட்டை .. (சற்றுக் கழிந்து) நீ உன் குழந்தையை உறங்க வைத்துக் கொண்டிருந்தாய், அல்லவா?

**பாரதி** : ஆமாம், திடீர்னு எழுந்து கொஞ்சம் அழுதான். இப்போது திரும்பவும் உறங்கிவிட்டான்.

**தேவ** : எனக்குத் தாங்க முடியாத தலைவலி. உன்னுடைய அமிர்தாஞ்சனத்தைக் கொஞ்சம் தருகிறயா ?

**பாரதி** : (அமிர்தாஞ்சனம் எடுத்துக் கொடுக்கிறாள்) நீ என்னிடம் இப்படிப் பேசவேண்டாமாயிருந்தது.

**தேவ** : எப்படி ? நல்ல வேடிக்கை !

**பாரதி** : உனக்கு எது தேவைப் பட்டாலும் இங்கே உள்ளே வந்தோ ஜானுவை அனுப்பியோ கொண்டு போக வேண்டியது தானே. அப்படியிருக்கையில் இந்த யாசகம் ரொம்பவும் வேதனையைத் தருகிறது அக்கா.

**தேவ** : ஓ, நான் மரியாதை அனுசரித்துக் கேட்டேன், அவ்வளவுதான். அதில் நீ வேதனைப் பட ஒன்றுமில்லை.

**பாரதி** : அதை நானல்லவோ தீர்மானிக்க வேண்டும்.

**தேவ** : (உதாசீனமாக) தீர்மானிப்பதை உன் விருப்பம் போல் செய்து கொள் பாதகமில்லை.

**பாரதி** : எனக்கு உன்னிடம் சில விஷயங்கள் சொல்லணும்.

**தேவ** : (பரிகாசமாக) நான் கேட்கத் தயார். (தேவகிக் குட்டி அமர்கிறாள்).

**பாரதி** : ரொம்ப நாளாக நினைத்துக் கொண்டிருக்கேன் உன்னிடம்சொல்லணுமென்று.

**தேவ** : (நிறைந்த கேலியுடன்) இப்போதாவது சொல்ல நேரமும் வசதியும் கிடைத்ததல்லவா, நல்லதாய்ப் போயிற்று.

**பாரதி** : நான் அப்போதெல்லாம் ஒவ்வொரு காரணத்தால் சொல்லாமல் கழித்தேன், அவ்வளவுதான்.

**தேவ** : (பரிகாசம் நிறைந்த அக்கறையுடன்) எதிர்பாராமல் என்னவெல்லாம் காரணம் வந்துசேரும் ? சிலசமயம் குழந்தை அழும். வேறு சில சமயம் கணவன் அழைப்பான்.

**பாரதி** : உனக்குக் கொஞ்ச நாளாக என்மேல் நல்ல பிடிப்பு இல்லையென்று எனக்குத் தோன்றுகிறது.

**தேவ** : என் பிடிப்பும், பிடிப்பின்மையும் மதிப்பில்லாதவை. அதைப் பற்றிப் பேச ஏதாவது உண்டா?

**பாரதி** : எனக்கு இருக்கிறது. ஒருயிரும் ஈருடலும் என்ற வகையிலேயே நாம் கழித்திருக்கிறோம்.

**தேவ** : இப்போது உடல் இன்னொன்று அதிகமாகியிருக்கிற தில்லையா ? அதனாலும் உனக்குக் கஷ்டப் படவேண்டியதில்லை யல்லவா !

**பாரதி** : நீ என்ன சொல்ல நினைக்கிறாய்?

**தேவ** : (திடமான குரலில்) அதுவா? நிச்சயமாக உன் குழந்தையைத் தான் சொல்கிறேன்.

**பாரதி** : புரிந்தது. நீயும் நானும் குழந்தையும்.

**தேவ :** இல்லையில்லை உள்ளதைச் சொன்னால் உனக்கென்ன குறைவு வந்து விடும் ? நீயும் உன் புருஷனும் குழந்தையும்.

**பாரதி :** நீ எனக்குப் புரிந்து கொள்ள முடியாத வகையில் பேசுகிறாய்.

**தேவ :** பேசாமலிருந்தால் குற்றம், பேசிப் புரியவில்லையானால் குற்றம்.

**பாரதி :** நான் யாரையும் குறை கூறவில்லை... அக்கா, நான் யாரைக் குற்றம் சொல்ல? உனக்கு என்னிடமிருந்த வாத்ஸல்யம், அந்தக் களங்கமற்ற, புனிதமான வாத்ஸல்யம் இன்று எனக்கு அனுபவிக்கக் கிடைப்பதில்லை. அதனால்தான் எனக்கு உன்னிடம்'பேச வேண்டி வந்தது.

**தேவ :** உனக்கு என்னிடமுள்ள வாத்ஸல்யத்திற்கு இது வரை குறை நேராததில் எனக்கு மிகவும் சந்தோஷம்.

**பாரதி :** உன்னை அப்படியாவது என்னால் சந்தோஷப் படுத்த முடிகிறதல்லா, அது ஒரு புண்ணியம்தான்

**தேவ :** உனக்குப் போதும் எல்லாப் புண்ணியமும்.

**பாரதி :** நீ ஒன்று என்னை மிகவும் தப்பாக நினைத்திருக்கிறாய், அல்லது என்னிடம் காட்டிய அன்பு வேஷம்.

**தேவ :** (உதாசீனமாக) இரண்டு விதமாக நினைத்தாலும் பரவாயில்லை.

**பாரதி :** உன்னிடம் பெரிய ஒரு மாற்றம் வந்து சேர்ந்திருக்கிறது.

**தேவ :** உன் வாழ்க்கையில் பலப்பல மாற்றங்கள் உண்டாகியிருப்பதினால், எந்த மாற்றமும் இல்லாத வாழ்க்கையிலும் நீ மாற்றங்களைக் காண்கிறாய்.

**பாரதி :** அக்கா, அந்தப் பழைய வேடிக்கையும், விளையாட்டும், மனந்திறந்த பேச்சும், உற்சாகமும் எல்லாம் எங்கே ஒளித்து வைத்து விட்டாய் ?

**தேவ :** உனக்குத் தெரியாதா ?

**பாரதி :** நிச்சயமாகத் தெரியாது.

**தேவ :** பாவம், அக்காலத்தில் வீசிக் கொண்டிருந்த காற்றிலேயே ஒளித்து வைத்து விட்டேன்.

**பாரதி :** அந்தக் காற்று இன்னுமொரு முறை இங்கே வீசக்கூடாதா ?

**தேவ :** இவ்வறைக்குள் வீசலாம். இதற்கு வெளியிலல்ல. (இருவரும் சற்று நேரம் மௌனமாயிருக்கிறார்கள்)

**பாரதி** : அப்புறம் அக்கா, சசியுடைய தந்தையின் வேலை விஷயம் என்னயிற்று ?

**தேவ** : எனக்குத் தெரியாது.

**பாரதி** : உனக்குத் தெரியாமல் யாருக்குத் தெரியும்? அக்கா, என்னிடம் உனக்கு அற்பமாவதுஅன்பிருந்தால் அவ்விஷயத்தை நீ சாதித்துக் கொடுக்க வேண்டும் .

**தேவ** : (இயலாமையை வெளிப்படுத்தி) சாதுவான நான் என்ன சாதிப்பது பாரதி ?

**பாரதி** : உன் வார்த்தையைக் கேட்டு நம்பியல்லவோ அவர் இங்கே திருமணம் செய்து கொண்டார் ? அந்த நம்பிக்கை யினாலல்லவோ அண்ணாவுடையவும் அம்மாவுடையவும் குத்தல் வார்த்தைகளைக் கூடச் சகித்துக் கொண்டு அவர் இங்கே இருந்தார் ?

**தேவ** : நான் வாக்குக் கொடுத்தது சரிதான். ஆனால் இந்த வாக்குகளையெல்லாம் நிறைவேற்ற எல்லாராலும் முடிந்து விடுமா ?

**பாரதி** : நீ மனப் பூர்வமாக முயற்சித்தால் வாக்கைக்காப் பாற்ற முடியவே செய்யும்,

**தேவ** : அவ்வளவு மனப்பூர்வமாக முயற்சித்து முடித்தால் என்ன, மோட்சம் கிடைக்குமோ ?

**பாரதி** : நிச்சயமாக. என் பாரம் உங்களுக்குக் குறையு மல்லவா ? அவர் நல்ல நிலையை அடைந்தால் நமக்குத்தானே நல்லது !

**தேவ** : ஆமாம், நல்ல நிலைமையை அடைந்தால் உங்கள் மூவருக்கும் அதொரு நன்மைதான்.

**பாரதி** : இல்லை, நம் எல்லோருக்குமே சரிதான். போதாததற்கு அக்கா, அவருடைய அப்பாவும், சகோதரர்களும் எவ்வளவு கஷ்டப் படுகிறார்களென்று தெரியுமா ? அவர்களை ஒரு நல்ல நிலைமைக்குக் கொண்டு வரவேண்டுமென்றால் அவருக்கு ஒரு வேலை கிடைக்காமல் எப்படி அக்கா ?

**தேவ** : கட்டாயமாய் அவர்களை ஒரு நல்ல நிலைமைக்குக் கொண்டு வர வேண்டியது அவருடைய கடமை.

**பாரதி** : அந்தக் கடமையை நிறைவேற்ற உன்னைத் தவிர வேறு யார் அவருக்கு உதவுவார்கள் ?

**தேவ** : (கடுப்பான ஒரு சிரிப்புடன்) பாவம், எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் அதற்கு சக்தியுள்ளவர்கள் !

**பாரதி** : அப்படியானால் அவர்களைக் கொண்டாவது நீ அதை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்.

**தேவ** : *பாரதீ, நான் நினைத்தால் எதுவும் நடக்காது. எனக்கு அதற்கான சக்தியில்லை.*

**பாரதி** : *சக்தியில்லையென்று சொல்ல வேண்டாம், விருப்பமில்லையென்று சொல்.*

**தேவ** : *(உதாசீன பாவத்தில்) என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். எதிலும் காணலாமே கொஞ்சம் உண்மையை !*

**பாரதி** : *வேலை விஷயம் நடக்காதென்றால் அவர் இங்கிருந்து போய்விடுவேனென்று சொல்லியிருக்கிறார்.*

**தேவ** : *சரிதானே ! போகாமல் வேறு என்ன வழி?*

**பாரதி** : *போய்விட்டால் உன் தங்கையுடையவும் குழந்தை யுடையவும் கதை என்னவாகும் ?*

**தேவ** : *என்னவாகி விடும் ?*

**பாரதி** : *உனக்கு என்னை விட அறிவு உண்டே; படிப்பு உண்டே! அப்படியிருந்தும் அக்கா, 'என்னவாகி விடும் ?' என்றல்லவோ கேட்கிறாய் ?*

**தேவ** : *ஆமாம், என்னவாகிவிடும் ? நீ இங்கே குழந்தையோடு வாழ்வாய்–நாங்கள் வாழ்வதைப் போல. அதைத் தவிர வேறென்ன ?*

**பாரதி** : *அதைத் தவிர வேறொன்றுமில்லை, அல்லவா? அக்கா, நீ என்னை உயிரோடு கொல்லத் தொடங்குகிறாய்.*

**தேவ** : *தொடங்கத் தானே செய்கிறேன்? பரவாயில்லை. உயிரோடு செத்து விட்டவர்களும் உண்டல்லவா உலகத்தில்! அவர்களை விடப் பரவாயில்லை.*

**பாரதி** : *(கோபாவேசமாகிறாள்) கஷ்டம், இதுதான் என் முதல் குழந்தையை எனக்குத் தரமாட்டேனென்று சொன்ன அக்கா; என் திருமணத்தை நடத்தக் கவலையுடன் ஓடியலைந்த அக்கா. உம், எதற்காக இதையெல்லாம் சொல்கிறேன் அக்கா, உனக்குப் புரியாது. உனக்கு எப்படிப் புரிய வைப்பது ?*

**தேவ** : *ஆமாம், அதுதான் உண்மை, நீ சொன்னால் எனக்குப் புரியாது. புரிய வேண்டும் என்பதுமில்லை. இனி உனக்குச் சொல்ல வேண்டியதொன்றுமில்லையல்லவோ ?*

**பாரதி** : *ஒரு வார்த்தை கூட இல்லை. சொல்ல வேண்டிய காலம் கடந்து விட்டது.*

**தேவ** : *(நிறைந்த ஏளனத்துடன்) இனிமேல் செய்ய வேண்டியது தானாக்கும் ?*

**பாரதி :** *(உறுதி நிறைந்த தொனியில் துக்கம் மேலிட) ஆமாம், எனக்குத் தெரியும் ஒரு மனைவி எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று, ஒரு தாய் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று.*

*(பாரதி மின்னல் போல மறைகிறாள்)*

**தேவ :** *உம், நடக்கட்டும், என்ன நடந்து விடும் ?*

*(அறை வாயிலில் வேலுப்பிள்ளை பிரவேசிக்கிறான். திடகாத்திரமான ஒரு வேலைக்காரன் )*

**தேவ :** *என்ன வேலுப்பிள்ளை ?*

**வேலு :** *உத்திரவு, ஃபைல் கொண்டு வந்தேன்.*

**தேவ :** *திருப்பிக் கொண்டு போய் விடு. எனக்கு உடம்பு சரியில்லை*

**வேலு :** *உத்திரவு.*

**தேவ :** *இரண்டு நாட்கள் நான் ஆஃபீசுக்கு வரமாட்டேனென்று சொல்லிவிடு.*

**வேலு :** *உத்திரவு.*

**தேவ :** *நாளை இங்கே சற்று வா.*

**வேலு :** *உத்திரவு.*

**தேவ :** *நீ போகும் போது, இந்த ஜானு இருக்காளே, அவளைக் கொஞ்சம் இங்கே வரச்சொல்.*

**வேலு :** *உத்திரவு.*

**தேவ :** *நீபோகலாம்.*

**வேலு :** *உத்திரவு (போகிறான்)*

*(தேவகி அந்த அறை முழுவதையும் ஒரு முறை பார்க்கிறாள். தொட்டில், கட்டில், விளையாட்டுச் சாமான்கள் முதலியன வற்றில் பார்வை பதிகிறது. ஜானு வருகிறாள்)*

**ஜானு :** *என்னவானாலும் சின்னம்மா, ரொம்பக் கஷ்டமாப் போயிட்டுது நீங்க இப்பிடிச் செய்தது !*

**தேவ :** *நான் இந்த அறைக்குள் வந்ததா ?*

**ஜானு :** *சரியாப் போச்சு, அந்த நாய் ரோஸி கிடந்து ஊளையிடுறதச் சொல்றேன். ஓ! என்ன ஓலம்! பார்த்துக் கிட்டும், கேட்டுக்கிட்டும் சும்மா இருக்க முடியாது. அந்த புக்கிரப் புடிச்சு முனிஸிபாலிட்டிக்காரங்களுக்குக் கொடுத்த துனாலதானே பார்க்க சகிக்காத இந்த வேதனை வந்து சேர்ந்தது !*

**தேவ :** *ஏண்டி, நான் என்ன செய்யட்டும் ? அந்த இரண்டு நாய்களும் சேர்ந்து அப்படி மொல்லு மொல்லுன்னு தொடங்கிட்டா அப்புறம் ஒரு எழுத்துப் படிக்க முடியாது.*

சிலசமயம் அந்த அமர்க்களத்தைக் கேட்டால் இங்கேயிருந்து ஓடிப்போய் விடலாமா என்று தோன்றும். வேறு வழியில்லாம அப்படிப் பிடிச்சுக் கொடுத்தாச்சு, அவ்வளவு தான்.

**ஜானு** : ரொம்ப சத்தம் போடும், ஆனாலும் எவ்வளவு நல்ல ஜோடியாயிருந்தது ரோஸியும் புக்கரும். இப்போ, அதோ, ஒரே நாள்ள ரோஸி பாதியாயிட்டுது. இந்த புழுத்த நாய்களும் கூட மனுசங்களப் போலத்தான் சின்னம்மா.

**தேவ** : ஒ! அப்படியொன்றுமில்லை. பத்து நாள் கத்தும். அதுக்கப்புறம் நிம்மதியாப் போயிடுமில்லியா.

**ஜானு** : அவ்வளவுதான். ஆனாலும் எனக்கொரு பயம். அதுக்குள்ள ரோஸி செத்துப் போயிருமோன்னு.

**தேவ** : (விஷயத்தை மாற்றுவதற்காக) பாரு ஜானு, எனக்குத் தலைவலி. இந்த அமிர்தாஞ்சனம் எடுக்க இங்கே வந்தேன்.

**ஜானு** : இந்தப் பொய்யெல்லாம் எதுக்குச் சொல்றீங்க சின்னம்மா ? நீங்க குழந்தையைப் பார்க்க வந்தீங்க ! எனக்குத் தெரியாதா, இதெல்லாம் என்ன ஏதுன்னு, சின்னம்மா ? (தொட்டிலினுள் பார்த்தவாறு) ஹா, கள்ளன் தூங்கறானா ? (தொட்டிலினருகே போய் நின்று மெல்ல ஆட்டுகிறாள்)

**தேவ** : ஒன் மூத்த குழந்தைக்கு எத்தனை வயதாயிற்று ஜானு ?

**ஜானு** : ஒங்களுக்கு நினைவில்லியா ?

**தேவ** : எனக்கு நினைவில்லை,

**ஜானு** : அவனுக்கு இந்த வர்ர மீன மாசம் மகரத்துக்கு ஆறு வயசு நெறயும்.

**தேவ** : சமீபத்துல நான் பார்க்கலியே, நல்லாயிருக்கானா ?

**ஜானு** : என்ன இருக்கு நல்லாருக்க ? ஆனா மத்த ரெண்டு பசங்களை விடப் பரவாயில்லை. அவருக்கு வைக்கிற சோத்துல பாதியையும் மூத்த மகனுக்கே கொடுப்பாரு. இப்படிப் பண்ணினா எழுந்து நடக்கிறது எப்படின்னு கேட்டால் அப்பாலுக்குக் கோபம் வந்துரும் 'அடீ, நீயும் நானும் படுத்துட்டா அவன் தானே வேலை செஞ்சு கொண்டுத் தரணும்' அப்படின்னு சொல்லிட்டு என்னைக் கொல்ல வருவாரு.

**தேவ** : (நீண்ட பெருமூச்சுடன்) சரிதானே! சொந்தப் பிள்ளைகளென்றால் வயதான காலத்தில் காப்பாற்றுவாங்க.

**ஜானு** : ஆனாலும் அதுவரையிலும் பெரிய கஷ்டம்தானே, சின்னம்மா! ஊட்டி வளர்த்து சிசுருஷை செய்துட்டுருக்க வேண்டாமா? பணமுள்ளவங்களுக்குத் தானே அதெல்லாம் சுலபமாயிருக்கு. எரப்பாளிங்க என்ன செய்வாங்க ?

**தேவ :** அப்படின்னா நான் செய்தது பெரிய தொந்திரவு இல்லையோ ?

**ஜானு :** எது சின்னம்மா ?

**தேவ :** அன்றைக்கு அப்படி ராமன் பிள்ளைக்கு உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்ததுனாலதானே இந்தத் தரித்திரமெல்லாம் வந்து சேர்ந்தது.

**ஜானு :** ஐயோ, அப்படிச் சொல்லாதீங்க சின்னம்மா ! நீங்க எவ்வளவு புண்ணியம் தெரியுமா செய்தீங்க, என்ன தரித்திரமாகட்டும். ஒரு ஆண்துணை கிடைச்சதுதான் பெரிய விஷயம். ஏன் சின்னம்மா, ஒரு பெண்ணுன்னா அவளுக்கு ஒரு ஆணும், ஆணுன்னா அவனுக்குச் சொந்தமா ஒரு பெண்ணும் வேணும்னுல்லையா புராணத்தில் கூடச் சொல்லியிருக்கு. ஒருத்தருக்கு நம்பிக்கை வைக்க இன்னொருத்தர் வேண்டாமா ? நான் இப்பச் சொல்லலாமே ! ஒரு நேரம் கஞ்சியில்லாட்டாலும் அந்தச் சின்னப் புள்ளைகளுக்கு விளையாட்டுக் காட்டிக் கிட்டிருந்தா போதாதா ?

**தேவ :** (கோபதாபங்களை அடக்கிக் கொண்டு) பசிக்கு இதுவரை யாரும் மருந்து கண்டுபிடிக்கவில்லை. நீ இப்போக் கண்டு பிடிச்சுருக்கிறாய். இதைப் பேப்பரில் போடணும்.

**ஜானு :** இதுதான் பெரிய சம்பாத்தியம் சின்னம்மா. என்ன, நான் ஒங்களக்கிண்டல் பண்றேன்னு அன்றைக்கு என்னை அத்தினி சண்டை பிடிச்ச நீங்க இப்போ என்னைக் கிண்டல் பண்றீங்களா ?

**தேவ :** நான் உன்னப் பற்றி மட்டுமல்ல சொன்னது. இந்த வீட்டிலுள்ளவங்க எல்லாரைப் பற்றியுமில்லையா சொன்னேன் ?

**ஜானு :** உம், ஏன் சொல்லணும் ? எங்க தலையில ஒண் ணுமில்லையா? நாங்களும் அத்தனியொண்ணும் படிச்சதில்லை யானாலும் சுயநினைவோடதான் நடக்கிறோம் சின்னம்மா.

**தேவ :** உங்களுக்கெல்லாம் நான் கொஞ்சம் படிச்சதுதான் குற்றமாப் போயிடுச்சு. தொட்டதுக்கும் வச்சதுக்குகெல்லாம் என் படிப்பும் அறிவும்தான் சுட்டிக் காட்டுறதுக்கு இருக்கு. அப்படின் னா கேளு ஜானு, என் படிப்ப வச்சுத்தான் நான் சொல்றேன். நீங்களெல்லாம் என்னைக் கிண்டல் பண்றீங்க.

**ஜானு :** சும்மா அப்படிச் சொல்லிட்டாப் போதுமா சின்னம்மா. எப்டீண்ணு கூடச் சொல்லாம ?

**தேவ :** சொல்ல என்ன இருக்கு ? உங்களுக்கென்னிடம் நம்பிக்கையில்லை, என்னிடம் ஒட்டுதல் இல்லை, நீதானே சொன்னே மனுஷங்கன்னா பரஸ்பர நம்பிக்கை வேணும்னு ?

**ஜானு** : வேணும், வேணும், ஆனா எங்களுக்கு அது இல்லைண்ணு நீங்க சொல்லிட்டா' நாங்க என்ன செய்யிறது? குடலை எடுத்துக் காட்டினாலும் வாழை நார்னு சொல்லிட்டிருந்தா?

**தேவ** : சரி, இப்ப ஒன் வாயை அடைக்கிறேன். உனக்கு என்னிடம் நம்பிக்கையும் அன்பும் இருந்தால் நான் என்ன சொன்னாலும் நீ கேட்பாய் இல்லையா?

**ஜான** : அதுல என்ன சந்தேகம்?

**தேவ** : அது போலவே பாரதியும் கேட்பாள் இல்லையா?

**ஜானு** : நூறு பங்கு கேப்பாங்க.

**தேவ** : அம்மாவும் அது போலக் கேட்பா இல்லையா?

**ஜானு** : கேக்கணுமா?

**தேவ** : நீ திடுக்கிட்டுப் போகாதே. நான் சொல்லப் போகிறேன், "எனககாக, என் மேல் நம்பிக்கையும் அன்பும் உண்டென்றால் நீ ராமன் பிள்ளையை விலக்கணும். அம்மா அப்பாவை விலக்கணும்".

**ஜானு** : (திடுக்கிடுகிறாள்).

**தேவ** : என்ன ஜானு? பதிலெங்கே?

**ஜானு** : இதுக்கொரு பதில் இல்லைதான்,

**தேவ** : ஆமாம், பதில் இல்லை. ஜானு, இந்த அழகு வார்த்தைகள் சொல்றதுனால ஒண்ணும் ஒரு பிரயோஜனமும் இல்லை.

**ஜானு** : ஒவ்வொருத்தரும் புருஷனை விலக்கினாத்தான் நம்பிக்கை இருக்குன்னு நெனைச்சா? அது ஒரு பலத்த பரீட்சை யில்லையா?

**தேவ** : அந்தப் பரீட்சையில் நீங்களெல்லாம் தோறபீங்க.

**ஜானு** : அந்தப் பரீட்சையில் சின்னம்மாவும் நல்லாத் தோற்பீங்க

**தேவ** : இல்லை, ஒருபோதுமில்லை, நான் உங்களையெல்லாம் இந்த நிமிஷமே விலக்குவேன்.

**ஜானு** : ஹோ, எங்களை விலக்குவீங்களா? அதுனால என்ன ஆச்சு? ஒங்களுக்கும் ஒரு புருஷன் இருந்திருந்தா ....

**தேவ** : (அவசரமாக) என்ன?

**ஜானு** : ஒங்களுக்கு ஒரு புருஷன் இருந்திருந்தா நீங்க நிச்சயமா விலக்க மாட்டீங்க,

**தேவ** : *(சிந்தனாவயப்படுகிறாள்)*

**ஜானு** : *ஆனா ஒரு விஷயம். ஒங்களுக்குப் புருஷன் எதுக்கு ? நல்ல சம்பளம், நல்ல படிப்பு, நல்ல சொத்து, யாரையும் தொங்க வேண்டாம், துணைக்கு ஒருத்தர் வேண்டாம். ஒங்களைப் போலுள்ளவங்க யாருக்கும் புருஷுங்க இல்லையல்லவோ !*

**தேவ** : *சரிதான் ஜானு, நல்ல சம்பளமும், நல்ல படிப்பும், நல்ல சொத்தும் சேர்ந்து இருக்கிறவங்களுக்கு புருஷன்மார் இல்லைதான்.*

**ஜானு** : *அது ஒண்ணும் கிடைக்காததுனால இல்லை, எந்த மாதிரி வேணும்னாலும் உங்களைப் போலுள்ளவங்களுக்குக் கிடைக்க மாட்டாங்களா! இந்த சம்பளமோ, படிப்போ, சொத்தோ இல்லாதவங்களுடைய விஷயந்தான் கஷ்டம் சின்னம்மா. அவர்களுக்கு ஒரு ஆண் துணை கிடைக்கலைன்னா என்ன செய்வாங்க ? பாவம், எத்தனையோ பேருங்க அந்த மாதிரி இந்த ஊருல இருக்காங்க !*

**தேவ** : *அதுவும் சரிதான் ஜானு, சம்பளமும் படிப்பும் சொத்தும் இல்லாதவங்களுக்கும் புருஷன்மார் இல்லைதான். ஆனா அப்படிப்பட்டவங்க கொஞ்சம் பேருக்குப் புருஷன்மார் இருந்தா ... ?*

**ஜானு** : *அவங்க வேற என்ன செய்யணும் ? எல்லோரும் அப்படியே விலக்கிடணுமோ ?*

**தேவ** : *(குரூரத்தை வெளிப்படுத்தும் கடினத்துடன்) பின்னே விலக்காம ?*

**ஜானு** : *நல்ல கூத்து. இதக் கேட்டு எனக்குச் சிரிப்பு வருது. அப்படிப்பட்ட முட்டாள் தனமும் மனுஷுங்க செய்வாங்களா ?*

**தேவ** : *(எட்டத்தில் பார்வையை நிலைத்துக் கொண்டு) செய்வாங்க. நம்பிக்கை இல்லைன்னா பார்த்துடலாமா ?*

**(திரை)**

## காட்சி மூன்று

(முதல் அங்கத்தில் கண்ட ஹாலில் தேவகிக் குட்டி அங்குமிங்கும் நடந்து கொண்டிருக்கிறாள். கோபாவேசமான விரக்தி, தோல்வியுணர்வு, சகிப்பின்மை முதலிய பாவங்கள் நடையிலும் முகத்திலும் தெரிகின்றன. இடையிடையே பார்வைகள் ஊன்றி, நிலைத்து நின்று, கட்டுப்பாடின்றி சஞ்சரிக்கின்றன. சற்று நேரம் சென்று மேஜை மேலிருந்து ஒரு காகிதத்தையெடுத்துப் பார்க்கிறாள். வேளை பகல் இரண்டு மணி)

**தேவ :** "ஒரு மனைவி செய்ய வேண்டியதை நான் செய்தேன்" (தலையை உயர்த்தி) நீ எனக்குக் கற்றுக் கொடுக்கிறாய், இல்லையா ? "நான் உங்கள் பார்வையில் மடைச்சி ஆனாலும் இதை விடப் பெரிய வெற்றி எனக்கு உண்டாகாது," (தலையை உயர்த்தி) உன் வெற்றி என் தோல்வி, அப்படித்தான் உன் நினைப்பு, இல்லையா ? (காகிதத்தைச் சுருட்டியெறிகிறாள்)

(வேலுப் பிள்ளை நுழைகிறான்)

**தேவ :** என்ன வேலுப்பிள்ளை ?

**வேலு :** உத்திரவு. ரொம்ப அவசியமா ஆஃபீசுக்குக் கொஞ்சம் வரணும்னு சொல்லி அனுப்பிச்சாங்க.

**தேவ :** நான் வரலைன்னு சொல்லிடு.

**வேலு :** உத்திரவு. என்னவோ அவசியமா மேலிடத்துலருந்து எழுதியனுப்பிச்சிருக்காங்க.

**தேவ :** எனக்கு வரமுடியாது. நீ போகலாம்.

**வேலு :** உத்திரவு. அப்படீன்னா ஃபைலை இங்கே ...

**தேவ :** என்ன ? நீயும் எனக்குப் பாடம் சொல்லித் தரியா? போகச் சொன்னா.... வராததின் குற்றத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

**வேலு :** உத்திரவு (போகிறான்).

(தேவகிக் குட்டி திரும்பவும் நிலைகொள்ளாதவளாகிறாள். கசக்கியெறிந்திருந்த காகிதத்தைத் திரும்ப எடுத்து, கசங்கலை நிமிர்த்திப் படிக்கிறாள்) "அக்காவுக்கு நல்ல மனம்

உண்டாகட்டும்" ம்ஹூம், நீ எனக்காகப் பிரார்த்திக்கிறாய். முட்டாள் பெண். (ஜானு வருகிறாள்).

**ஜானு** : ஐயோ, சின்னம்மா, இதையெல்லாம் எப்படிக் கேட்டு சகிச்சுக்கிட்டிருக்கிறது? இந்த காலகண்டர்கள் நடுவுல கெடந்து எப்படி வாளறது ?

**தேவ** : (பொறுக்க மாட்டாமல்) என்னடீ புலம்புகிறாய் ?

**ஜானு** : இந்தப் பொம்புளைங்க அங்கயும் இங்கயும் நிண்ணு சொல்றாங்க, அந்தச் செல்லப்பன் பிள்ளைவாளை இந்த வீட்டுக்காரங்க வெரட்டிட்டாங்கண்ணு.

**தேவ** : அதனால என்ன ஆயிடுச்சு ? ஆகாயம் இடிந்து கீழே விழுந்துட்டுதா ?

**ஜானு** : ஆஹாங்... ஆகுறதுக்கு ஒண்ணுமில்லியா ? அவங்க கொஞ்சம் பேர் இப்படிச் சொல்லிட்டுத் திரிஞ்சா போதாதா எல்லாரும் அப்படியே நம்புறதுக்கு ? அதைவிட வேற அவமானம் உண்டா? சின்னம்மா, அவமானம் இல்லாமலா பெரிய ஐயாவும் பெரிய அம்மாவும் இப்பக் கெடந்த கெடப்புலருந்து எளுந்திருக்காம இருக்காங்க ?

**தேவ** : அவங்க எழுந்திருக்காதது அருமையா வளர்த்த மகள் போயிட்டதுனால இல்லையா ?

**ஜானு** : அந்தச் சின்னம்மா போனதுல இத்தனை விசனப்பட என்ன இருக்கு ? புருஷன்மார் வீட்டுல பொஞ்சாதிமார் போய் இருக்குறது புதுசா என்ன ?

**தேவ** : ஆனாலும் நீ பாரதியின் வக்கீல்தான். நீ அவ பங்கை ஒசத்தியே சொல்வாய்.

**ஜானு** : நான் சொல்றதா பெரிய விஷயம்? நானும் ஒரு தாயில்லையா? செல்லப்பன் பிள்ளைவாள் போன பிற்பாடு அந்தச் சின்னஞ்சிறுசு கெடந்து 'அப்பா, அப்பா' ண்ணு சதா நேரமும் அளுறதக் கேட்டு எப்படிச் சும்மா இருக்க முடியும் ? நானாயிருந்தா அந்தப் பத்து நாளுக்குள்ளேயே மண்டையை முட்டிக்கிட்டு செத்துருப்பேன்.

**தேவ** : ம்... இப்பவாவது அவ ஜெயிச்சுட்டால்லே, மத்தவங்க தோற்றாலும் அவள் ஜெயிச்சுட்டால்லியா, அது போதும்.

**ஜானு** : ம்... நல்லாருக்கட்டும் சின்னம்மா, நல்லாருக்கட்டும்.

**தேவ** : இல்லை ஜானு. அவள் ஜெயிக்கலை. ஜெயிச்சுட்டோம்னு துள்ளிட்டுருக்கா.

**ஜானு** : அதில்லை, இப்பச் சொல்றேன். செல்லப்பன் பிள்ளைவாள் வீட்டில் பெரும் தரித்திரமாயிருக்கும். இளைய சின்னம்மா அதை ஏதாவது அனுபவப் பட்டிருக்காங்களா ? பட்டிருந்தாலாவது , அதைக் கொஞ்ச நாள் சகிக்கலாம்.

இல்லாட்டி எப்படி ? என்றைக்காவது நல்ல காலம் பிறக்காம இருக்குமா ?

**தேவ :** அதுல சந்தேகமுண்டா ? கணவனோடு சேர்ந்து எங்கும் குதிக்கத் தயாராயிருப்பவள்தானே பத்தினி !

**ஜானு :** கேட்டீங்களா, சின்னம்மா, அப்படிக் குதிச்ச ஒரு பொண்பிள்ளையின் கதையை பாரதிச் சின்னம்மா எனக்கு ஒரு நாள் சொன்னாங்க, அளுதுடுவீங்க அந்தக் கதையைக் கேட்டால். உங்களுக்குக் கேட்கணுமா ?

**தேவ :** வேண்டாம், வேண்டாம், எனக்குக் கேட்க விருப்பமான கதை உனக்குத் தெரியாது.

**ஜானு :** ஐயோ, இதொரு சங்கடம்தான் சின்னம்மா ஒங்களுக்கு. இப்பக் கதையும் கேட்க வேண்டாம் ஒண்ணும் வேண்டாம். இப்படி ஆயிட்டா என்ன செய்யிறது சின்னம்மா ? ஆஃபீசுக்குப் போறதில்லை. கோயிலுக்குப் போறதில்லை. யாரோடயும் பேசறதில்லை. பின்னே எப்படிப் பொளுது போகும். கடவுளே !

**தேவ :** சரிதான் ஜானு. பொழுது போகாது. நான் நெஜந்தான் சொல்றேன். இந்தச் செல்லப்பன் பிள்ளை போன பிறகு கொஞ்சநாள்தான் நான் ஓரளவு சுகமாக் கழிச்சிருக்கேன். ஆனால் பாரதி போனதோடு அதுவும் போச்சு.

**ஜானு :** எனக்கு நேர்மாறா இருந்திச்சு சின்னம்மா, இளைய சின்னம்மா போறது வரையிலும் எனக்கு எவ்வளவு கஷ்டம் இருந்தது என்கிறீங்க ! அப்படியே கூனிக் குறுகி, தந்தையைக் காணாமக் கெடந்து அளுவுற கொளந்தய மடியில் வச்சுக்கிட்டு, கண்ணீர் வளிய விட்டு .... பாவம், எனக்குப் பார்க்கிறபோது கண்ணுல தண்ணி நெறஞ்சுடும்.

**தேவ :** நான் ஏன் ஒளிக்கணும் ஜானு. அந்தக் குழந்தை கிடந்து அழுத போதெல்லாம் ஏன்னு தெரியலை, எனக்குப் பேரானந்தமாயிருந்தது. ஆனால் பாரதி வெற்றியைத் தேடி ஒளிந்து ஓடினது முதல்.... (நீண்ட பெருமூச்சு விடுகிறாள்).

**ஜானு :** அதெல்லாம் அப்படி இருக்கும். ஒவ்வொருத்தரின் மனப்போக்கு ஒவ்வொரு விதமில்லையா ?

**தேவ :** ஆனால் அவள் ஜெயிக்கலை ஜானு.

**ஜானு :** சும்மா நீங்க அதப் பத்தி யோசிச்சு ஏன் மனசைப் புண்ணாக்கிக்கிறீங்க ?

**தேவ :** போடீ, உனக்கென்ன தெரியும் ? நீ எனக்கு உபதேசிக்கிறாயோ ? யோசனை சக்தி இல்லாத புழு.

**ஜானு :** ஐயோ சின்னம்மா. நான் வேற எதையும் நினைச்சுச் சொல்லலை.

**தேவ** : நீ நினைக்கிறதெல்லாம் எனக்குத் தெரியும். போ ஒம்பாட்டுல. ஒரு குத்துக்கு நில்லாத பொணங்கள்.

**ஜானு** : ஏழைகள்கிட்ட இப்படிக் கோபப்பட்டா என்ன செய்யறது சின்னம்மா ? நான் பேசறது உங்களுக்குப் பிடிக்கலைன்னா நான் இனிமேல் 'ம்' முனு கூடப் பேசலை.

**தேவ** : நீங்க பேசினது போதும். நீங்க ஒட்டினது போதும். நீங்க தோற்கடிச்சது போதும். இனிமே நமக்குத் தெரியும் யார் ஜெயிக்கிறாங்கண்ணு.

**ஜானு** : (பேசாமலிருக்கிறாள்)

**தேவ** : (சற்றுப் பிறகு) நீ பேசாம இருந்து தோற்கடிக்கிறாய் இல்லியா ?

**ஜானு** : கடவுளே, இதென்ன பாடு. பேசினாக் குத்தம். பேசாம இருந்தாக் குத்தம். அப்ப நான் என்ன செய்யணும் சின்னம்மா ?

**தேவ** : நீ என்ன செய்யணும் இல்லே ? நான் சொல்லித் தரேன் நீ என்ன செய்யணும்னு. நீ இந்த வீட்டிலிருந்து போகணும். உனக்கொரு வீடு இருக்கு. புருஷன் இருக்கான். குழந்தைங்க இருக்கு, ஒனக்கு இங்க வேலையில்லை. நீயும் செய்கையில் இறங்கு. எனக்குப் பார்க்கணும் இதெல்லாம் எங்க போய் முடியும்னு.

**ஜானு** : ஐயோ, என் தங்கச் சின்னம்மா, நீங்க அஞ்சுபேர் வயத்துல அடிக்கிறீங்க. நான் என்ன தப்பு செய்தேன் ? (அழுகிறாள்) நான் இங்கே யாருட்டயாவது மரியாதைக் குறைவா நடந்துருக்கேனா?

**தேவ** : டீ, நீயெல்லாம் ஒட்டுண்ணிகளாக்கும். என் உழைப்பின் பலனை அனுபவிக்க என்னைச் சுற்றி ஒட்டி நின்று, என்னை சிநேகிக்காமல், என் துக்கத்தில் சந்தோஷமடைந்து என்னைக் கிண்டல் செய்பவர்கள் !

**ஜானு** : என்னை அக்கூட்டத்தில் சேர்க்கக் கூடாது சின்னம்மா. நான் இடுப்பொடிய வேலைசெய்துதான் சோறு தின்னுறேன்.

**தேவ** : இடுப்பொடியாமல் சுகமாயிருந்து மற்றவங்க என்னை ஏமாற்றுகிறபோது நீ மட்டும் வேலை செய்து காலம் கழிக்க வேண்டாம். நீபோயிடு.

**ஜானு** : நான் போயிடறேன். நீங்க நல்லாருந்தா போதும்

**தேவ** : அந்தப் பேச்சும் தோற்கடிக்கிறதுக்கான பேச்சுத் தான. அந்தத் தொனி, 'ஜெயிச்சுட்டேன்' என்கிற மாதிரி இருக்கும், 'நீங்க நல்லாருந்தா போதும்'னு. அதுக்கு நீ நினைக்கிற அர்த்தம் நான் ஒரு போதும் நல்லாயிருக்க மாட்டேன் என்று தான். அடீ... நான் நல்லாயில்லைன்னா எனக்குத்தான் நஷ்டம். நீயெல்லாம் என்னை நல்லாக்குறதுக்கு முயற்சி செய்தது

போதும். ஒண்ணு நினைவு வச்சுக்க ஜானு. நீங்கள் ஒன்று சேர்ந்து விளையாட்டுக் காட்டப் பார்த்து, அழகு காட்டினது எல்லாம் ஒரு பிசாசையாக்கும். உம் போய்க்கொள்.

**ஜானு :** அத நான் இப்பத்தான் புரிஞ்சுக்கிட்டேன்.

(அழுதுகொண்டு வெளியேறுகிறாள். கிருஷ்ணப் பணிக்கர் தள்ளாடித் தள்ளாடிப் பிரவேசிக்கிறார். வீழ்ந்துபோன கர்வமும் உடைந்த மனத்தையும் காட்டும் முகபாவம்.

**கிருஷ்ண :** மகளே, தேவகிக் குட்டி, உன்னைக் கூப்பிட ஆஃபீஸிலிருந்து ஆள் வந்திருந்ததே, நீ போகலியா ?

**தேவ :**இல்லைப்பா.

**கிருஷ்ண :** ஏன் மகளே ?

**தேவ :** எனக்கு உடம்பு நல்ல சுகமில்லை.

**கிருஷ்ண :** உனக்கு சுகமில்லைன்னா சர்க்கார் வேலை நடக்க வேண்டாமா ?

**தேவ :** எனக்கு என் சுகம்தான் பெரிது.

**கிருஷ்ண :** போக வேண்டிய காரியத்துக்குப் போகாமலிருந்தால் நாளைக்குக் கெட்ட பேரில்லையா ?

**தேவ :** இன்றைப்பாடு ஆனபிறகு தானே நாளை ?

**கிருஷ்ண :** மகளே, நமக்கு இனிமேல் அந்த ஒரு மானமே இருக்கிறது. அதுக்கு ஆபத்து வந்தால் அப்புறம் வாழ்ந்திருந்து பிரயோஜனமில்லை.

**தேவ :** அந்த மானம் பெரிசில்லை. இன்று நாக்குகள் பேசுவதை யோசித்தால் நாளை பேசுவது பரவாயில்லையென்று தோன்றும்.

**கிருஷ்ண :** என்ன செய்யறது ? (பெருமூச்சுடன்) அந்த துரோகி என் குழந்தையையும் பைத்தியமாக்கி விட்டான். அப்புறம் என்ன செய்யறது ? ஜனங்களுக்குப் பேசுகிறதுக்குக் கூடி வந்திருக்கிற வேளை.

**தேவ :** பாவம், அந்த சாதுவைத்தான் திரும்பவும் திட்டறீங்க.

**கிருஷ்ண :** பின்னே என்ன ? அவன்தான் அவளையும் பேசிக் கலைச்சு அந்த மாதிரியாக்கினது. இல்லாட்டா என் மகள்கிட்ட அப்படி ஒரு குதியாட்டம் கிடையாது.

**தேவ :** ஹா, என் மகளுக்கு அப்படி வருமா ? ஒருபோதுமில்லை. இல்லாவிட்டாலும் என்ன ? சே, ஒன்றுமில்லை, மகள் ஜெயிச்சுருக்காளில்லையா ?

**கிருஷ்ண** : ஓ, அதெல்லாம் அந்தக் காசுக்கு உதவாதவன் சொல்லிக் கொடுத்து எழுத வச்சதாக்கும் தேவகிக் குட்டி, நீ அதைப் பெரிதாகப் பொருட்படுத்தினாயா ?

**தேவ** : அதுவும் மகள் பேரிலில்லை. அந்த சாதுவின் தலையில்தான்.

**கிருஷ்ண** : என் சின்னப் பயலும் அவனுடைய அம்மாவும் கூடி அன்றைக்கே சொன்னாங்க, அவன் அவளையும் பைத்திய மாக்கிடுவான்னு. பார்த்தியா, அது போலவே ஆயிட்டுவது.

**தேவ** : இப்போதும் மகள் பைத்தியமானதுலதான் மனக் குறை.

**கிருஷ்ண** : பின்னே இல்லியா? அந்த ஊர் சுற்றி போயிட்டா அவளும் அப்படியே போகணுமா? அவளும் குழந்தையுமா இங்கே இருந்திருக்கலாமில்லையா ?

**தேவ** : சரிதான். புருஷன் இல்லாமல் அவள் இங்கே இருந்துடுவா !

**கிருஷ்ண** : பாவம், என் குழந்தைக்கு இப்போ தினமும் ஒரு நேரம் சாப்பாடாவது கிடைக்கிறதோ என்னவோ ?

**தேவ** : சாப்பாடு கிடைக்காவிட்டாலும் அவள் புருஷனோடு சேர்ந்தல்லவா இருக்கிறாள் ?

**கிருஷ்ண** : ம், ஒரு விதத்தில் நீ சொல்வதில் விஷயம் இருக்கு மகளே. எந்த நிலையிலும் புருஷனோடு சேர்ந்தல்லவா வாழ்கிறாள் ?

**தேவ** : மகளைப் புகழ்வது அம்மா அப்பாவைப் புகழ்வதற்கு சமமில்லையா !

**கிருஷ்ண** : ஆனாலும் குழந்தே, அவள் அங்கே எப்படி இருப்பாள் ? ஒழுங்கான சாப்பாடோ, மனதுக்குப் பிடிச்ச துணியோ, எண்ணெய்க் குளியலோ அங்கே கிடைக்குமா? அந்தக் குழந்தைக்கு ஏதாவது உடம்புக்கு வந்திருக்குமோ என்னவோ. இங்கேயிருந்து போகும்போதே அதுக்கு உடம்பு அவ்வளவு சரியில்லாமலிருந்தது. இங்கே அவங்களுக்கு எவ்வளவு சுமாயிருந்தது !

**தேவ** : இங்கே சுகத்துக்கு என்ன குறை ? எதனால் குறை ? இங்கே நான் இருக்கும்போது என் தங்கைக்கு ஏதாவது குறை வருமா ?

**கிருஷ்ண** : பின்னே என்ன, கஷ்டகாலத்துக்கு அவளுக்கு அப்படித் தோன்றியது.

**தேவ** : இல்லை, நடத்திக் காட்டணும்னு ஒரு ஆசை யாருக்கும் தோன்றுமில்லையா ?

**கிருஷ்ண** : அவள் என்ன நடத்திக் காட்ட இருக்கு ? சாதுக் குழந்தை.

**தேவ** : அவளொரு மனைவியல்லவா ?

**கிருஷ்ண** : அதனால் ?

**தேவ** : நிறைய நடத்திக் காட்ட முடியுமாயிருக்கும்.

**கிருஷ்ண** : அப்படின்னா ?

**தேவ** : அப்படித்தானே கடிதத்தில் எழுதியிருக்கு ?

**கிருஷ்ண** : நான் சொல்லலியா, அதெல்லாம் அந்த முட்டாள் சொல்லிக் கொடுத்து எழுதியிருக்கிறதாக்கும்.

**தேவ** : ஒரு போதுமில்லைப்பா.

**கிருஷ்ண** : உனக்கெப்படித் தெரியும் ?

**தேவ** : நான் அவளைப் புரிந்து கொண்டிருப்பதைப் போல நீங்கள் அவளைப் புரிந்துகொள்ளவில்லை.

**கிருஷ்ண** : அப்போ அவள் நம்மிடமுள்ள வெறுப்பினால் அந்தக் கடிதம் எழுதியிருக்கிறாள் என்றா நீ சொல்கிறாய் ?

**தேவ** : அவள் நம்மைத் தோற்கடிக்க முயற்சி செய்கிறாள்

**கிருஷ்ண** : உனக்குப் பைத்தியமா ?

**தேவ** : என் பைத்தியத்தில் எனக்கு அப்படித் தோன்று கிறதாயிருக்கலாம்.

**கிருஷ்ண** : நான் இதை எப்படி நம்புவது தேவகிக் குட்டி ?

**தேவ** : "நான் உங்கள் பார்வையில் மடைச்சி என்றாலும் இதை விட அதிகமான வெற்றி எனக்குக் கிட்டாது." என்றால் என்ன தான் அர்த்தம் ?

**கிருஷ்ண** : அவள் போகிறதினால் சந்தோஷப் படுகிறாள் என்று.

**தேவ** : இல்லை, அவள் நம்மைத் தோற்கடித்திருக்கிறாள் என்று.

**கிருஷ்ண** : அந்த அர்த்தம் நீ மட்டுமே காண்கிறாய்.

**தேவ** : என்ன செய்யலாம் ? நீங்கள் சொன்னது போல எனக்குப் பைத்தியமாயிருக்கலாம். அந்தப் பைத்தியத்தில் நான் பலவும் காண்பேன் - கேட்பேன் – செய்வேன்.

**கிருஷ்ண** : அந்த நெரிசலில் ஆஃபீசுக்குப் போகிற விஷயம் மறந்து போகாதா ?

**தேவ** : அது மட்டும் போதும், இல்லையா ?

**கிருஷ்ண** : *சும்மா நான் உனக்கு உபதேசம் பண்ணி மடையனாவானேன் ? உனக்குத் தெரியாதா நல்லது கெட்டது ?*

**தேவ** : *அதில்லை, உங்கள் பங்குக்கு நீங்களும் உபதேசம் பண்ணிப் பார்க்கணும்.*

**கிருஷ்ண** : *எனக்கு முடியாது, என் கடவுளே! (போகிறார் தேவகிக்குட்டி சிந்தனாவயப்பட்டு உலாவுகிறாள்).*

**தேவ** : இன்னும் மற்றவரெல்லோரும் ஒரு பக்கம், நான் தனி. *யாரங்கே ? குட்டா, குட்டா ! (குட்டன் என்கிற பையன் நுழைகிறான்). டேய், ராஜன் அங்கே எங்கேயாவது இருக்கானா ?*

**குட்டன்** : பக்கத்து வீட்டில் சீட்டாடிக் கொண்டிருக்கார்.

**தேவ** : சட்டுனு இங்க வரச் சொல்.

**குட்டன்** : *சீட்டாடறப்போ போய்ச் சொன்னா கோபப் பட்டு அடிக்க வருவார், சின்னம்மா.*

**தேவ** : *சீட்டாட்டம், கள்ளுக்குடி, விபசாரம் எல்லாம் என் செலவில் (ஈஸிசேரில் போய்ச் சாய்கிறாள். சில விஷயங்களை யோசித்துத் தீர்மனிக்கிறாள். ராஜசேகரன் வருகிறான்).*

**ராஜ** : *அக்கா, என்னைக் கூப்பிட்டியா ?*

**தேவ** : *ஆமாம், என்னிடம் கொஞ்சம் முகத்தைக் காட்டினால் பரவாயில்லையென்று தோன்றியது.*

**ராஜ** : *(பின் வாங்குகிறான்).*

**தேவ** : *திரும்பி எழுந்தருள அவசரமோ ?*

**ராஜ** : *நீ ரொம்பக் கோபமாப் பேசறே.*

**தேவ** : *டேய், நாயே ! நான் கோபப் படுவதா உனக்குப் பிடிக்கலை ?*

**ராஜ** : *நான் என்ன வேணும்னாலும் கேட்டுக்கிறேன் அக்கா. நான் என்ன தப்புச் செய்தேன்னு சொல்லு.*

**தேவ** : *ஓ, கேட்கிறது நீ பெரிய மனசு பண்ணி. ஒன் பெரிய மனசு.*

**ராஜ** : *பெரிய மனசில்லை. என் கடமை.*

**தேவ** : *உன் கடமையை நீ இதுவரை புரிந்து கொள்ளவில்லை.*

**ராஜ** : *நீ அதை இதுவரை புரிய வைக்கவில்லை.*

**தேவ** : *டேய், நீ வெட்கமில்லாமச் சொல்றே நான் புரிய வைக்கல்லைன்னு. நீ பிறகு ஏன் இப்படி ஒரு இளைஞனென்றும், நாகரிகமானவனென்றும் சொல்லிக் கொண்டு திரிகிறாய் ?*

**ராஜ** : நாகரிகத்திற்கும், யோக்யதைக்கும் இன்றுவரை குறைவு வந்ததில்லை அக்கா. இன்றைக்கும் இந்த டௌனில பத்து இளைஞர்களின் கூட்டத்தில் நான் தான் முன்னணியில்.

**தேவ** : ஆமாம், முன்னணியில்தான், சீட்டாட, கள்ளுக் குடிக்க, தொரைபோல நடக்க, வீட்டுக்காரங்களை ஒழிச்சுக் கட்ட.

**ராஜ** : அது எப்படியோ போகட்டும். இந்த எல்லாச் சிறப்புக்களினாலேயும் இந்த வீட்டுக் காரங்களை இன்று இந்த டௌனிலுள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். நமக்காக இந்த டௌனிலுள்ள ஓரளவு இளைஞர்களெல்லாம் வேண்டுமானால் கழுத்தை வெட்டித் தருவார்கள்.

**தேவ** : டேய், எரப்பாளி ! நீயும் ஒன் இளைஞர்களும் ! எனக்கு அவங்களைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லை, நான் காலை முதல் மாலை வரை வேலை செய்து சேர்க்கும் பணத்தை வாரியடிச்சு, கழுத்தை வெட்டித் தரும் கொஞ்சம் இளைஞர்களை நீ விலைக்கு வாங்குவாய் இல்லையா ? டேய், உனக்கு வயசு முப்பதாச்சு இல்லே ? இது வரையிலும் ஒரு பைசா நீ சொந்தமா சம்பாதிச்சிருக்கியா ?

**ராஜ** : எனக்கு அந்தத் தேவை இதுவரை உண்டாகவில்லை.

**தேவ** : நாலு காசு சம்பாதிக்க முடிகிற ஒரு சின்னத் தொழிலாவது நீ பழகியிருக்கியா ?

**ராஜ** : ஓ, அது அத்தனை பெரிய காரியமொண்ணுமில்லை. ரெண்டே நாள்ள படிச்சுக்கலாம். அவ்வளவு தான்.

**தேவ** : டேய், உன் தங்கை அந்தப் பைத்தியக்காரனின் பின்னால் ஓடிப் போனபின் நீ அதைப் பற்றி ஒரு ஒரு நிமிஷ நேரமாவது யோசிச்சுப் பார்த்தியா?

**ராஜ** : யோசிச்சு எனக்கு என்ன ஆகணும் ? நான் வேண்டிய அளவு அப்பாகிட்டயும் அம்மாகிட்டயும் சொல்லிட்டிருந்தேன். "அந்த ஆசாமி உதவாக்கரை. அவன் ஒரு ஜென்டில்மேன் இல்லை. கவனமாயிருக்கணும்"னு, சொல்லலாமே தவிர வேற....

**தேவ** : இதைக் கேட்டால் தோன்றும்: "எல்லாப் பொறுப்புக்களும் அப்பா அம்மாவுக்குத்தான். நான், வரப்போவதை முன்கூட்டியே சொல்லும் ஒரு ஜோஸ்யனாக்கும்" என்று. உனக்கு இதில் ஒரு பொறுப்பும் இல்லாத மாதிரியல்லவா பேசுகிறாய்?

**ராஜ** : அந்த விவாக விஷயத்திலும் எனக்கு ஒரு பொறுப்பும் இருக்கவில்லை. அப்புறம் இப்போ என்ன பொறுப்பு ?

**தேவ** : ஒரு பொறுப்புமில்லை, இல்லையா ? உனக்கு இந்த வாழ்க்கையில் ஏதாவது பொறுப்பு இருந்ததா ?

**ராஜ :** மிகவும் பெரிய பொறுப்பு மட்டும். வாழவேண்டும் என்பது ...

**தேவ :** அந்தப் பொறுப்பை நீ ஒரு மிருகத்தைப் போல நடத்துகிறாய். டேய், குறைந்த பட்சம் பாரதி உன் சகோதரி என்று சம்மதிக்கிறாயோ ?

**ராஜ :** நீ என்னை வேதனைப் படுத்துகிறாய்.

**தேவ :** ஆமாம், நீங்களெல்லாம் துன்பப் படுவதைப் பார்க்கையில் எனக்குச் சொல்ல முடியாத ஓர் ஆனந்தம் உண்டாகிறது.

**ராஜ :** பாரதி மட்டும் இல்லாமலிருந்தால் நான் அந்தக் காட்டானை முதல் நாளே இங்கிருந்து விரட்டியிருப்பேன்.

**தேவ :** அப்புறம் அந்த பாரதிதான் இப்போது அவன் பின்னால் ஓடிக் காட்டுக்குள் நுழைந்திருக்கிறாள்.

**ராஜ :** உங்களுக்கெல்லாம் பயந்துதான், முக்கியமாக பாரதியை நினைத்து, அவன் மேல் நான் கை வைக்காமல் விட்டேன்.

**தேவ :** ராஜா, உன்னுடைய இந்த வாய்ச் சவடாலை அப்படியே வச்சுக்கோ. எனக்கு அதைக் கேட்க வேண்டாம். நீ இப்படிப் பேச மட்டுந்தான் பழகியிருக்கிறாய்.

**ராஜ :** பேச மட்டுமல்ல; நடத்திக் காட்டவும் நான் படிச்சிருக்கேன்.

**தேவ :** அப்படியிருந்தால் உன்னை இப்போதுவரவழைத்துப் பேச வேண்டிய அவசியம் எனக்கு வந்திருக்காது. டேய் நாகரிகமானவனே, உனக்குத் தெரியுமா உன் சகோதரி இப்போது எங்கே இருக்கிறாளென்று ?

**ராஜ :** அந்தக் கிறுக்கன் செல்லப்பன் பிள்ளையோடு. அதில் இத்தனை சந்தேகப்பட என்ன இருக்கு ?

**தேவ :** அட படுமுட்டாளே, நாலு ஆண்களும் பெண்களும் கூட மொத்தமாய் இல்லாத ஒரு நாட்டுப் புறத்து மூலையில் வெறும் ஒரு மண் குடிசைக்குள்ளே, குழந்தையை வெறும் தரையில் கிடத்தித் தாலாட்டுப் பாடி உறங்க வைத்துக் கொண்டிருப்பாள் அவள். தினம் ஒரு வேளை சாப்பிட வக்கில்லாமல் வாடிக் கொண்டிருப்பாள் என் தங்கை. (அழும் பாவனையுடன்) இங்கேயிருந்து உடுத்துக்கொண்டு போன துணியை இதுவரை அவள் மாற்றிக் கூட இருக்க மாட்டாள். அப்படியும் நீ யோக்கியன் மாதிரி, தடித்த தோலுமாக, ஆண்களின் நடுவே ....

**ராஜ :** அக்கா, நான் நினைத்தால் இதில் என்ன செய்ய முடியும் ?

**தேவ** : டேய், உன் சகோதரியின் வேதனையைப் புரிந்து கொள்ள முடியாவிட்டால் வேண்டாம். அதற்குக் கொஞ்சம் அன்பு இருந்தால்தானே முடியும். இன்றைக்கு இந்த டௌனில் சின்னப் பிள்ளைகள் கூடப் பாடிக்கொண்டுதிரியும் அபவாத மாவது உன் தலையில் ஏறுவதில்லையா ?

**ராஜ** : அக்கா, நீ என்னைத் திட்டறியே தவிர நான் கேட்கிறதுக்கு பதில் சொல்லுறதில்லை. அக்கா, நான் என்ன செய்யணும் ?

**தேவ** : வீட்டிலிருக்கும் பெண்களை விட பத்துபேருக்கு நடுவில் வளைய வரும் உனக்கல்லவா இந்தக் கெட்ட பெயர் ? இல்லாவிட்டால் உனக்கென்ன கெட்ட பெயர் !

**ராஜ** : அக்கா என்னை ரொம்பச் சங்கடப் படுத்துகிறாய். நான் என்ன வேண்டுமானாலும் செய்கிறேன். நீ கொஞ்சம் கோடி காட்டித் தந்துட்டா போதும்.

**தேவ** : இனிமேலும் நான்தான் கோடி காட்டணும் இல்லையா ? உனக்குப் புரிவதில்லை. சரி, நானே உன் தலையில் அடிச்சு ஏற்றுகிறேன். நீ எப்படியாவது பாரதியைத் திருப்பிக் கொண்டு வந்து இங்கே இருக்க வைக்கணும்.

**ராஜ** : நான் இந்த நிமிஷமே போகிறேன். கிராமத்துக்குப் போவது என்னைக் கொல்லுவதற்கு சமமானாலும் நான் இப்போதே போகிறேன். நாளை பாரதியை இங்கே பார்க்கலாம். அக்கா, அந்த வேலையை நான் ஏற்கிறேன்.

**தேவ** : இதில் இன்னும் நீ ஏற்றுக்கொள்ள என்ன இருக்கிறது ? இதைக் கேட்டால் ஏதோ நீ எனக்காக ஒரு உதவி செய்வது போல் தோன்றும். வேண்டாம், நீ போக வேண்டிய அவசியமில்லை.

**ராஜ** : நான் போகத்தான் செய்வேன். அது என் கடமை.

**தேவ** : வேண்டாம் ராஜா, நீ போய் சும்மா அபவாதங்களைத் தலையில் இழுத்துப் போட்டுக் கொள்ள வேண்டாம்.

**ராஜ** : இல்லை அக்கா, நான் போகத் தீர்மானித்தாயிற்று. என்ன அபவாதம் ? என்ன அபவாதமானாலும் நான் நினைத் தால் நீக்க முடியும்.

**தேவ** : நீ திரும்பவும் சவடால் அடிக்கிறாய். அதை மட்டும் எனக்குக் கேட்க வேண்டாம். நான் கேட்கட்டும், செல்லப்பன் பிள்ளை எந்த விதத்திலும் அவளை அனுப்பவில்லையானால்.

**ராஜ** : அப்புறம் அவன் வாழ்வது இந்த உலகத்திலிருக்காது.

**தேவ** : இது ஒரு முதல்தரமான முட்டாளின் பதில். ராஜா, நீ அவனோடு மோத வேண்டுமென்பதில்லை. நீ பாரதியின் மனத்தை மாற்றப் பார்க்கணும். அது தான் மிக முக்கியம்.

**ராஜ** : நான் பார்க்கட்டும், என் சகோதரி நான் சொன்னால் கேட்பாளோ என்று.

**தேவ** : பின்னே ? கேட்க வேண்டிய கடமை இல்லையா ? சகோதரியின் எல்லாச் சுமைகளையும் சுமந்து கஷ்டப்படும் சகோதரன் ஆச்சே !

**ராஜ** : உனக்கு என்னைக் கேலி பண்ணணும்னு இருக்கு. எனக்கு சொல்ல பதில் இல்லை. நான் பாரதிக்காக எதுவும் செய்வேன்.

**தேவ** : இந்த தியாக சீலனுக்குத்தான் இன்றைக்கு என்ன செய்ய வேண்டுமென்று நான் சொல்ல வேண்டியிருந்தது.

**ராஜ** : நீ எனக்கு ஒரு விஷயம் சொல்லித் தருவதில் எனக்கு ஒரு அவமானமுமில்லை. அந்த கண்ட்ரி செல்லப்பன் பிள்ளை உபதேசிப்பதைக் கேட்கும் போதுதான் எனக்குத் தலைநோவு உண்டாகிறது.

**தேவ** : அதன் காரணம் தெளிவானது. உனக்கு நான் செலவுக்குத் தருகிறேன். அவன் தருவதில்லை.

**ராஜ** : அக்கா நான் சாவது வரை செலவுக்குத் தந்தாலும் எனக்குப் பெருமை தான்.

**தேவ** : அப்படின்னா சாவது வரை ப்ரோக்ராம் நீ போட்டாச்சு. வெட்கக்கேடு, ஒட்டுண்ணிகள்

**ராஜ** : ஆமாமாம், உலகத்தில் எல்லோரும் அப்படியே வேலை செய்து வாழ்கிறார்களாக்கும் !

(ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரிக்கிறான்)

**தேவ** : இந்தச் சிரிப்பொன்றையும் இப்போது பார்க்க வேண்டாம். நாளை சாப்பாட்டுக்கு என் தங்கை என் அருகிலிருக்க வேண்டும். அப்புறம் சிரித்தால் போதும்.

**ராஜ** : மூன்றுதரம். நான் இதோ போகத் தயாராயிற்று (போகிறான்)

**தேவ** : (உவகை பொங்கச் சிரிக்கிறாள்). நடத்திக் காட்டுபவர்களை நான் பார்க்கட்டும். வெற்றி தோல்வியை நிச்சயிக்க வேண்டும். (சிறிது கழிந்து) அவள் வருவாள் ; செல்லப்பன் பிள்ளை வரமாட்டான். அதுதான் என் வெற்றி–அது அவளுடைய தோல்வி.

**(திரை)**

# காட்சி நான்கு

*(மாதவி சதனத்தின் ஒரு அறை, மாதவியம்மையும் வேலுப் பிள்ளையும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். மாதவியம்மை கவலையுடனும் துக்கத்துடனும் காணப்படுகிறாள்)*

**மாதவி :** இப்படி நரைச்சுக் கிரைச்சுப் போன நானோ அந்தப் பிள்ளைகளோட அப்பாவோ கூடச் செத்துப் போயிட்டுருந்தாலும் பரவாயில்லை வேலுப்பிள்ளை. இதைவிட இனிமெ வேற கேடுகாலமா இந்த வீட்டுக்காரங்களுக்கு வரப்போவுது ?

**வேலு :** உம், என்ன செய்யலாம் அம்மா, நாம நெனைக்கிற படியா ஒவ்வொண்ணும் வந்து சேருது ?

**மாதவி :** ஐயோ, கடவுளே ! என் கொழந்தை இப்போ ஜெயில்ல கெடந்து மூட்டைப் பூச்சிக் கடி பட்டுக்கிட்டுருப்பானே! அவனுக்கு இப்படி நேரும்னு யாரு நெனைச்சாங்க வேலுப் பிள்ளை. எவ்வளவு நல்ல குணம் அவனுக்கு !

**வேலு :** கேட்டீங்களாம்மா, அவரு மட்டும் போயிருந்தா இதொண்ணும் ஆயிருக்காதுண்ணேன். அந்தக் கெட்ட சிநேகிதங்களையும் சேர்த்துக்கிட்டுப் போனதுனாலதான் இந்தத் தகராறெல்லாம் வந்தது.

**மாதவி :** அவன் அதோட எங்கிட்ட ஒரு வார்த்தை கூடச் சொல்லாமப் போனானே. சொல்லியிருந்தா நான் எப்படியும் சம்மதிச்சிருக்க மாட்டேன்.

**வேலு :** அதெல்லாம் ஏன் செய்றீங்கம்மா ? அந்தச் செல்லப்பன் பிள்ளையவங்க ஆயுசு அவ்வளவுதான். வேற என்ன சொல்றது ?

**மாதவி :** அவனுடைய ஆயுசு அவ்வளவுதான்னாலும் என் புள்ளாண்டானுக்கில்லையா வேலுப்பிள்ளே இந்தப் பழி யெல்லாம் வந்து சேர்ந்தது !

**வேலு :** ஹூம், அது பின்னே குற்றம் செஞ்சா சர்க்கார் சும்மா விட்டுடுவாங்களா ? எவ்வளவு பெரிய ஆளானாலும் அனுபவிச்சே ஆகணும்.

**மாதவி :** எல்லோரையும் போலயுமா வேலுப்பிள்ளை, என் குழந்தை? அவன் ஒரு சின்னக் கஷ்டம் கூட வாழ்க்கையில்

அனுபவிச்சதில்லை. சோத்துல ஒரு கருப்பு அரிசி கெடந்தா அன்றைக்கு வீட்டைத் தலைகீழாக்கிடற சுபாவம். எல்லோருக்கும் தினசரி ஒரு தடவை துணி மாற்றினா போதும். அவனுக்கு ரெண்டு மூணு தடவை மாற்றணும். அப்படியிருந்த என் கொழந்தைக்கு இப்போ (விம்மியழுகிறாள்) தளிர்ந்த சோறும் கனத்த உடுப்பும்.

**வேலு :** அது பாருங்கம்மா, எப்பவும் ஒரே மாதிரியிருக்குமா ? மேடு இருந்தா பள்ளமும் இருக்கும். இன்றைக்கு சுகம் அனுபவிச்சா நாளை துக்கம்.

**மாதவி :** இதெல்லாம் அந்தக் துப்புக் கெட்ட பெண்ணால ஏற்பட்டதில்லையா வேலுப்பிள்ளே. இத்தனைக்கப்புறம் அவள் எழுதியனுப்பியிருக்கிறதைப் பார்த்தீல்லியா? அவளுடைய புகுந்த வீட்டுக்காரங்க இன்னும் அங்கே இருக்காங்களாம்; அதனால இனிமேலும் இங்கே வரமாட்டாளாம்.

**வேலு :** ஆஹா, அப்படி எழுதியனுப்பிட்டாங்களா அம்மா ? ரொம்பக் கடினம் தான் அவங்க மனசு.

**மாதவி :** அவள்தான் மனைவியாம். வேற யாரும் மனைவிமாரைக் கண்டதில்லையாக்கும். கூலி வேலை செய்தாவது அந்தக் கிறுக்கனின் வீட்டுக்காரங்களை பட்டினி போடாமப் பார்த்துக்க வேண்டியது அவள் கடமை போலிருக்கு. கஷ்டம், நான் இப்படி ஒண்ணைப்பெத்துப் போட்டேனே வீட்டை நாசமாக்க.

**வேலு :** ஐயோ, அப்படிப் பொல்லாத வார்த்தை சொல்லாதீங்கம்மா, கடவுளுக்கு அடுக்காது. எப்படித் தெரியும் – இதையெல்லாம் பார்த்துக்கிட்டிருக்கிற கடவுள்தான் இனிமே ஒரு நல்ல வழி காட்ட மாட்டான்னு ?

**மாதவி :** நல்லாக் காட்டினான். கேட்டியா வேலுப் பிள்ளே, இதையெல்லாம் எப்படியாவது உள்ளே வச்சுக்கிட்டுக் கெடக்கலாமாயிருந்தது, இனிமே ஜனங்க என்னவெல்லாம் கதை கட்டுவாங்க. இரை கெடைக்காமப் பசியோடிருந்த கழுகு முன்னாடியில்லே இப்போ அகப்பட்டுக்கிட்டிருக்கோம்.

**வேலு :** அதுதான் அம்மா இங்க விஷயம். அப்படி ஜனங்க கண்டதைச் சொல்லத் தொடங்கினா சின்னம்மாவுக்கு எவ்வளவு அவமானம் தெரியுமா ? இப்பவே எல்லாரும் மெதுவா ஆஃபீஸுல சொள்ளையும் சொட்டையும் பேச ஆரம்பிச்சிருக்காங்க.

(மாதவியம்மை விரக்தியுடன் தலையைக் கையால் தாங்கிக் குனிந்தமர்கிறாள். தேவகிக் குட்டி வருகிறாள். மலர்ச்சி, நெஞ்சுரம். நிம்மதி முதலிய பாவங்கள் முகத்தில் விளையாடுகின்றன).

**தேவ** : வேலுப்பிள்ளை, இந்தப் பேப்பரை ஆஃபீஸில் கொண்டு போய்க்கொடுங்க, என்ன ?

**வேலு** : உத்திரவு, இன்றைக்கும் அங்கே வரலையா சின்னம்மா ?

**தேவ** : வருகிற விஷயமெல்லாம் அந்தப் பேப்பரில் எழுதியிருக்கேன். கொண்டுபோய்க்கொடுங்க.

**வேலு** : உத்திரவு. நான் இன்றைக்கு இங்கே வரணுமா சின்னம்மா ?

**தேவ** : இன்றைக்கு வரவேண்டாம். நாளை இங்கே வரணும்.

**வேலு** : உத்திரவு. வரும்போது ஃபைலும் .... ?

**தேவ** : ஃபைலொண்ணும் கொண்டு வர வேண்டியிராது. வேலுப்பிள்ளை வந்தா போதும்.

**வேலு** : உத்திரவு.

**தேவ** : நாளைக் காலையில் அந்த ஜானுவின் வீட்டுக்குப் போய் அவளை இங்கே வரச் சொல்லணும்.

**வேலு** : உத்திரவு (போகிறான்)

**மாதவி** : மகளே, அந்தக் கேஸ் விஷயம் என்னாச்சு ?

**தேவ** : நான் விசாரிக்கலை.

**மாதவி** : ஜாமீன் கிடைக்குமா என் குழந்தைக்கு ?

**தேவ** : கிடைச்சுட்டா பரவாயில்லை.

**மாதவி** : நல்லா ஊக்கப் படுத்தணும் மகளே, எப்படியாவது கேஸை நடத்தி என் குழந்தையை விடுவிக்கணும். வேண்டி வந்தா பத்து காசு லஞ்சம் கொடுத்தாலும் பரவாயில்லை.

**தேவ** : என்னவானாலும் தைரியமாயிருப்பதுதான் நல்லது.

**மாதவி** : வக்கீல் என்ன சொன்னார் ?

**தேவ** : நான் வக்கீலைப் பார்க்கலை. அதிருக்கட்டும் அம்மா, நான் ஒங்கிட்ட சில விஷயங்கள் பேசணும்.

**மாதவி** : கேஸைப் பற்றியா ? சீக்கிரமாச் சொல்லு.

**தேவ** : இல்லை.

**மாதவி** : பின்னே ?

**தேவ** : என்னைப் பற்றி

**மாதவி** : உன்னைப் பற்றியா ? உன்னைப் பற்றிப் பேச என்ன இருக்கு ?

**தேவ :** நிறைய இருக்கு. சொல்ல வேண்டியதை முழுவதையும் என்னால் சொல்ல முடியும்னு தோணலை. நூறில் ஒரு பங்காவது சொன்னால் எனக்கு எத்தனை நிம்மதியாகும்?

**மாதவி :** சீக்கிரம் சொல்லு மகளே, என்னால் கேட்டுட்டுருக்க முடியலை.

**தேவ :** அம்மா, நான் என் தோல்வியை ஒப்புக்கிறேன்.

**மாதவி :** தோல்வியா ? உனக்கென்ன தோல்வி ? பைத்தியக் காரப் பெண் ?

**தேவ :** என் தங்கை பாரதி ஜெயித்து விட்டாள். நான் தோற்றேன்.

**மாதவி :** இதென்ன கூத்து ! எனக்கொண்ணும் புரியலை என் குழந்தே !

**தேவ :** அவளுடைய கடைசிக் கடிதம் வெற்றி தோல்வியைத் தீர்மானித்தது. அதன் ஒவ்வொரு வார்த்தையும் அவள் வெற்றி பெற்றாளென்றும் நான் தோற்றேனென்றும் கூவியழைத்துச் சொல்கிறது.

**மாதவி :** நீ இப்படிச் சொல்றதிலிருந்து நான் என்ன புரிஞ்சுக்கணும் தேவகிக் குட்டீ ? தலையில புத்தியிருக்கிற நீ இப்பிடிப் பேசத் தொடங்கினா ....

**தேவ :** அம்மா இதையும் புரிஞ்சுக்கணும். பாரதி என் குரு. அவள் எனக்குக் கற்றுக் கொடுத்தாள், எனக்கு உபதேசித்தாள். ஒரு பெண்ணின் வாழ்க்கையில் மிகவும் உன்னதமான பதவி எதுவென்று எனக்குப் புரிய வைத்தாள்.

**மாதவி :** இதிலிருந்து புரிஞ்சுக்க வேண்டியது என்னன்னா அந்தப் பெண்ணின் அசட்டுத் தனங்கள் உன்னிலும் படர்ந்திருக்கிறன்றன என்று தான்.

**தேவ :** இல்லையம்மா, ஒரு மனைவியால் முடிந்தவைகளை அவள் எனக்குப் புரிய வைத்தாள்.

**மாதவி :** ஒரு மனைவிக்கு முடிந்தது வீட்டிலுள்ளவர்களை அவமானப் படுத்துவதும், அந்நியனின் கேலிக்குப் பாத்திரமாவதும் தான் இல்லையா ?

**தேவ :** இல்லை, அவளுடைய கடிதத்தில் சொல்லியிருப்பது போல் புருஷனின் வாழ்க்கையில் சுகம் உண்டாக்குவது தான்.

**மாதவி :** புருஷனின் வாழ்க்கையில் சுகம் உண்டாக்க அவளைப் போல எந்த நரகத்தையும் அனுபவிக்கணுமோ ?

**தேவ :** அவளுக்கு அது நரகமாகத் தோன்றவில்லை, சொர்க்கமாகத்தான் தோன்றியிருக்கிறது. புருஷனோடு அன்பு மனத்துடன் வாழ்வது தான் அவளுடைய வாழ்க்கையின் வெற்றி.

**மாதவி** : *அதை ஒரு விதத்தில் ஒத்துக் கொண்டாலும், அவளுடைய வெற்றி உன் தோல்வி ஆவது எப்படி ?*

**தேவ** : *அது ஒரு பெரிய கதை.*

**மாதவி** : *எத்தனை பெரிதானாலும் எனக்குக் கேட்டால் தான் நிம்மதியாகும்.*

**தேவ** : *அவள் ஜெயிச்சிடக் கூடாதென்று எனக்கு ஒரு கட்டாயம் இருந்தது.*

**மாதவி** : *காரணம் ?*

**தேவ** : *எனக்கு அப்படியொரு வெற்றி கிடைக்க வழியில்லாததினால்.*

**மாதவி** : *அப்படீன்னா ?*

**தேவ** : *நான் வெளிப்படையாச் சொல்லட்டுமா ? எனக்கொரு புருஷன் இல்லாததினால் எனக்குக் குழந்தைகள் இல்லாததினால். நான் ஒரு மனைவி அல்லாததினால்.*

**மாதவி** : *உனக்கு இல்லாததினால் நீ தோற்றாயென்றும் அவளுக்கு உள்ளதினால் அவள் ஜெயிச்சாளென்றுமா நீ சொல்கிறாய் ?*

**தேவ** : *ஒரு போதுமில்லை.*

**மாதவி** : *பின்னே ?*

**தேவ** : *நீங்கள் இதுவரை தெரிந்துகொள்ளாத சில விஷயங்களை நான் சொல்கிறேன்.*

**மாதவி** : *அதைத் தான் எனக்குக் கேட்கணும்.*

**தேவ** : *எனக்கும் பாரதிக்குமிடையே இருந்த அன்பு எத்தனை பரிசுத்தமாயிருந்தது என்று உங்களுக்குத் தெரியுமா ?*

**மாதவி** : *நன்றாகத் தெரியும்*

**தேவ** : *உங்களுக்குக் கொஞ்சங் கூடத் தெரியாது.*

**மாதவி** : *என்ன ? எனக்குத் தெரியாதென்றால் நான் உங்கள் தாயில்லை.*

**தேவ** : *நான் பாரதியை வெறுத்தது போல அவளை யாரும் வெறுத்திருக்க மாட்டாங்க.*

**மாதவி** : *என்னால் அதை நம்ப முடியலை.*

**தேவ** : *நீங்கள் எனக்காக நம்பணும், நான் அவளை வெறுத்தேன். அவள் என்னிடமிருந்து விலகுவதை நான் கண்டேன். நான் கை நீட்டினால் வழுக்கி ஓடிப் போகிற ஒரு நிழலாயிருந்தாள் அவள்.*

**மாதவி** : அப்படி நேர்ந்திருந்தாலும் அவள்தான் அதற்குக் காரணமாயிருந்திருக்கணும்.

**தேவ** : நிச்சயமாக இல்லை.

**மாதவி** : இல்லாம? நீயா? நீயாக இருக்க நியாமில்லை.

**தேவ** : நானும் பாரதியுமல்ல.

**மாதவி** : பின்னே யாரு? அந்த உதவாக்கரை செல்லப்பன் பிள்ளையா?

**தேவ** : பாவம், அவனுமில்லை, அவளுடைய திருமணம் தான் அதற்குக் காரணம்.

**மாதவி** : திருமணமா? ஆட்களல்ல காரணம்; துச்சமான திருமணமா?

**தேவ** : அதுதான் அந்த முக்கியமான காரணம். அன்று முதல் அவளுக்கு சஞ்சரிக்க வேறொரு உலகம் உண்டாயிற்று. சேர்ந்திருக்க வேறு சில உயிர்கள் கிடைத்தன. என்னை அவள் மறந்தாள் ... இல்லை, மறந்து போய் விட்டாள்.

**மாதவி** : அந்தப் புத்திகெட்ட பெண் அந்தத் துரோகி செல்லப்பன் பிள்ளையின் வலையில் விழுந்ததுதான் இதற்கெல்லாம் காரணம்.

**தேவ** : இல்லையம்மா, பாவம் சாது மனுஷன், அவன் மட்டுமல்ல, யார் பாரதியைக் கல்யாணம் செய்துகொண்டிருந்தாலும் இப்படித்தான் நடந்திருக்கும்.

**மாதவி** : அவனைத் தவிர வேறு யாராவது கல்யாணம் செய்துகொண்டிருந்தால் இப்படியெல்லாம் ஒண்ணும் நடந்திருக்காது.

**தேவ** : நீங்க புரிஞ்சுக்காமப் பேசறீங்க அம்மா, பாரதியின் கல்யாணத்திற்கு முன்பு வரை எங்களிடையே அன்பு எத்தனை பரிசுத்தமாயிருந்தது. நான் அவளுடைய கடவுளாகவிருந்தேன். என்னைப் பார்க்கும்போது, என்னோடு பேசும்போது, என்னோடு சேர்ந்து கேலி வம்பளக்கும்போது அவள் பரமானந்தம் அனுபவித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அம்மா, அந்தக் கல்யாணத்துடன் அதெல்லாம் தகர்ந்து போச்சு.

**மாதவி** : அதற்குப் பிறகும் ஏன் உங்களுக்கு அப்படியே நடந்துக்க முடியாமப் போச்சு? அதுதான் நான் சொன்னேன், அந்தச் செல்லப்பன் பிள்ளைதான் இதற்குக் காரணம்னு.

**தேவ** : அந்தக் கேள்விக்கு சுலபமாப் பதில் சொல்லிடலாம். அதைவிடப் பெரிய ஒரானந்தம் வந்து சேர்ந்தபோது அவள் முந்தையதைக் கைவிட்டுவிட்டாள்.

**மாதவி** : ஹோ, பெரிய ஆனந்தமாக்கும் அவனோடு சேர்ந்து கழிக்கிறது ! சொல்லணுமா?

**தேவ** : அம்மா, அவளுக்கு அப்படித் தோன்றியது. அவளை அதற்காகக் குற்றம் சொல்ல யாருக்கும் அதிகாரமும் உரிமையும் இல்லை.

**மாதவி** : நீ எல்லாத்தையும் அவளுக்குச் சொல்லித் திருத்தி சரியா ஆக்கியிருக்கலாமே.

**தேவ** : எனக்குத் திருத்தத் தோணலை. அசூயைப் படத்தான் தோணிச்சு, அவளுடைய ஆனந்தம் எனக்குப் பொறுக்கலை. அந்த மகிழ்ச்சியை நானே சம்பாதித்துக்கொள்ள நான் முயற்சி செய்யலை, அவள் அனுபவித்த மகிழ்ச்சியை நாசமாக்கத் தான் எனக்குத் தோணிச்சு.

**மாதவி** : நீ ஒரு கதை இட்டுக் கட்டிச் சொல்கிறாய். தேவகிக்குட்டி, உன்னை இத்தனை காலமும் அறிந்திருக்கிற நான் இதை எப்படி நம்புகிறது.

**தேவ** : நான் உங்க முன்னால தானே இருக்கேன் ?

**மாதவி** : பின்னே இல்லாம ?

**தேவ** : அப்படீன்னா நான் சொல்றது முழுக்க உண்மை. நான் அவளுடைய சுகத்தையும் சந்தோஷத்தையும் தகர்க்க முயற்சி செய்தவள். அவளுடைய திருமண வாழ்க்கையில் எவ்வளவு துக்கத்தை உண்டாக்கி வைக்க முடியுமோ அத்தனையும் உண் டாக்க முயற்சி செய்தவளாக்கும். அந்த முயற்சியில்தான் நான் ஆனந்தம் கண்டேன்.

**மாதவி** : நீ இன்னும் சொல்லப் போறது -- செல்லப்பன் பிள்ளையும் பாரதியும் இங்கிருந்து போனதும், ராஜன் போய் செல்லப்பன் பிள்ளைகிட்ட தகராறு பண்ணினதும் எல்லாமே அந்த முயற்சியின் விளைவுதான்னு சொல்லப் போறியோ ? பாவம், குழந்தே, நான் இதையெல்லாம் நம்புவேன்னு நீ நினைக்கிறியா ?

**தேவ** : அம்மா புத்திசாலியாக்கும். அதனால் தான் உங்களுக்கு நான் சொல்லப் போகிறதை ஊகிக்க முடிகிறது.

**மாதவி** : என்ன ? நீ சொல்லப் போவதை ஊகிக்கிறதா ? நான் ஊகிச்சதை நீ சொல்லப் போறியா ?

**தேவ** : ஆமாம், செல்லப்பன் பிள்ளைக்கு ஒரு வேலை தேடிக் கொடுக்க எனக்கு ரொம்ப சுலபமா முடிஞ்சிருக்கும். ஆனால் அதை நான் மனதாரச் செய்யலை. பாரதி அதைப் பற்றி என் முன்னால் இதயம் வெடிக்கக் கேட்டுக் கொண்டாள். நான் உள்ளூர சந்தோஷப்பட்டேன்.

**மாதவி** : அப்படீன்னா உன் இயலாமையைப் பற்றிச் சொல்லி எங்களையெல்லாம் ரொம்பக் காலமா ஏமாத்திக்கிட்டிருந்தியா ?

**தேவ** : அதோட போனா பரவாயில்லையே ! செல்லப்பன் பிள்ளை எந்தவொரு கதியுமில்லாம இங்கிருந்து போனபோது பாரதி உடைந்து பேவனாளென்று நான் கருதினேன். ஆனால் நரகம் பிடிச்ச நாட்டுப்புறத்துக்கு அவளும் போனதும் எனக்குப் பொறுக்க முடியாமல் போச்சு.

**மாதவி** : அது யாருக்குமே பொறுக்க முடியாத காரியமாயிருந்ததே. உனக்கு மட்டுமில்லையே.

**தேவ** : ஆனால் பொறுக்காததன் காரணம் மட்டும் வெவ்வேறாயிருந்தது. இங்குள்ள சுக சௌகர்யங்களையும் உறவுகளையும் எல்லாம் துறந்து அந்தக் கிராமத்தில் போய் வாழணும்னா அங்கிருந்து கிடைக்கிற சுகமும் சந்தோஷமும் அந்த அளவு எல்லையற்றதாயிருக்க வேண்டாமா ? அந்த சுகத்தையும் சந்தோஷத்தையும் என் முயற்சிகளுக்கு எதிராக அவள் எந்தக் கஷ்டத்திலும் ஜெயித்துக் கொண்டிருக்கிறாளோவென்றும் நான் சந்தேகப் பட்டேன். கடைசியில் நான் அந்தத் தீரச் செயலில் இறங்கினேன்.

**மாதவி** : யாருக்கும் புரியாத அந்தத் தீரச் செயல் என்ன ? நல்ல கூத்து, என்னெல்லாம் சொல்கிறாய் ?

**தேவ** : பாரதியை எப்படியாவது திரும்ப வரவழைத்துக் கணவனிடமிருந்து விலக்குவது –அதற்காக நான் ராஜனை ஒரு ஆயுதமாக்கிக் கொண்டேன்.

**மாதவி** : அப்படீன்னா நீ சொல்லித்தான் ராஜன் போனான் இல்லையா ? அடீ, அப்படீன்னா நீதானா என் பையனை ஜெயிலில் தள்ளினாய் ? அந்த சாது செல்லப்பன் பிள்ளையைக் கொலையுண்டு சாக வைத்தாய் ?

**தேவ** :நானல்ல.

**மாதவி** : பின்னே ? நீ சொல்லுவே முன்னைப் போல அந்த விவாகம்தான்னு ஒன்றுமறியாதவளைப் போல.

**தேவ** :சொல்லமாட்டேன்.

**மாதவி** : சொல்லாம ? பின்னே யாரு ? யாரு இந்தக் குழப்பத்தை உண்டாக்கினது அப்ப ?

**தேவ** : பெரியவங்களான அப்பாவும் அம்மாவும்தான் அதுக்குக் காரணவாதிகள்.

**மாதவி** : நாங்களா ? தேவகிக் குட்டி, உனக்குப் பைத்தியமா ? உன்னைப் படிக்க வச்சு இவ்வளவு பண்ணினோம். இந்த நிலைமை வந்துட்டதும் எங்களுக்குத்தான் கெடந்து தாங்க கதியில்லை.

**தேவ** : எனக்குப் பைத்தியமில்லை. உங்களுக்குத் தான் மனக் குழப்பம், அந்தக் குழப்பத்தின் பலனைத்தான் நீங்க இப்போது அனுபவிக்கிறீங்க.

**மாதவி** : நீ சொல்லிட்டாப் போதுமாக்கும் எங்களுக்குப் பைத்தியம்னு !

**தேவ** : உங்களுடைய குழப்பம் ஒரு விதத்தில் என்னையும் பைத்தியமாக்கிற்று. ஆனால் என் குழப்பம் தீர்ந்தது. உங்களுக்கு இன்னும் குழப்பம்தான்

**மாதவி** : நீ இப்படிக் குழப்பம் குழப்பம்னு சொல்றதுதான் என்ன ? நாங்கள் கொஞ்சம் பைத்தியக் காரத்தனமாகவெல்லாம் நடந்துக்கிட்டோம். உன்னைக் கஷ்டப்பட்டுப் படிக்க வச்சு ஒரு வேலய வாங்கித் தந்தோம். சுபிட்சமா இருக்க வச்சோம். இதுதானே நாங்க செய்த பைத்தியக் காரத்தனம் ?

**தேவ** : நான் சொல்லாமலேயே உங்களுக்கு எல்லாத்தையும் புரிஞ்சுக்க முடிஞ்சுடுச்சு. பெரிய நிம்மதி.

**மாதவி** : அப்படின்னா இதெல்லாம் பைத்தியக்காரத் தனம்னு தானா உன் எண்ணம் ?

**தேவ** : சந்தேகம் வேறயா ? ஒரு பெண்ணுக்குக் கிடைக்க வேண்டிய மிகவும் உயர்ந்த ஸ்தானம், தனம், ஐஸ்வர்யம், மோட்சம் எல்லாம் என்னன்னு நீங்கள் புரிந்து வைத்திருக்கவில்லை. புரிஞ்சிக்கிட்டிருந்தா நானும் பாரதியும் ஒரு போட்டியில் மோத வேண்டி வந்திருக்காது. பாரதி அதைப் புரிந்து கொண்டிருந்தாள். நான் புரிந்துகொண்டிருக்கவில்லை. அம்மா, பாருங்க இந்தக் காகிதத்தை, (மடியிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்துப் படிக்கிறாள்). "ஒரு பெண்ணின் ஸ்தானம், தனம் ஐஸ்வர்யம், மோட்சம் இவையெல்லாம் அவளுடைய மண வாழ்க்கையே என்று நான் நம்புகிறேன். பெண் பெண்ணாவது– வாழ்வதற்கு அருகதையுடையவளாவது– அவள் ஒரு மனைவியும் தாயுமாக ஆகும்போதுதான். ஒரு மிகக் குறைந்த காலம் ஆனாலும் நான் பரிபூர்ணமாக வாழ்ந்தேன் என்ற நிறைவு எனக்குண்டு. என் கணவர் கெட்ட காலத்தினால் இறந்து போனார். என் கடமை தெளிவானது. தரித்திரத்தில் மூழ்கிக் கிடக்கும் அவரது குடும்பத்தை என்னாலான விதத்தில் கூலிவேலை செய்தாவது காப்பாற்றி நான் இங்கே இருக்க வேண்டியதுதான். அதுதான் எனக்கு மிகவும் உயர்ந்த மகிழ்ச்சி. சசி சுகமாயிருக்கிறான். அங்கே எல்லோருக்கும் சுகமும் நிம்மதியும் உண்டாகட்டும். தங்கை பாரதிக்குட்டி". அம்மா, இந்தக் காகிதத்தில் பெண்ணின் வேதவாக்குகளே பதிந்திருக்கின்றன. இந்த வேதவாக்கியத்தின் முன்னால் தான் குரூரமான நான் தோல்வியை ஒப்புக்கொண்டு மண்டி யிடுகிறேன்.

**மாதவி** : நீ மண்டியிட்டாலும் உனக்கு மன்னிப்புக் கிடையாதடீ, அத்தனை தூரம் அவளை வஞ்சித்திருக்கிறாய், அவளை யாருமற்றவளாக்கி விட்டது நீதானே ? என் பையனை ஜெயிலில் மூட்டைப் பூச்சிக் கடிபட வைக்கிறது நீ தானே ?

**தேவ** : அதற்கு அவன் தகுதியானவன்தான். அவன் அதற்கு மிகவும் அருகதையானவன். ஆனால் செல்லப்பன் பிள்ளை, பரிசுத்த ஆத்மா, சாது. மற்றவங்களுக்குத் தொந்திரவு கொடுக்காம வாழ்ந்தான் என்ற ஒரு குற்றம் மட்டும் செய்த அந்த ஆசாமியின் மரணம்... ஆனாலும் அம்மா, குற்றமுணர்ந்து பச்சாத்தாபப் பட்டால் எனக்கு மன்னிப்புக் கிடைக்காமலி ருக்குமா ? சுடும்கண்ணீர் விழுந்தால் உருகிப்போகாத பாவம் என்ன இருக்கிறது ? போதாததற்கு அந்த வேதவாக்கைப் பின் பற்றி வாழ நான் தயாராகிவிட்டேன்.

**மாதவி** : உனக்கு எப்படி அது முடியும் ? நீ அவளைப் போலவா ?

**தேவ** : நான் அவளைப் போல ஆவேன். நான் நாசமாக்க முயன்ற சுகத்தையும் ஆனந்தத்தையும் பெற பிச்சைப் பாத்திரத்துடன் தெருவில் நிற்பேன். அதுதான் கடமை. நீங்கள் அதை முன்பே புரிந்து கொண்டு செய்திருந்தால்....

**மாதவி** : ஓ, உனக்குக் கல்யாணம் செய்து வைக்காததா ? எங்களுக்கு அந்த நினைப்பே உண்டாகலை தேவகிக் குட்டி.

**தேவ** : (பொறுக்க முடியாத ஓர் உள்ளார்ந்த கிளர்ச்சியுடன்) ஏன் உண்டாகலை அம்மா, ஏன் உண்டாகலை ? உங்க வாழ்க்கையில் முடிந்துபோன சில அத்தியாயங்களை ஏன் நீங்க திரும்பிப் பார்க்கலை ? இப்போது கண் குழிவிழுந்து போச்சு; தலை நரைச்சுப் போச்சு; உடல் தளர்ந்து போச்சு. ஆனாலும் அம்மா, உங்க கல்யாணத்துக்கு முன்னால் நீங்கள் ஒரு கன்னி யாக இருந்த காலத்தில், தோலுக்குப் பளபளப்பும், சதைக்குத் திரட்சியும், இரத்தத்துக்கு வெம்மையும் இருந்த காலத்தில் எத்தனை நாள் ஒரு கணவனின் உருவத்தைக் கனவு கண்டு கொண்டு நீங்க தூங்காமக் கெடந்திருப்பீங்க ? எத்தனை யெத்தனை குளிர்ந்த இரவுகளில், மென்மையான நிலா தட்டும் அறைக்குள் தலையணையைக் கட்டியணைத்துக் கொண்டு நீங்க தெரிந்தும் தெரியாமலும் விம்மியிருப்பீங்க ? அந்தக் கனவுப் புருஷன் உங்களைக் கல்யாணம் செய்து கொள்கிற தினத்தைப் பற்றி யோசித்து யோசித்து எத்தனையெத்தனை நீண்ட மணி நேரங்களை கழித்திருப்பீங்க ? நீங்கள் முதன் முதலாகக் கணவனோடு சேர்ந்து குடிபோகும் தினமும், மெல்ல மெல்ல அந்த வீட்டின் நாயகியாவதும் எத்தனை வருஷத்துக்கு முன்பே நீங்கள் கற்பனையில் சிருஷ்டிச்சிருப்பீங்க ? நீங்க முதன் முதலாப் பிரசவித்த என்னுடைய சிரிப்பும், நடையும்,

உடம்புவாக்கும், கொஞ்சு மொழியும், முக அழகும் எத்தனையோ மாதங்களுக்கு முன்னாலேயே நீங்க கண் முன்னால் இருக்கிறாப்புல கண்டுருக்கீங்க. அப்படியிருந்தும் சொல்றீங்க. "எங்களுக்கு அந்த நினைப்பே உண்டாகலை"ன்னு.

**மாதவி** : (தேவகிக் குட்டி பேசி முடிக்கும் வரையிலும், முடிந்தபின் சற்று நேரமும் ஸ்தம்பித்து நின்று விட்டுப் பின்னர்) நீ சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் சரிதான். ஆனால் இதில் எங்களை எப்படி நீ குற்றஞ்சாட்டுகிறாய் ? உன்னைப் படிக்க வச்சோம். வேலை பார்த்துத் தந்தோம். உனக்கு நாலுபேர் நடுவில் நல்ல ஒரு நிலைமை உண்டாச்சு. அதற்கப்புறம் உனக்கு ஒரு கணவனின் தேவை உண்டுன்னு எப்படித் தோணும் ?

**தேவ** : அம்மா, இந்தப் படிப்பும், உத்தியோகமும், சமூக அந்தஸ்தும், பெரிய மனுஷனின் வெளித்தோல் மட்டும்தான். அதற்கு உள்ளே பறித்தெடுக்க முடியாத பௌருஷமும், பெண்மையும் குடிகொண்டுள்ளன. அவை சிலசமயம் உரக்கக் கூக்குரலிடும். அந்தக் கூப்பாட்டுக்கு பதில் கிடைக்கவில்லையானால் மேல் தோலைப் பிளந்து கொண்டு அவை வெளியே குதிக்கத்தான் செய்யும்.

**மாதவி** : நீ இப்படிச் சொல்றியே. உன்னைப் போலப் படிப்பும், பெரிய மனுஷத்தனமும், வேலையும் உள்ளவங்க எத்தனை பேர் கல்யாணமே வேண்டாம்னு இருக்காங்க. அவங்க அதைப் பற்றி ஒண்ணும் பேசறதில்லை. பேசினாலும் கல்யாணத்தைப் பற்றி இளப்பமோ இளப்பம். கல்யாணம் செய்துக்கிறவங்களை நிந்தையோ நிந்தை. அவங்கள்ளாம் அப்படி இருக்கும் போது, அப்படி இருக்கிறதை நாகரிகமா நெனைக்கிறபோது நீ மட்டும் அப்படியில்லைன்னு எங்களுக்கு நினைக்கத் தோன்றுமா ?

**தேவ** : நினைக்காததின் பலனைத்தான் இப்போது இந்தக் குடும்பம் முழுவதும் அனுபவிக்கிறது. இந்தக் கல்யாணமாகாத பெண்களெல்லாம் சுகமா வாழறாங்கண்ணு நீங்க நினைக்கிறீங்களா ? அம்மா, அவர்கள் நிழல்கள், பிரேதங்கள். அவர்கள்தான் சமூகத்தில் மிகவும் சார்புடைய ஜீவன்கள். அடைய வேண்டியதை அடையாத, ஆசைப்பட்டது கிடைக்காத, 'சீச்சீ, இந்தப் பழம் புளிக்கும்' என்று சொன்ன நரியைப் போல, மணவாழ்க்கையைக் கேலி செய்து, உலகம் முழுவதையும் வெறுத்து, ஒரு நிமிஷத்திற்குக் கூட ஒரு வாழ்க்கை இலட்சியம் இல்லாமல் வாழும் வர்க்கம் அது. ஆண்வர்க்கம் முழுவதையும் தெருவில் நிறுத்திச் சுடத் தயாரான ஒரு மணமாகாத பெண், ஒரு ஆணின் சூழலுக்காக வெறியுற்று குமைந்து கொண்டிருப்பாள். மண வாழ்க்கையின் அவலங்களைக் காண்கையில் நெற்றியைச் சுருக்கும் அவளுடைய இதயம் அந்த அவலங்களில் மூழ்கிக் குளிப்பதற்காக ஏங்கிக் கொண்டிருக்கும். நான் எனது

நேர்மையினால் இதையெல்லாம் வெளிப்படையாகச் சொல்கிறேன். ஆனால் என் தோழிகள் திறந்து சொல்லாமல், மனச்சாட்சியை வஞ்சித்து, சாகாமல் சாகிறார்கள்.

**மாதவி** : *நீ இதை எங்கிட்ட முன்னாடியே சொல்லியிருக்கக் கூடாதா ?*

**தேவ** : *உங்கள் மனத்தில் தோன்றி, புரிந்து கொண்டு நடப்பீர்கள் என்று நினைத்திருந்தேன். இல்லாவிட்டாலும் எப்படித் தானம்மா அந்த ஒரு ஆசையை உங்களிடம் சொல்வேன் ? அப்படிச் சொல்கிறவள் – உடலுக்கும் மனதுக்கு மான ஒரு தேவையைத் திறந்து சொல்கிறவள் அன்று முதல் வீட்டார் முன்னிலும் ஊரார் முன்னிலும் தேவடியாள் ஆகிவிட மாட்டாளா?*

**மாதவி** : *அது சரிதான் குழந்தே. அப்படிக் குற்றஞ் சாட்டுவது தான் வீட்டாருடையவும் ஊராருடையவும் வழக்கம். இருபத்தைந்தோ, முப்பதோ வருஷம் ஆனாலும் அந்தக் குற்றச் சாட்டு தொடர்ந்து கொண்டேயிருக்கும். இப்பத் தானே எனக்குப் புரியுது. நீ பெரும் நோயாளியைப் போல யாரோடயும் பேசாமலும், ஒன்றிலும் ஆர்வமில்லாமலும் இருந்ததன் காரணம். சும்மா மந்திரவாதிக்கும் வைத்தியனுக்கும் எத்தனை பணம் தொலைஞ்சுது !*

**தேவ** : *அம்மா, நான் அப்படி நடக்காமலென்ன செய்வேன் ? எனக்கு ஒரு விஷயத்திலும் உற்சாகமில்லாமல் போயிற்று. உங்களையெல்லாம் எனது விரோதிகளாக நான் கருதினேன், நான் உங்கள் கூட்டத்தைச் சேர்ந்தவளல்ல என்று எனக்குத் தோன்றி விட்டது. நான் பல வித்தைகளைப் பிரயோகித்தேன் –அந்த எண்ணத்தைக் தடுக்க. வழக்கத்தை விட அதிகமாக ஆஃபீஸில் வேலை செய்து பார்த்தேன். எல்லாக் கோவில்களுக்கும் போவதிலும் பெரும்பாலான நேரமும் கடவுள் துதியில் ஈடுபடுவதிலும் நான் கவனம் செலுத்தினேன், வேலையைத் தவிர சில சமூக நடவடிக்கைகளில் ஈடுபட்டு நேரத்தையும் கவனத்தையும் செலவழிக்க முயன்றேன். இறுதியில், ஏன் கேட்கிறீர்களம்மா, எல்லாம் தூளாகித் தகர்ந்து போச்சு. நான் மட்டுமே எஞ்சினேன், இப்படியெல்லாம் நடந்தது.*

**மாதவி** : *அப்படீன்னா இதுக்கெல்லாம் காரணம் நீ கல்யாணம் பண்ணிக்காம இருந்ததுவா ? அப்படித்தானே நினைக்கணும் !*

**தேவ** : *இல்லையம்மா, அதுக்குக் காரணம் அதற்கும் அப்பாற்பட்டது. நான் ஏன் கல்யாணம் பண்ணிக்கலை ? எனக்கு அப்படி ஒரு தேவை இல்லைன்னு அப்பா அம்மா நினைச்சதுனால. அப்பா அம்மா ஏன் அப்படி நினைச்சீங்க ? என்னைப்போலுள்ள பலரும் உள்ளே நெருப்பை மூடி வைத்துக்*

கொண்டு பொய் வேஷம் போட்டு நடப்பதினால். அவங்க அப்படி நடக்கக் காரணம் என்ன ? அந்தக் காரணம் தான் இதுக்கெல்லாம் காரணம்.

**மாதவி** : அந்தக் காரணம் என்னன்னும் சொல்லிடு குழந்தே. இத்தனை ஆனப்புறம் அதை மட்டும் ஏன் மறைக்கிறாய் ?

**தேவ** : சொல்கிறேன். எனக்கு பயமில்லை; அசிங்கமில்லை, சொல்ல வேண்டியது என் கடமைன்னு நான் நம்பறேன். நம் சமூக அமைப்புக்கள்தான் இதற்குக் காரணம். அது துருப்பிடிச்சது, பிளவுபட்டது . நாம் ஆராதிக்கும் அந்த அமைப்பு சதா தகர்ந்து கொண்டேயிருக்கிறது. அங்கே ஒரு பாரதிக்கோ, ஒரு ஜானுவுக்கோ மட்டுமே கஷ்டப் பட்டுக் கணவன் மார் உண்டாக்கப் படுகிறார்கள்.

**மாதவி** : இல்லை. நீ அப்படிச் சொல்றதெல்லாம் பொருத்த மில்லாதது. நீ படிச்சுக் கிட்டுருந்த காலத்தில் எத்தனை பேர் தெரியுமா உன்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு விரும்பி னாங்க ? நீ படிக்கிற புத்தியுள்ளவளாயி ருந்ததினாலயும், நமக்கு வசதியிருந்ததினாலேயும் நீ படிக்கட்டும்னு நாங்கள் நெனச் சோம், அவ்வளவுதான்.

**தேவ** : ஆமாம், எல்லோரும் முட்டாள்னு முத்திரை குத்தி வச்சிருந்த பாரதிக்குப்புருஷன் கிடைச்சான். வேலைக்காரி ஜானுவுக்குப் புருஷன் கிடைச்சான்.ஆனால் படிச்சவளும் வேலை பார்ப்பவளுமான எனக்கு நானே தான் கணவனானேன்.

**மாதவி** : அதெல்லாம் கடவுள் தீர்மானச்சதுங்கிறதைத் தவிர வேற என்னன்னு சொல்றது தேவகிக்குட்டி

**தேவ** : கடவுள் தீர்மானிச்சதா ? பாவம், கடவுளுக்கு இதில் ஒரு பங்கும் இல்லை. எடுத்ததுக்கும் வச்சதுக்கும் ஒரு கடவுள் இருக்கான். மனுஷன்தான் இதுக்கெல்லாம் குற்றவாளி. அவனுக்கு சமூகத்தில் உயர்வு கிடைக்கணும். பொருள் சம்பாதிக்கணும், கீர்த்தி அடையணும். ஆனால் அவனுக்கு சுகமாயிருக்க வேண்டாம், அதாவது சுகம்னா என்னன்னு அவனுக்குத் தெரியாது. அப்படி நடக்கிறவனை உலகம் மதிக்கும், ஆதரிக்கும், அன்பு காட்டும். ஆனால் ஆதரவிற்காகவும், மதிப்பிற்காகவும், நட்பிற்காகவும் வேண்டி அவன் விட்டுக் கொடுத்த சுகத்தைப் பற்றி உலகத்திற்குத் தெரியாதம்மா.

**மாதவி** : நீ தயவு செய்து ஒரு காரியம் பண்ணு. என்கிட்ட இதையெல்லாம் சொன்னதை நினைச்சு ஒரு வார்த்தை வெளியில பேசாதே. பேசினால் நம்மை ஜனங்கள் சும்மா விட்டு வைக்க மாட்டாங்க. அன்றைக்கே அவங்க நம்மைத் தள்ளி வச்சுடுவாங்க. பின்னால் வரும் சந்ததிகளைக் கூட அவங்க

சரியா விட மாட்டாங்க. நீ சும்மா இரு. உனக்கு ஒரு நல்ல கல்யாணத்தை யோசிச்சு நிச்சயிக்கலாம்.

**தேவ :** உங்களுக்கு அத்தனை பயம்னா நீங்க ஜனங்களைத் தலையில் தூக்கி வச்சுக்கிட்டு பூஜை பண்ணிக்குங்க. நான் என் வழியைத் தீர்மானம் பண்ணியாச்சு. நெஞ்சாரப் புரிஞ்ச பின்னும் அதை உரக்கச் சொல்லவும், அனுசரித்து வாழவும் தைரியமில்லாத ஒரு பொம்மையாக எனக்கு இனிமேல் வாழ வேண்டாம். இதுவரையிலும் ஒரு கணவனைத் தேடித் தரும் நல்லெண்ணம் இல்லாமலிருந்த நீங்கள் இனிமேல் அதற்காகக் கவலைப்பட வேண்டாம். அந்தச் சுமையை என் இஷ்டம் போல் நான் தீர்த்துக்கிறேன். அதற்கு ஆரம்பமாகச் செய்ய வேண்டியதையெல்லாம் நான் செய்தாச்சு.

**மாதவி :** என்ன, உன் கல்யாணத்தை நீயே நிச்சயிச்சுட்டியா ? நீ பாரதியைத் தொலைச்சதைப் போல என்னையும் அந்தக் கிழவரையும் தொலைச்சுடாதே தேவகிக் குட்டி.

**தேவ :** நான் கல்யாணத்தை நிச்சயிக்கலை. ஆனால் ஏற்பாடு களெல்லாம் நடந்தாச்சு. ஒரு கல்யாணத்துக்கு இடையூறாக இருந்த எல்லாத்தையும் நான் விட்டாச்சு. உடலில் வைத்துக் கட்டியிருந்த அலங்காரங்களையெல்லாம் நான் வீசியெறிந் தாச்சு. நான் சரியான ஸ்திரீ ஆகியாச்சு,

**மாதவி :** நீ இப்படிச் சொல்கிறதன் அர்த்தம் என்ன குழந்தே ?

**தேவ :** நான் என் வேலையை ராஜினாமா செய்துட்டேன். பட்டத்தைத் திருப்பிக் குடுத்துட்டேன்.

**மாதவி :** (முகம் வெளிறி) என்ன ? இன்னொரு தடவை சொல்லு. அடீ... நீ எல்லாத்தையும் தொலச்சிட்டியா ? (தூணில் சாய்ந்தமர்கிறாள்)

**தேவ :** நான் இப்போ வெறும் தேவகிக்குட்டி. எனக்கு ஒரு கணவன் வேணும் அன்பு காட்ட.

**மாதவி :** டீ, நெஜத்தச் சொல்லு, இல்லாட்டா... நீ அந்த நெஜத்தைச் சொல்ல வேண்டாம். கடவுளே, இது உண்மைன்னா.. எத்தனை வருஷத்து ஆசை, நீ எங்களைக் கொன்னு போட்டுடு அதுதான் இதைவிட நல்லது.

**தேவ :** அம்மா, நான் ஒரு மனைவியாகணும்; ஒரு தாயாகணும்; ஒரு குடும்பத் தலைவியாகணும்—எத்தனை வருஷத்து ஆசைன்னு தெரியுமா இது ?

**மாதவி :** நீ அதுக்காக எங்களைத் தொலைக்கணும்னு இருக்கா ? அடி கொழந்தே, பாரதியின் கஷ்டமும், ராஜனின் அவலமும் பரவாயில்லை, ஆனா உன் சாகஸம், அது நிஜமா தேவகிக் குட்டி ? நீ என்னைக் கிண்டல் பண்ணாம இரு.

**தேவ** : அந்த வேலுப்பிள்ளை கொண்டு போனது என் ராஜினாமா கடிதம். பாரதியின் கஷ்டத்தை விட, ராஜனின் அவலத்தை விட என் ராஜினாமா உங்களை வேதனைப் படுத்தும்னு எனக்குத் தெரியும், காரணம் நன்றாயத் தெரிந்தது தானே! என் முயற்சியினால் சுகம் அனுபவித்து, சமூகத்துக்கு விலையுயர்ந்த தீனிபோட்டு, சதை அசையாமல், வியர்வை துளிர்க்காமல் வாழ்ந்திருந்த உங்களுக்கெல்லாம் இதை விடப் பெரிய ஒரு கஷ்டம் வர முடியுமா ? ஆனால் அம்மா, வேறு வழியில்லை. எனக்கு வாழணும். என் மரணம் இன்றோடு தீர்ந்தது. இனிமேல் நான் வாழ ஆரம்பிக்கப் போகிறேன்.

**மாதவி** : அதற்காக இந்த வயசான காலத்தில் எங்களைக் கொல்லணுமா ?

**தேவ** : நீங்கள் எவ்வளவு நாளா வாழ்ந்துக்கிட்டிருக்கீங்க ? இனிமெ நான் கொஞ்சம் வாழட்டுமா ?

**மாதவி** : அடீ, இதுதான் எங்களுக்கு நீ செய்கிற பிரதிபலன் இல்லையா ?

**தேவ** : ஆமாம், உங்கள் செய்கையின் பலன் இதுதான்.

(மாதவியம்மா மூர்ச்சையுற்று நிலத்தில் வீழ்கிறாள். தேவ சலனமற்று கம்பீரமான பாவத்துடன் நிற்கிறாள்).

**( திரை )**

# காட்சி ஐந்து

*(தேவகிக் குட்டியின் அறை. ஜானுவும் தேவகிக் குட்டியும் பேசிக் கொண்டு நிற்கிறார்கள். விவரிக்க முடியாத ஓர் ஆனந்தமும் இதய மிதப்பும் தேவகிக் குட்டி அனுபவிப்பதாய்த் தோன்றுகிறது. வியப்பும், உண்மையான உளச்சோர்வும்தான் ஜானுவின் முகத்தில் வெளிப்படுகின்றன. தேவகி மிகவும் எளிமையாக உடையணிந்திருக்கிறாள். நேரம் நள்ளிரவு)*

**தேவ :** *உனக்கு இன்னும் நம்பிக்கை வரவில்லையென்று தோணுது. நான் ரொம்பவும் ஆனந்தத்தோடும் நிம்மதியோடும் தான் போகிறேன்னு.*

**ஜானு :** *நீங்க சொன்னா என்னால் நம்பாம இருக்க முடியுமா ? நம்பினதால தானே அந்தப் பழங்கதையைச் சொன்னேன் !*

**தேவ :** *அது என் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கிடுச்சு. எனக்கு நூறு மடங்கு தைரியம் தந்தது. நான் இயற்கையாகவே நடந்துகொள்கிறேன்னு எனக்குப் புரிய வச்சுது.*

**ஜானு :** *இப்போ பத்து வருஷமாச்சே நான் இங்கே வந்து. ஆனாலும் ஒரு வார்த்தை நான் இதைப் பத்தி சொல்லியிருக்கேனா? என் அம்மாவின் வாயிலிருந்து என் காதில் விழுந்தது. அதுக்கப்புறம் இப்பத் தான் வெளியே வந்தது. இப்பச் சொல்லாம இருந்துட்டு அப்புறம் எப்பன்னு நெனச்சுத் தான் சொல்லிட்டேன் சின்னம்மா.*

**தேவ :** *நீ செய்த உபகாரத்தை நான் ஒரு போதும் மறக்க மாட்டேன். நான் உன்னையழைத்து என் எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லாமலிருந்திருந்தால் இந்த விலையுயர்ந்த ரகசியம் சிக்கியிருக்குமா ?*

**ஜானு :** *ஓ, இதென்ன உபகாரம் சின்னம்மா ? அப்படியே ஆனாலும் நீங்கதானே எனக்கு ஒரு நல்ல வழிகாட்டித் தந்தீங்க !*

**தேவ :** *ஜானு, நான் செய்த உபகாரம் சாரமற்றது. நீ எனக்காகச் செய்ததோ ஒரு போதும் மறக்க முடியாதது.*

**ஜானு :** *இந்தக் கடந்த பத்து வருஷங்களுக்குள் எத்தனை வாட்டி எனக்கு அதைச் சொல்லிப்பிடத் தொண்டை வரை வந்துடுத்து தெரியுமா ?*

**தேவ** : அப்படின்னா ஜானு, கடந்த முப்பத்தியஞ்சு வருஷமா அந்த ரகஸ்யத்தை வச்சுக் காப்பாற்றுகிற அப்பாவும் அம்மாவும் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கணும் !

**ஜானு** : பரவாயில்லை, பரவாயில்லை, ஊரில் இது பலருக்கும் தெரியுமானாலும் இதை உள்ளே வச்சுக்கிட்டு ஒரு நாள் கூட இதைப் பற்றி யாரும் கேட்கிற மாதிரிப் பேசினதேயில்லை.

**தேவ** : என் அம்மா தைர்யசாலின்னு பெருமைப் பட்டுக்கலாம், ஆனால் அம்மா இப்போ எவ்வளவு மாறிப் போயிருக்காங்க ! இப்போ அவர்களுக்கு ஊராரைப் பற்றி பயம். அவங்களை சந்தோஷப்படுத்த அம்மா எதுவும் செய்வாங்க. பாவம், பெரிய மனிதர்களாக ஆகிறதுக்கான முயற்சி.

**ஜானு** : என்ன செய்றது சின்னம்மா, குழந்தைகளெல்லாம் பிறந்து மானம், அந்தஸ்து எல்லாத்தையும் காப்பாற்ற வேண்டி வந்துட்டா அப்புறம் பயப்படாமலும் சந்தோஷப் படுத்தாமலும் இருக்க முடியுமா ? எதுக்கும் ஊராரின் உதவி வேண்டாமா ?

**தேவ** : ஊராரின் உதவி! அதிருஷ்ட வசத்தால் அது இல்லாமலிருந்தால் போதும். அதற்காக அவங்க முன்னால் நாம எத்தனை பொய் வேஷம் போட்டாத்தான் போதும் ? அப்புறம் ஜானு, நான் போன பிற்பாடுதான் இந்த விவரத்தை வெளியிடலாம். இல்லாட்டா உண்டாகிற கலாட்டா ...

**ஜானு** : வெளியே சொல்ல மாட்டேன்னு ஒங்க கையில அடிச்சுல்லே சத்தியம் பண்ணியிருக்கேன்.

**தேவ** : ஒன்னை நடுவில கொஞ்சம் நாள் கோபிச்சுக்கிட்டு அனுப்பினதையெல்லாம் நீ எனக்காக மறந்துடணும். நீ இங்கே இருந்து அப்பாவையும் அம்மாவையும் வேண்டியது போலப் பார்த்துக்கணும்.

**ஜானு** : ஐயோ, கடவுளே, பெத்த மகள் ரெண்டு பேரும் வெளியிலயும் வேலைக்காரி வீட்டுக்குள்ளேயும். இதென்ன சங்கடம் சின்னம்மா.

**தேவ** : நீ அதப்பத்தி அதிகமாகப் பேச வேண்டாம். என் தீர்மானத்தை ஆட்டிப் பார்க்கலாம்னு நீ நெனைக்கிறியோ ?

**ஜானு** : அதுக்கு எனக்குத் திறமை இருக்கா ? இருந்திருந்தா ...

**தேவ** : இருந்திருந்தாங்கிற கதை வேண்டாம். உனக்குத் திறமையில்லை.

**ஜானு** : அப்படின்னா சின்னம்மா, நாம இனிமெ எப்ப சந்திக்கிறது ? (அழுகிறாள்)

**தேவ** : பல வருஷங்களுக்கப்புறம் அதுக்கு சந்தர்ப்பம் நேரலாம். சந்தர்ப்பம் உண்டாகாவிட்டாலும் என்ன ஜானு ? நம்ம சிநேகம் நமக்குத் தெரியாதா ?

**ஜானு** : ஆனாலும் சின்னம்மா, நாமெல்லாம் மனுசங்க இல்லியா ? கல்லா, மரமா ? எப்படி சகிச்சுக்கிறது ?

**தேவ** : சில விஷயங்களையெல்லாம் பொறுத்துக்கணும். சிலதைப் பொறுக்க முடியாது. அப்புறம் ஜானு, அந்த வேலுப் பிள்ளையை இங்கே கூப்பிடு. மெதுவாக் கூப்பிடணும். யாரும் எழுந்திடக் கூடாது *(ஜானு போகிறாள்)*

*(வேலுப்பிள்ளையும் ஜானுவும் பிரவேசிக்கிறார்கள்)*

**தேவ** : *(அலமாரியைத் திறந்து ஒரு வேஷ்டியும், சட்டையும், மேல் துண்டும் எடுத்துக் கொண்டு வந்து மேசை மேல் வைக்கிறாள்)* அதை உடுத்திக்குங்க.

**வேலு** : *(திகைக்கிறான்)*

**தேவ** : திகைக்க என்ன இருக்கு ? இதை எடுத்து உடுத்திக்குங்க.

**வேலு** : எதுக்காக சின்னம்மா ?

**தேவ** : என்னை இனிமெ சின்னம்மான்னு கூப்பிட வேண்டாம்.

**வேலு** : *(பிரமித்து நிற்கிறான்)*

**தேவ** : நான் நேற்றையிலிருந்து சின்னம்மா இல்லைன்னு புரியலியா ?

**வேலு** : கூப்பிட்டுத் தழும்பேறின நாக்கை இனிமெ மாத்தி வளைக்க முடியுமா சின்னம்மா ?

**தேவ** : திரும்பவும் சின்னம்மாவா ? அந்த வார்த்தையை நான் இனிமெ கேக்கக் கூடாது. உம்... இதை எடுத்து உடுத்திக்குங்க.

**வேலு** : இப்ப இந்தப் பாதி ராத்திரியில இந்த வேஷ்டியை எடுத்து உடுத்திக்கிட்டு எங்கே போகணுமாம் ?

**தேவ** : வேலை இருக்கு. நான் சொன்னதைக் கேக்கணும்.

**வேலு** : *(நடுக்கத்துடன் வேஷ்டியை எடுத்து வெளியே கொண்டு போய் உடுத்துக் கொண்டு வருகிறான்)*

**தேவ** : முன்னால நடக்கணும்.

**வேலு** : *(நடுங்கியவாறு)* எங்கே ?

**தேவ** : நமக்கு ஒரு பிரயாணம் போகணும்.

**வேலு** : எங்கே ?

**தேவ** : இந்த வீட்டுக்கு வெளியே.

**வேலு** : ஐயோ இதென்ன பேச்சு ? *(ஜானுவைப் பார்த்து)* ஜானு, எனக்கு ஒண்ணும் புரிய மாட்டேங்குது, இந்த நடுராத்திரியில எங்கே போகிறது ?

**தேவ :** நான் சொல்கிறேன் பதில். பாவம், ஜானுவுக்குத் தெரியாது, நாம் சுகமாக ஒரு இடத்தில் வாழப் போகிறோம்.

**வேலு :** (பதைத்தவாறு) என்ன ? ஒரு இடத்துலயா ? சுகமாவா ? இங்க சுகமாத்தானே வாழ்ந்துட்டுருக்கோம் ?

**தேவ :** இல்லை. இதை விட ரொம்ப ரொம்ப சுகமான ஒரு இடத்துக்கு. நடங்க முன்னால.

**வேலு :** (நகராமலிருக்கிறான்)

**தேவ :** நடக்கவாக்கும் சொன்னேன். நான் பின்னாலேயே வரேன். (சூட்கேஸை எடுக்கிறாள்)

**வேலு :** நான் பின்னால் வரேன், ஆனா நாம ஏன் போறோம்னு தெரிஞ்சாத்தான் நான் ஒரடி எடுத்து வைப்பேன் சின்னம்மா.

**தேவ :** (பொறுக்க மாட்டாமல்) திரும்பவும் அந்த வார்த்தை. அந்த வார்த்தையை இனி மேலும் கேட்டால் நான் தலையை முட்டிக்கிட்டு சாவேன். நான் சொல்றேன் நாம எதுக்காகப் போகிறோம்னு.

**வேலு :** (முழுக் கவனத்தையும் செலுத்திக் கேட்கிறான்)

**தேவ :** ஒரு புருஷனும் ஸ்திரீயும் சேர்ந்து கணவன் மனைவியாக வாழப் போகிறோம்.

**வேலு :** (திடுக்கிடுகிறான்) ஐயோ !

**தேவ :** சத்தமாக் கத்தாதீங்க, திகைக்காதீங்க. என் ஆசை இது. என் கட்டளை இது.

**வேலு :** ஹய்யோ ! இதென்னவொரு சொப்பனம் ! (கால் தடுமாறுகிறான்)

**தேவ :** சொப்பனமில்லை, நடப்பு. தேவகிக் குட்டி என்றொரு பெண் வேலுப்பிள்ளை என்றொரு ஆணிடம் சொல்லும் நடப்பு.

**வேலு :** நான் யாரு ? இப்படிச் சொல்ற ஆள் யாரு ? (சுற்றிலும் பதைத்து நோக்குகிறான்)

**தேவ :** நம்மிடையே ஒரு வித்தியாசமும் இப்போ இல்லை. உம்... நடங்க. சீக்கிரமா நடங்க. நேரம் அகாலமாகுது.

**வேலு :** (சிந்தனை வயப்பட்டு நிற்கிறான்)

**தேவ :** (கட்டளையிடும் தொனியில்) உம், நடக்க அல்லவா சொன்னேன் ! நானல்லவோ சொன்னேன். வெளியே போனப் புறம் நான் எல்லாம் விவரமாச் சொல்றேன். அப்போ இந்த பிரமையும் குழப்பமும் எல்லாம் தீர்ந்துடும்.

(வேலுப்பிள்ளை கனவில் நடப்பது போல இடறி இடறி நடக்கிறான். தேவகிக்குட்டி மகிழ்ச்சியுடன் ஜானுவைப் பார்த்து, "போகட்டுமா ஜானு" என்று கூறிப் பின் தொடர்கிறாள். வேலுப்

பிள்ளையுடையவும் தேவகிக் குட்டியுடையவும் சம்பாஷணையை உணர்ச்சி பொங்கக் கேட்டுக் கொண்டு நின்ற ஜானு இறுதியில் அவர்களுக்கு முன்னால் இரண்டு இருண்ட நிழல்களைக் கண்டு அதிசயிக்கிறாள், அந்த நிழல்கள் நகர்ந்து கொண்டிருக்க அவற்றின் சுவட்டிற்கேற்ப வேலுப்பிள்ளையும் தேவகிக் குட்டியும் கால் வைத்து நடக்கிறார்கள்)

**ஜானு** : இதென்னவொரு மாயம், முப்பத்தியஞ்சு வருஷம் ஆனப்புறமும் அன்றைய சம்பவந்தான் இன்றைக்கும். அன்றைக்கு அம்மா. இன்றைக்கு மகள், (மூக்கில் விரல் வைத்து நிற்கிறாள். கிருஷ்ணப் பணிக்கர் மறுபுறத்திலிருந்து நுழைகிறார்)

**கிருஷ்ண** : ஜானு, ஜானு ! அதோ போனது யாரு ?

**ஜானு** : வேலுப்பிள்ளையும் சின்னம்மாவும்.

**கிருஷ்ண** : அந்த நிழல்கள் எவை ?

**ஜானு** : பெரியய்யாவும் பெரியம்மாவும்.

**கிருஷ்ண** : அப்பாவுக்கும் அம்மாவுக்கும் பிறந்த மகள் இல்லையா ?

**ஜானு** : ஆமாம், பெரியய்யா !

(மேடையில் பரிபூர்ணமான ஒளி வீசுவதோடு திரை இறங்குகிறது.)

# அவன் மீண்டும் வருகிறான்

– ஸி. ஜெ. தாமஸ் –

**கதாபாத்திரங்கள்**

| | | |
|---|---|---|
| **மாத்துக்குட்டி** | : | *அந்தகனாகத் திரும்பி வரும் இராணுவவீரன்* |
| **ஸாராம்மா** | : | *மாத்துக்குட்டியின் மனைவி* |
| **குஞ்ஞுவர்க்கி** | : | *மாத்துக் குட்டியின் பழைய நண்பன்* |
| **அம்மா** | : | *மாத்துக் குட்டியின் தாய்* |
| **உபதேசியார்** | : | *"ஒரு மனிதன்"* |
| **ராகவன்** | : | *ஒரு தொழிலாளி* |
| **பெரியம்மா** | : | *பிள்ளைப் பேறு மருத்துவச்சி* |

# ஒன்றாம் அங்கம்

## *விழிப்பு மிக்க மனைவியரே, காத்திருங்கள் !*

### காட்சி ஒன்று

*(ஒரு பெரிய அறை. பின்னாலும் வலதுபுறமும் ஒவ்வொரு வாசல். இடப்புறம் கிடக்கும் கட்டிலின் கீழே ஒரு துப்பல் கிண்ணம் இருக்கிறது. கட்டிலுக்குப் பின்புறமாக சில பாத்திரங்களும் குடங்களும். அதனருகில் ஒரு மரப்பெட்டியும் அதன் மேலே ஒரு லாந்தர் விளக்கும். வலப்புற மூலைப் பக்கம் ஒரு நாற்காலியும் ஒரு ஸ்டூலும். பின்புற வாசலுக்கு மேலாக இயேசுவினுடையவும் இராணுவ உடையிலிருக்கும் ஒரு இளைஞனுடையவும் படங்கள் மாட்டப் பட்டிருக்கின்றன. சர்ச்சில், ஸ்டாலின், ரூஸ்வெல்ட் ஆகியோருடைய படங்கள் – தேசீயப் போர் வரிசையின் வெளிப்பாடு – ஒரு பழைய பஞ்சாங்கத்தின் மேல் ஒட்டப்பட்டிருக்கின்றன.*

*நேரம் இரவு ஒன்பது மணி. கிட்டத்தட்ட ஐம்பது வயதான ஒரு பெண்மணி எதையோ தேடி அறையில் சுற்றி வருகிறாள். தேடியது கிடைக்காத பாவத்தில் கைகளை இடுப்பில் வைத்து நிற்கிறாள்).*

**பெண்மணி** : பார்த்தியா ! இதுக்கெல்லாம் என்னதான் சொல்றது. ஒரு சாமானை எடுத்தா எடுத்த எடத்துல வைக்கிறதில்லை. *(உள்ளே பார்த்து)* அடீ ஸாராம்மா, – ஓ, இனிமெ அவளைக் கொஞ்சம் கூப்பிட்டு, கேட்க வைக்கிறதுதான் பெரிய பாடு. நஞ்சுதின்ன மீனைப் போல எங்கயாவது பார்த்துக்கிட்டு நடந்துகிட்டிருப்பா. இல்லாட்டாலும் இந்தக் காலத்துப் பொண்ணுங்க விஷயமொண்ணும் சொல்ல வேண்டியதில்லை. *(இதற்கிடையில் சுற்றிலும் பார்த்துக் கொண்டு நடந்து ஒரு அரிவாள் மணையைத் தேடியெடுத்துக் கொண்டு)* அடியம்மா ! இவ ஒரு அரிவாள் மணையைப்

பத்திரப்படுத்துற எடம் ! (பெட்டியிலிருந்து நாலைந்து கத்தரிக் காய்களை எடுத்துக் கொண்டு வந்து தரையிலமர்ந்து காய் வெட்டுகிறாள்)

**குரல் :** (தொலைவிலிருந்து) அவன் மீண்டும் வருகிறான் ! என் மக்களே, செவியுறுவீர்கள். அவன் மீண்டும் வருகிறான் !

**பெண் :** அந்த உபதேசியாருக்கு வேற வேலையொண்ணுமில்லியா! அந்த ஆசாமிக்குக் கிறுக்குண்ணு தோணுது, இப்படித் தெருவோட கத்திக்கிட்டே நடந்துக்கிட்டேயிருக்கார்–ஸாராம்மா !

**ஸாரா :** (உள்ளேயிருந்து) என்னா !

**பெண் :** அந்தப் பெரிய செப்புப் பாத்திரத்துல தண்ணி பிடிச்சு வைக்கணும், என்ன ? (குரலைத் தாழ்த்தி) கொஞ்சம் மேல் கழுவணும்னு நெனச்சு நாலு நாளாச்சு, அதெப்படி? நேரம் இருக்கா, வேலை தீர்ந்து ..... ?

**உபதேசி :** (நுழைந்தவாறே) அவன் மீண்டும் வருகிறான்! உங்கள் விளக்குகளில் எண்ணெய் ஊற்றிக் காத்திருங்கள். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். என்ன மரியாம்மா அக்கா, சுகம் தானே?

**பெண் :** (எழுந்து கொண்டு குற்றஞ்சாட்டுங் குரலில்) யாரு ? உபதேசியாருக்கு இந்தப் பக்கம் வழி தெரிஞ்சுதா ? நடுவுல இந்தப் பக்கம் ஒண்ணும் காணலியே. (நாற்காலியைப்பிடித்து இழுத்துப் போட்டவாறு) இப்படி உட்காரலாமில்லே. இங்கே இருக்கலியோ ?

**உபதேசி :** எனக்கு அப்படி ஒரேயிடத்துல இருக்க முடியுமா ? நான் கர்த்தரின் ஒரு எளிய தாசன். கர்த்தர் அருளிச் செய்திருக்கிறார். "பூலோகமெங்கும் போய் என் சுவிசேஷத்தை அறிவிப்பாயாக". (அமர்கிறார்) இந்தக் காலத்தின் குணத்தை மரியாம்மா அக்கா பார்க்கிறதில்லையாயிருக்கலாம். புத்தகத்தில் சொல்லியிருப்பது நிறைவேறப் போகும் காலமாக இருக்கிறது. (எழுந்து கொண்டு) உலக முடிவு சமீபித்திருக்கிறது! இப்போது நல்ல காலம். இப்போது தான் இரட்சாதினம்.

**பெண் :** நீங்க ஒண்ணும் சாப்பிட்டிருக்க மாட்டீங்கில்லியா ? –ஸாராம்மா, ஸாராம்மா ! (உபதேசியாரிடம்) கொஞ்சம் காபி குடிச்சிட்டுப் போகலாம் – ஸாராம்மா ! அடீ ஸாராம்மா !

**ஸாரா :** (உள்ளிருந்து) என்ன ?

**பெண் :** இங்க வா, நீ எங்க கெடக்கே? பொணம். கூப்பிட்டாலும் கேக்காது (உபதேசியாரிடம்) இந்த யுத்தம் எப்பத் தீரும் உபதேசியாரே ?

**உபதேசி :** காலத்தின் தகுதிக்குத் தக்கவாறு நடக்க வேண்டியது நடக்கட்டும், கர்த்தரின் திருவுள்ளத்தைச் சோதனை

செய்யாமலிருங்கள். மற்ற ஜாதிக்காரர்களையும் நம்பிக்கைற்றவர்களையும் போல் ஜோதிடத்தில் நம்பிக்கை வைக்காதீர்கள் !

**பெண் :** அடீ பெண்ணே, ஸாராம்மா !

**ஸாரா :** (நுழைந்து) தண்ணி கொதிச்சுக் கெடக்கு.

**பெண் :** பின்னே எதுக்குப் பாத்துக்கிட்டிருக்கே ? உபதேசியார் வந்திருக்கிறது தெரியலியா ? ஒரு கோப்பையில் காபி எடுத்துட்டு வா. (ஸாராம்மா தயங்கி நிற்கிறாள்) ஏய் ! என்ன நீ வேர் ஊனியதப் போல நிக்கிறே ?

**ஸாரா :** சர்க்கரையில்லை.

**உபதேசி :** வேண்டாம் அதுக்காகக் கஷ்டப்பட வேண்டியதில்லை. எனக்குக் காபி வேண்டுமென்பதில்லை.

**பெண் :** கருப்பட்டி இல்லியா ? (ஸாராம்மா தலையை அசைக்கிறாள்) ஆ ! அது போதும். சீக்கிரம் வேணும். (ஸாராம்மா போகிறாள்) கேட்டீங்களா உபதேசியாரே ! அந்த யுத்தத்துனால ஒண்ணும் கெடைக்காமப் போச்சு. வெலையோ அதை விடக் கஷ்டம். கன்ட்ரோலும் இல்லாம இருந்திருந்தா! என்ன காலமப்பா கடவுளே !

**உபதேசி :** அதிலொன்றும் ஆச்சர்யப்பட வேண்டாம். மரியம்மாக்கா, அது அப்படியில்லாமலிருக்க வழியில்லை. அப்படித்தான் திருவுள்ளம். இது நாஸ்திகத்தின் காலம். புனித லூகாஸின் சுவிசேஷம் பத்தாம் அத்தியாயத்தில் இருபத்து மூன்றாவதும் இருபத்து நான்காவதும் வாக்கியங்கள்: "நீங்கள் காண்பவைகளைக் காணும் கண்கள் அதிருஷ்டம் அடைந்தவை. ஏனென்றால் நான் உங்களுக்குச் சொல்கிறேன். ஏராளம் புனிதர்களும் அரசர்களும் நீங்கள் காண்பதைக் காண ஆசைப்பட்டனர்; ஆயினும் காணவில்லை, நீங்கள் கேட்பதைக் கேட்வும் ; ஆயினும் கேட்கவில்லை " கர்த்தருக்குத் தோத்திரம் !

**பெண் :** இந்தத் தரித்திரத்தின் இடையில் என் மாத்துக் குட்டியும் இல்லாமலிருந்தால்... (திரும்பி சுவற்றில் படத்தைப் பார்க்கிறாள்) ஆனாலும் அவன் போனதை நெனைக்கிறப்போ எனக்குப் பொறுக்க முடியலை. யுத்தத்திற்கில்லையா ! அங்கே என்னவெல்லாம்னு யாரு கண்டாங்க ? என் தேவதைகளே, ஒரு வேண்டுதல் செய்கிறேன், அவனுக்கு ஒண்ணும் வராம இருக்கட்டும். என் குழந்தையை ஒரு வாட்டி பாத்துட்டுச் செத்துட்டாப்போதும்.

**உபதேசி :** மனுஷ புத்திரனை நினைத்து அழாதே மரியம்மாக்கா. இவ்வுலகம் அநித்யமானது. (நிதானமாக நடந்தவாறே) முடிவு காலம் சமீபத்திலிருக்கிறது. ஜனங்கள் கடவுளை நம்ப மறுக்க ஆரம்பித்திருக்கிறர்கள். (குரலை

உயர்த்தி) ஒவ்வொரு படைப்பிடமும் படைப்பாளி கணக்குக் கேட்கப்போகும் காலம் கிட்டத்திலிருக்கிறது. (ஸாராம்மா கையில் காபியுடன் பின்புற வாயிலில் பிரசன்னமாகிறாள்) அன்று இரண்டு ஸ்திரீகள் ஒரு திருகல்லில் அரைத்துக் கொண்டிருப்பார்கள். ஒருத்தியை அவன் ஏற்றுக் கொள்வான். மற்றவளையோ அவன் சாகாத புழுவும், அணையாத தீயும் நிறைந்த நித்ய நரகத்தினுள் தள்ளுவான் (கைகளை உயர்த்தி ஆவேசமுற்றவராய்) கீழ்திசை வெண்மேகங்களின் மேல் அக்னிரதத்தை நான் காண்கிறேன். விழிப்புமிக்க மணவாட்டிகளே, உங்கள் தீபங்களைக் கொளுத்துங்கள்! அவன் மீண்டும் வருகிறான் !

(ஸாராம்மாவின் முகம் வெளிறுகிறது. கையிலிருந்து பாத்திரம் கீழே விழுந்து உடைகிறது. உபதேசியாரும் பெண் மணியும் திரும்பிப் பார்க்கிறார்கள்)

**பெண்** : என்னடீ, மூஞ்சிலே கண்ணுல்லாமலா உள்ளே வரே? இவ இங்க வந்து நுழைஞ்சதும் தொடங்கிச்சு இந்தப் பொடியாக்குறது. ஓடையோ ஓடை, இனிமெ ஒண்ணும் இல்லை ஒடைக்க. என்னவானாலும் இப்படி கவனமில்லாத பொண்ணுக உண்டா ! கொஞ்சம் கவனமாயிருந்திருந்தா இப்ப இந்தக் கப்பு ஒடையுமா ? என் மாத்துக்குட்டீ, நீ பாத்து இப்படி ஒண்ணை .... இல்லை, என் தலையில எழுத்து ! வேறென்ன !

(ஸாராம்மா வேறொரு பாத்திரத்தில் காபி கொண்டு வருகிறாள்)

**உபதேசி** : (காபியை வாங்கிக் குடித்தவாறே) கொஞ்சங் கூட கவனமா நடந்துக்கனும் கொழந்தே ! மாதாபிதாவை சந்தோஷப் படுத்தாட்டா தீர்க்காயுசு கெடையாது என்று புஸ்தகத்தில் எழுதியிருக்கு. (காபிப் பாத்திரத்தைத் திருப்பிக் கொடுக்கிறார்) கர்த்தருக்கு தோத்திரம்

**பெண் :** ஓ! ரொம்பத் தான் நெளியறா ! வேற யாரு புருஷனும் பட்டாளத்துக்குப் போயிருக்காத மாதிரி. வந்து இந்தத் தேங்காயைத் துருவு.

(ஸாராம்மா இயந்திரம் போலப் பணிகிறாள். வலது பக்க வாசல் வழியாக குஞ்ஞுவர்க்கி- முப்பது வயது-பிரவேசிக் கிறான்).

**உபதேசி** : மரியாம்மாக்கா, அப்ப நான் இப்படிக் கெளம் பட்டுமா ? அவசரம். ஸாராம்மாகிட்ட ரொம்பக் கோப்பட வேண் டாம். உன் கோபத்தில் சூர்யன் அஸ்தமிக்காமலிருக் கட்டும். கர்த்தருக்கு தோத்திரம் ! (நடந்தவாறு) அவன் மீண்டும் வருகிறான் ! என் மக்களே, செவியுறுவீர். மனத்தை ஒருமுகப் படுத்துங்கள். இப்போது நல்ல காலம். (தொலைவில்) இப்போது தான் இரட்சையுறும் தினம்.

(எல்லோரும் உபதேசியார் போன வழியைப் பார்த்துக் கொண்டு நிற்கிறார்கள்)

**பெண்** : இன்னும் என்ன பாத்துட்டு நிக்கிறேடி ? சீக்கிரம் அந்தத் தேங்காயைத் துருவிட்டு ரெண்டு மொளகா வச்சு அரைச்சு வை. குஞ்ஞோர்க்கி, கொஞ்சம் உக்காரு. நான் கொஞ்சம் மேல அலம்பிட்டு வரேன். (நடக்கிறாள். உடைந்த துண்டுகளைப் பார்க்கிறாள்) பாத்தியா அவ பவுஷ. கப்பு ஒடைஞ்சதுன்னா அது செதறிக் கெடக்கு. அவளுக்கு நஷ்ட முண்டா. இனிமே நானே பெருக்கி எறியுறேன். வேற என்ன செய்யிறது ?

(குனிந்து பெருக்குகிறாள். ஸாராம்மா எழுந்து போய் உதவுகிறாள்)

**குஞ்ஞு** : என்ன பெரியம்மா, இத்தனை கோபம் ? எனக்கு விஷயமொண்ணும் புரியலியே, அதை ஸாராம்மா பெருக்கட்டும், விஷயத்தைச் சொல்லுங்க.

**பெண்** : விஷயம் என்னவா ? விஷயம் ஒண்ணுமில்லை, ஆகாயத்தைப் பார்த்துட்டு நடந்தா அப்படியாகாமப் போகுமா ?

**குஞ்ஞு** : எது ? எப்படியாகாம ?

**பெண்** : ஒனக்குத் தெரியலியா குஞ்ஞோர்க்கி ? (சுட்டிக் காட்டியவாறு) அங்க கெடக்குறது தெரியலியா ? ஒம் மொகத்துல கண்ணில்லையா ? அப்படியா பாத்திரத்தைப் பாத்துக்கிறது !

**குஞ்ஞு** : ஸாராம்மா என்ன, பாத்திரத்தை ஒடைச்சுட்டாளா ?

**பெண்** : பின்னே ஒங்கிட்டத்தானே இப்பச் சொன்னேன் ?

**குஞ்ஞு** : த்சொ, ஒரு கப்தானே ? பரவாயில்லை. தவறு யாருக்கும் நேரலாம்.

**பெண்** : இல்லாட்டாலும் ஒனக்கு உண்டு ஒரு சமாதானப் பேச்சு.

**குஞ்ஞு** : அத்தனை விலை ஒசந்ததும் இல்லியே அது.

**பெண்** : வெலையை நெனச்சு ஒண்ணுமில்லை. பாத்திரம் ஒடைஞ்சது அதிருஷ்டக் கேடு. இல்லை, அத பத்திரமா பாத்துக்கக் கூடாதா ? கஷ்டகாலந்தான் இதெல்லாம்.

**குஞ்ஞு** : கஷ்ட காலமில்லை, நல்ல காலம். இதைப் பாரு. (கையிலிருக்கும் ஒரு கவரைக் கொடுக்கிறான்)

**பெண்** : இதென்னது ? (கவரைத் திருப்பியும் நிமிர்த்தியும் பார்க்கிறாள். அதைத் திறந்து ஒரு காகிதத்தையெடுத்து குஞ்ஞுவர்க்கிக்கு நேராக நீட்டுகிறாள்) இதக் கொஞ்சம் படியேன்.

**குஞ்ஞு** : *படிக்க ஒண்ணுமில்லை. அதோரு தந்தி. 'இன்றைக்கு சாயங்காலம் மாத்துக்குட்டி வரான்'னு.*

**பெண்** : *ஆ! நெஜமா? இன்றைக்கேவா? நெஜமாவா? (சந்தோஷத்துடன்) இன்னொரு தடவைபடி. படியேன் குஞ்ஞோர்க்கி. இன்றைக்கா? இன்றைக்கே வருவானா? சாயங்கால வண்டிக்கா?*

**குஞ்ஞு** : ம். இன்றைக்கு எட்டு மணி வண்டிக்கு.

*(ஸாராம்மா எழுந்து வந்து தந்தியைப் பார்த்துக் கொண்டு நிற்கிறாள். அவள் முகத்தில் சற்றும் மகிழ்ச்சியில்லை. பெரும்பாலும் பயமே).*

**பெண்** : (மேலே பார்த்துக் கைகளைக் கூப்பியவாறு) கர்த்தர் என் பிரார்த்தனையைக் கேட்டுட்டார். இனிமெ அவனப் பார்க்க முடியாதுண்ணாக்கும் நெனைச்சேன். என் கொழந்தை தளர்ந்து போய் வருவானாயிருக்கும். (ஸாராம்மா மயக்கமுற்றவளாய் அம்மாவிடம் சாய்ந்து நிற்கிறாள். அவள் ஸாராம்மாவைத் தாங்கிக் கொள்கிறாள்). நீ அதிருஷ்டசாலிடீ ஸாராம்மா! நீ என்ன ஒண்ணும் பேசலை? ஹா, இதென்ன? இந்தப் பொண்ணுக்கு என்ன? – அடீ ஸாராம்மா! இவ ஒடம்பு விறைச்சுப் போக ஆரம்பிச்சுட்டுதே! (நிதானமாக ஒரு நாற்காலியில் அமர்த்துகிறாள்) குஞ்ஞுவர்க்கி, கொஞ்சம் தண்ணி கொண்டா. (குஞ்ஞுவர்க்கி தண்ணீரெடுத்து வந்து ஸாராம்மாவின் முகத்தில் தெளிக்கிறான்)

**ஸாரா** : *(மெல்லக் கண் திறந்து) ஆ! அம் .... அ ....*

**பெண்** : *ஸாராம்மா, ஒனக்கென்ன?*

**ஸாரா** : *ஒண்ணுமில்லை, ஒண்ணுமில்லை (எழுந்திருக்க முயற்சிக்கிறாள்)*

**பெண்** : வேண்டாம், நீ எழுந்திருக்க வேண்டாம். அல்லது இவளை உள்ளே கொண்டுபோய்ப் படுக்க வைக்கலாம். அவளுக்குத் தலை சுற்றல்னு தோணுது. (ஸாராம்மாவைப் பிடித்து எழுப்பிக் கொண்டு பின்புற வாயில் வழியாகப் போகிறாள்) மெல்ல ... மெல்லப் போதும் ஆ ... ஆ .... அப்படி ....

(குஞ்ஞுவர்க்கி தந்தியைக் கையில் பிடித்துக்கொண்டு வெளியே பார்த்தவாறு நிற்கிறான்)

**(திரை)**

## காட்சி இரண்டு

*(முதல் காட்சியின் அறைதான். கறிசாமான்கள் பெருகிக் கிடக்கின்றன. கட்டிலினருகே ஸ்டூலைப் போட்டு ஸாராம்மா அதிலமர்ந்து கட்டிலில் தலையைக் கவிழ்ந்து கிடக்கிறாள். குஞ்ஞுவர்க்கி யோசனை நிறைந்தவனாக உலாவுகிறான். சட்டென்று நிற்கிறான். நேரம் அந்தி வேளை).*

**குஞ்ஞு** : ஸாராம்மா !

**ஸாரா** : (தலையை உயர்த்தாமலேயே) உம் ... ?

**குஞ்ஞு** : இப்படிக் கொஞ்சம் பாரு ! (பக்கத்தில் சென்று குலுக்கி அழைக்கிறான்) மருந்தொண்ணும் நடக்காது இல்லே ? அவ்வளவு ஜாஸ்தியாயிடிச்சா ? எவ்வளவு ஆச்சு ?

**ஸாரா** : (தலையுயர்த்தி கோபத்தோடு குஞ்ஞுவர்க்கியைப் பார்க்கிறாள்) அது தெரிந்து என்ன பிரயோஜனம் ?

**குஞ்ஞு** : ஆனாலும் சொல்லக் கூடாதா ? எவ்வளவாச்சு ?

**ஸாரா** : (மறுபுறம் பார்த்துக் கொண்டு) நாலு.

**குஞ்ஞு** : ஹும் ! இவ்வளவு அதிகமா ஆயிட்டும் எங்கிட்ட சொல்லாம இருந்தது ஏன் ?

**ஸாரா** : இப்போ மன்னிப்புக் கேட்க வந்திருக்கீங்களோ ?

**குஞ்ஞு** : ஸாராம்மா, கோபப்படாதே, இனிமெ கோபப்பட்டு என்ன பலன் ? ஒன்னைப் போலயே நானும் சங்கடப்படறேன், ஆனால்....

**ஸாரா** : நான் தானே அனுபவிச்சாப் போதுமே, இல்லியா ?

**குஞ்ஞு** : பொறுப்பு முழுவதும் என்னுடையதுதான் ஸாராம்மா. நீ கோபப்படாம இருந்தாப் போதும். நான் என்ன செய்யணும்னு சொல்லு. (ஸாராம்மா திரும்பவும் கவிழ்ந்து படுத்து அழுகிறாள்) இனிமெ இதிலிருந்து தப்புற வழியை யோசிக்கலாம். நாம ஒருத்தரையொருத்தர் குத்தம் சொல்லிக்கிட்டிருந்தா என்ன பலன் கெடைக்கும் ? நேரமும் ஆகப் போவுது. நீ இப்படி ரகளை பண்ணினா எனக்கு யோசிக்கக் கூட...

**ஸாரா** : எனக்கு செத்துட்டா போதும். (நினைவு வந்து ஒரு சிலிர்ப்புடன்) ஐயோ வேண்டாம். எனக்கு யோசிக்கும்போது பயமாயிருக்கு. எனக்கு சாக வேண்டாம்.

**குஞ்ஞு** : அதுக்கு நீ சாகறதைப் பத்தி யாராவது இப்பப் பேசினாங்களா ? அப்படி ஒனக்குத் தோணுது.

**ஸாரா** : (குரலையுயர்த்தி) நீங்க கொஞ்சம் பேசாம இருங்க.

**குஞ்ஞு** : இவ்வளவு சத்தம் போடாதே ஸாராம்மா ! அம்மா வந்துட்டா...

**ஸாரா** : (குரலைத் தாழ்த்தாமல்) அம்மா வந்துட்டா ? ...ம் ?

**குஞ்ஞு** : ஆனதெல்லாம் ஆயிடிச்சு. இனிமே கோபப் படறதினால என்ன ...

**ஸாரா** : கோப்பட்டா ...

**குஞ்ஞு** : என் ஸாராம்மா, சத்தம் போடாதே அம்மா வரலாச்சு.

**ஸாரா** : வரட்டும். அம்மா ... அம்மா ... வந்தா ...(எதையோ நினைவு கூர்கிறாள். திரும்பவும் வெடித்து அழுகிறாள். திக்கித் திக்கி) நீங்க தயவு செஞ்சு என்னைத் தொந்திரவு பண்ணாமப் போங்க.

**குஞ்ஞு** : ஸாராம்மா, ஸாராம்மா !

**ஸாரா** : என்னால தாங்க முடியலியே நான் எப்படி... எனக்கு. . . எனக்குச் சாகணும்.

**குஞ்ஞு** : நிராசைப் படாதே ஸாராம்மா. நிராசைப் படறதுனால என்ன பிரயோஜனம் ?

**ஸாரா** : கொஞ்சம் பேசாம இருங்கன்னேன். ஐயோ, நான் என்ன சொல்வேனோ... கடவுளே !... எவ்வளவு ஆசையோடு வருவாங்க ? இங்க வந்ததும் என்னத்தைப் பாப்பாங்க ? ... பணம் அனுப்பிக் கொடுத்து நாலு வருஷம் என்னக் காப்பாத்தினது இதுக்கா ? ஐயோ ! தெய்வமே ! எனக்குச் சாகணும்.

**குஞ்ஞு** : ஸாராம்மா, சத்தம் போடாதே, அம்மா கேட்பாள். தலைமயிரைக் கட்டிக்கோ. கண்ணீரையெல்லாம் தொடச்செறி. அம்மா ஏதேனும் சந்தேகப்படுவா.

**ஸாரா** : (சட்டென்று குதித்தெழுந்து குஞ்ஞுவர்க்கியிடம்) அம்மா என்ன சந்தேகப்பட? அவர் மனம்போல சந்தேகப் படட்டும். நாலு வருஷங்கள் அநாதையாய், அன்பு காட்ட யாருமில்லாம, என்னைச் சமையல்காரியாய் இங்க வச்சுட்டு ... கல்யாணம் கழிகிறதுக்கு முன்னாடி ... பணம் சேர்க்க ...

**குஞ்ஞு** : கூடாது ஸாராம்மா, கூடாது. நாம என்னவானாலும் தப்பு செய்துட்டோம். இனிமெ நாம செஞ்சது சரின்னும் சொல்லிக்கணுமா ? இல்லாட்டாலும் பணத்துக்கு ஆசைப்பட்டு

மாத்துக் குட்டி போகலை, வேறு வேலைக்கு வழியில்லாமத் தானே போனான் ?

**ஸாரா** : *(காதைப் பொத்திக் கொண்டு)* இந்த வேதாந்தத்தைக் கொஞ்சம் நிறுத்தறீங்களா ?

**குஞ்ஞு** : நான் என்ன செய்யணும் ஸாராம்மா ?

**ஸாரா** : என்னை இங்கிருந்து கொண்டு போகணும்.

**குஞ்ஞு** : எங்கே ?

**ஸாரா** : *(திரும்பவும் கோபவசப்பட்டு)* முடியாது-முடியாது; வெட்கம் இல்லியே இப்படிச் சொல்ல, நான்தான் எல்லாம் அனுபவிக்கணும்னு இருக்கும், இல்லையா ? வெட்கம் கெட்ட ...

**குஞ்ஞு** : *(சற்று மிடுக்குடன்)* சொல்றதுக்கெல்லாம் இப்படிக் கோபப்பட்டு என்ன பிரயோஜனம் ? ரகளை பண்றதுனால என்னத்தைச் சாதிக்க முடியும் ? நீ கொஞ்சம் யோசிச்சுப் பாரு. இங்கேயிருந்து போகணும்னு நீ சொல்றே, எப்படிப் போகிறது ? என்கையில் பணமில்லை. எங்கயாவது போனப்புறம் பணமில்லாம எப்படி வாழறது ? கொஞ்சம் நாளாகிறபோது நீ என்னை வெறுப்பாய், உன்னைக் காப்பாற்ற முடியாத நானும் எந்த வழியிலாலது போக வேண்டி வரும். உனக்கு வாழ வேண்டாமா ? வாழணும்னா ... அப்புறம் ... எதுக்கு, நான் வெளிப் படையாச் சொல்றேன், வாழணும்னா உனக்கு மானத்தை விற்க வேண்டி வரும், என் ஸாராம்மா, நீ அதுக்குத் தயாரா ?

**ஸாரா** : நீங்க என்னை விட்டுப் போவானேன் ? நாம ஏதாவது கூலிவேலை செய்தாவது வாழலாம்.

**குஞ்ஞு** : அதொண்ணும் நடக்காது ஸாராம்மா. காதலிச்சோ வேறுவிதமாவோ ஒளிஞ்சு ஓடிப் போகிற ரெண்டு பேருன்னா கூலி வேலை செய்து வாழலாம்னு வச்சுக்கலாம். நாம அவமானத்தைப் பொறுக்க முடியாம ஓடிப் போகிறவங்கங்கிறதை நினைவு வச்சுக்க. அதோடு, பார்க்க நல்லாயிருக்கிற பெண்களுக்குக் கூலிவேலை செய்து மட்டும் வாழமுடியாது.

**ஸாரா** : *(நிராசையுடன்)* சுருக்கமாச் சொன்னா... போக முடியாதுங்கறீங்க.

**குஞ்ஞு** : அதோடு அம்மாவுக்கும் மாத்துக்குட்டிக்கும் எவ்வளவு அவமானமாயிருக்கும். அதுவும் அவன் வருகிற நாள்.

**ஸாரா** : *(தலை குனிந்து கண்ணீர் விடுகிறாள்)* என் தெய்வமே

**குஞ்ஞு** : *(அருகில் சென்று)* அழாதே ஸாராம்மா,

**ஸாரா** : அழாம என்ன செய்றது ? சாக எனக்கு இஷ்டமில்லை. சாவும் வரமாட்டேங்குது. ஓடிப் போகலாம்னா எங்கே, யாரோடு? இங்கே எப்படி இருப்பேன் ? .... வரலாச்சு. வரும்போது எப்படி முகத்தைப் பார்ப்பேன் ? என் ...

**குஞ்ஞு** : ச், ச், ச், பேசாதே. அம்மா வரா, ஏதாவது வேலை பார்த்துக்கிட்டிரு ... சீக்கிரம் ... (ஸாராம்மா தரையிலமர்ந்து தேங்காய் துருவத் தொடங்குகிறாள். வலது பக்க வாசல் வழியாக ஒரு பெரிய கோழியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு மாத்துக்குட்டியின் தாய் வருகிறாள்)

**தாய்** : பாத்தியா குஞ்ஞோர்க்கி. இந்த யுத்தம் வந்தப்புறம் மனுசங்கல்லாம் மகா அயோக்கியங்களாயிட்டாங்க ... (கோழியை நீட்டிப் பிடித்தவாறு) இந்தக் கோழிக்கு என்ன விலையிருக்கும் ?

**குஞ்ஞு** : எனக்குத் தெரியாது.

**தாய்** : ஆனாலும் ஒரு விலையில்லையா ?

**குஞ்ஞு** : ஒரு ரூபா.

**தாய்** : (வெற்றிப் பாவனையுடன்) ஆ, அதான் சொன்னேன். நல்ல நோட்டா மூணு அப்படி எண்ணிக் கொடுத்துத்தான் கெடச்சுது. அவளோட கடைசி வியாபாரம். இது ஆனாலும் வேண்டியிருக்கலை. என் மகன் பணமில்லையா? அவனுக்கில்லாம வேற யாருக்கு அதைச் செலவாக்கிறது? (பேசியவாறு கோழியை ஒரு மூலையில் விடுகிறாள்) அடீ பெண்ணே, ஒரு நாலு துண்டு வறுக்கணும். மீதியில ஒரு குருமாவும்–இவளுக்கென்ன, பிரமை பிடிச்சாப் போல இருக்கா?

**குஞ்ஞு** : களைப்பா இருக்கும். மாத்துக்குட்டி வரும்போது சரியாயிடும். அப்புறம் பெரியம்மா, கோழி எங்கிருந்து கெடச்சுது?

**தாய்** : அவ மொகத்தக் கொஞ்சம் பாரேன், ஒரு மாதிரி பிசாசு பிடிச்சது போல. அதுவும் நாலு வருஷம் கழிஞ்சு புருஷன் வீட்டுக்கு வரப்போ, (திரும்பிக் குஞ்ஞுவர்க்கியிடம்) நீ என்ன கேட்டே ? கோழி எங்கருந்த ன்னு, இல்லியா ? நீ போறதுக்கு முன்னாடிக் கொஞ்சம் இதக் கொன்னுட்டுப் போ குஞ்ஞோர்க்கி. அடீ, நீ அந்த அரிசி வெந்துடுச்சான்னு கொஞ்சம் பாரு. (ஸாராம்மா பொம்மையைப் போல போகிறாள்) இல்லெ, குஞ்ஞோர்க்கி, அந்தப் பொண்ணுக்கு என்ன ?

**குஞ்ஞு** : என்னவோ, எனக்கெப்படித் தெரியும் ?

**தாய்** : நீ இவ்வளவு நேரமா இங்கு இருந்துட்டு ஒண்ணும் கேக்கலியா ?

**குஞ்ஞு** : இல்லை இன்னும் ஏதாவது வாங்கிட்டு வரணுமா ?

**தாய்** : எல்லாம் வாங்கியாச்சு, மீன் கெடைக்கலை, பழம் இங்கே பழுத்திருக்கு. ஆனா பொண்ணு இப்படியிருந்தா நான் மாமியார் சண்டை போட்டிருக்கேன்னு நெனைப்பான் பையன் வந்ததும் –ஸாராம்மா, அடீ !

**ஸாரா** : (பின்புறமிருந்து) என்ன ? (பிரவேசிக்கிறாள்)

**தாய்** : இந்தக் கடுகுலருந்து கல்லைக் கொஞ்சம் பொறுக்கு. (ஸாராம்மா அதைச் செய்ய முற்படுகிறாள்) – வேண்டாம், நீ போய்த் திண்ணையில தண்ணியிருக்கான்னு பாரு. இல்லைன்னாக் கொஞ்சம் கொண்டு வை. (ஸாராம்மா போகிறாள்) வண்டி வரும்போது நீ டேசனுக்குப் போயி நின்னா என்ன குஞ்ஞோர்க்கி?

**குஞ்ஞு** : போணும்னா போறேன் இல்லை, நான் போறேன், அதான் நல்லது.

**தாய்** : வேணுங்கிறதில்லை அவனுக்கு. வழியொண்ணும் மறந்து போயிருக்காது. ஸாராம்மா !

(ஸாராம்மா வருகிறாள்)

**ஸாரா** : தண்ணியிருக்கு.

**தாய்** : என்னடி இவ்வளவு நேரம். கொஞ்சம் நடையை எட்டிப் போடு பொண்ணே. நீ அந்தக் கடுகைக் கொஞ்சம் தாளிச்சுவை. இல்லாட்டி வேண்டாம். நீ இங்க இருந்து தயிர் கடை, நான் கடுகைத் தாளிச்சுக்கிறேன். (கடுகுப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு உள்ளே போகிறாள். ஸாராம்மா தரையில மர்ந்து தயிர் கடைகிறாள். சிறிது நேரம் இருவரும் மௌம்)

**ஸாரா** : இனிமெ என்ன செய்ய ?

**குஞ்ஞு** : உம் ?

**ஸாரா** : என்ன செய்யன்னேன் ?

**குஞ்ஞு** : அதில்லை, நான் என்ன யோசிச்சுக்கிட்டிருந்தேன்னா...

**ஸாரா** : என்ன ?

**குஞ்ஞு** : நான் அதை அம்மாகிட்ட சொல்லலை. நான் ரயிலுக்குக் காத்து நிக்கணும்னு தந்தியில் இருந்தது. தவிர்க்கப் பார்த்தேன், முடியலை.

**ஸாரா** : குடிக்கலாம். இந்தக் கஷாயத்தை மூக்கு முட்டக் குடிச்சுடலாம் ரெண்டு பேரும். தாராளமா இருக்கும்.

**தாய்** : (உள்ளேயிருந்து) ரெண்டு மொளகும் ஒரு வெங்காயமும் அந்த மோருல நசுக்கிப் போடணும் கேட்டியா பொண்ணே !

**ஸாரா** : ஓ! (மெதுவாக) நேரம் என்னாச்சு ?

**குஞ்ஞு** : எட்டு இருக்கும்.

**ஸாரா** : ரயில் வரலாச்சா ?

**குஞ்ஞு** : *உம் (தூரத்தில் ரயிலின் நீண்ட விஸில் சப்தம். ஸாராம்மா பயத்துடன் எழுந்திருக்கிறாள்)*

**குரல்** : *(தொலைவிலிருந்து) அவன் மீண்டும் வருகிறான். தீர்ப்பு நாள் வந்து விட்டது.*

**குஞ்ஞு** : *அந்தப் பாழாப்போன திருட்டு உபதேசி !*

**ஸாரா** : வண்டி வருது.

**குஞ்ஞு** : *அந்த ஆசாமிக்குப் பைத்தியம்.*

**ஸாரா** : இப்ப வந்துடுவார்.

**குஞ்ஞு** : *உம் (இயந்திரம் போல நடந்து போகிறான்)*

**ஸாரா** : உம்.

**( திரை )**

## காட்சி மூன்று

*(முதற்காட்சியின் அறை. காய்கறிகளும் கோழியும் காணப்படவில்லை. ஸ்டூலின்மேல் லாந்தர் கொளுத்தி வைக்கப் பட்டிருக்கிறது. ஸாராம்மா யோசனையிலாழ்ந்து தயிர் கடைந்து கொண்டிருக்கிறாள். ஒரு துடைப்பத்துடன் தாய் பிரவேசிக்கிறாள்.)*

**தாய் :** இப்பக் கெடைக்கிற கடுகு கூட மோசம். ஒண்ணாவது வெடிக்க வேண்டாமா ? இப்படியுமுண்டா ஒரு யுத்தம். எல்லாம் தலைகீழ். கடுகு வெடிக்கிறதில்லை. மண்ணெண்ணெய் எரியறதில்லை. ஒண்ணும் முன்னைப் போல இல்லை. இதென்ன, வண்டி வந்து கொஞ்ச நேரம் ஆயிடிச்சே ! அவன் என்ன லேட்டாக்குறான் ? குஞ்ஞோர்க்கியயும் காணோம். அங்க எங்கயாவது நிண்ணுட்டிருப்பான்.

**ஸாரா :** *(சந்தேகத்துடன்)* இன்னைக்கு வந்திருக்க மாட்டாரோ?

**தாய் :** சே, வராம இருக்க- மாட்டான். நீ ஒந்தலைமயிரைக் கொஞ்சம் முடிஞ்சுவை. ஒரு நல்ல துணியும் உடுத்திக்க. பார்த்தா ஒரு சீர் வேண்டாமா ? *(தொலைவில் விஸில் சப்தம். ஸாராம்மாவுக்குத் தூக்கி வாரிப் போடுகிறது.)* நீ எதுக்குப் பொண்ணே நடுங்குறே ? வண்டி போகிற சத்தம் அது. அவன் இப்ப வருவான்.

**குரல் :** *(தூரத்தில்)* அவன் மீண்டும் வருகிறான் ! அவன் மீண்டும் வருகிறான் !

**ஸாரா :** *(ஸ்தம்பித்துப் போகிறாள். சற்று நேரம் கழிந்து)* ஐயோ, என் தெய்வமே ! என்னால முடியிலே... என்... *(பைத்தியத்தைப் போல எழுந்து ஓடுகிறாள். தயிர்ப் பாத்திரத்தில் கால் இடறிக் கவிழ்ந்து விழுகிறாள். தொலைவில் பாய்ந்து போகும் ரயிலின் சப்தம் கேட்கிறது. தாய் ஓடிப்போய் தாங்கி எழுப்புகிறாள).*

**தாய் :** ஐயோ ! இந்தப் பொண்ணு என்ன பண்ணினா ? ஸாராம்மா, மகளே ஸாராம்மா ! மகளே கண்ணைத் தெற. *(ஸாராம்மாவைத் தாங்கி எழுப்பி ஒரு கட்டிலில் படுக்க வைக்கிறாள். ஸாராம்மாவிடம் அசைவில்லை. ஒரு கருப்புக் கண்ணாடியணிந்து குஞ்ஞுவர்க்கியின் தோள்மேல் கையைப்*

போட்டுக் கொண்டு மாத்துக் குட்டி பிரவேசிக்கிறான். தாய் கொஞ்சம் தண்ணீரெடுத்து முகத்தில் தெளிக்கிறாள். அப்படியும் அசைவு இல்லையென்று கண்டு, மூச்சு சரியாக விட வசதியாக அவள் ஸாராம்மாவின் பாடீஸின் கட்டை அவிழ்க்கிறாள். விளக்கை எடுத்துக் கொண்டு வந்து அவள் ஸாராம்மாவின் உடல் முழுவதையும் பார்க்கிறாள். என்னவோ பட்டென்று அவளுடைய கவனத்தில் பட்டு, திடுக்கிடுகிறாள். இன்னொரு முறை கவனமாகப் பார்க்கிறாள். கலவரத்துடன் தூக்கிவாரிப்போட்டு எழுந்து மாரில் அடித்துக்கொண்டு) ஐயோ ! கெடுத்தியா ஸாராம்மா ! இந்தக் குடும்ப மானத்தைத் தொலைச்சிட்டியேடி ! ஐயோ! என் தெய்வமே. இதையும் பார்க்க வேண்டி வந்துடுச்சே. அதுவும் அவன் வர்ர நாள். என் மாத்துக்குட்டீ, நீ வரப்போ நான் என்ன சொல்வேன்! (தலையில் கை வைத்துத் தரையிலமர்கிறாள்) கடவுளே !

(மாத்துக்குட்டி வாசற்பக்கம் நின்று கொண்டு தாய் சொல்வது முழுவதையும் கேட்கிறான். அவனுக்கு விஷயம் என்னவென்று புரியவும் சட்டென்று கோபவசப் படுகிறான். உடல் உணர்ச்சி வயப்பட்டு நடுங்குகிறது. விரல்கள் நிலைகொள்ளாமல் பிசைகின்றன. குஞ்ஞுவர்க்கியின் முகத்தில் ஒரு குற்றவாளியின் உணர்ச்சி. அவன் மாத்துக்குட்டியின் குருட்டு விழிகளைப் பயம் நிறைந்தவனாய் நடுநடுவே பார்த்தவாறிருக்கிறான். மாத்துக் குட்டியிடமிருந்து தூர விலகி நிற்கவேண்டுமென்று அவனுக்கு விருப்பமிருந்த போதிலும் மாத்துக்குட்டியின் நிர்க்கதியை நினைத்தோ என்னவோ மனதின்றி அங்கேயே நிற்கிறான்)

**மாத்து** : (கனத்த குரலில்) ஸாராம்மா !

(தாய் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிறாள். கொஞ்சம் கொஞ்சமாக நினைவு திரும்பத் தொடங்கியிருந்த ஸாராம்மா மெதுவாக எழுந்து தாயைக் கட்டிப்பிடித்துக் கொண்டு நிற்கிறாள். குஞ்ஞுவர்க்கி தரையையே பார்த்தவாறிருக்கிறான்)

**தாய்** : மாத்துக்குட்டி, மகனே, ஒன்னைக் கொஞ்சம் க ....

**மாத்து** : சீ ! நிறுத்துங்க, ஒங்க பிரசங்கமொண்ணும் எனக்குக் கேட்க வேண்டியதில்லை, ஸாராம்மா, ஸாராம்மா ! அவள் இங்கேயில்லையா ?

**தாய்** : (மெல்லிய தொனியில்) இருக்கா.

**மாத்து** : அவளுக்குப் பேச முடியாதோ ?

**தாய்** : ஒங் கண்ணுக்கு என்ன ஆச்சு மகனே ?

**மாத்து** : என் கண்ணையும் காலையும் பத்திக் கேக்கலை, ஸாராம்மா என்ன செய்தா ? ஸாராம்மா எப்படிக் குடும்ப மானத்தைத் தொலைச்சான்னு கேக்கறேன்.

**தாய்** : அவ.... அவ வந்து ... விழுந்துட்டா, மொகத்துல தண் ணியத் தெளி ....

**மாத்து** : (கோபத்தை அடக்க முடியாமல் குஞ்ஞுவர்க்கியை விட்டு இரண்டு அடி முன்னால் வைத்து) கண்ணு பொட்டையாப் போயிட்டதுனால பொய் சொல்லி ஏமாத்திடலாம்னு பாக்கிறீங்களோ ? இல்லை. இனிமே அது நடக்காது. நான் எல்லாத்தையும் கேட்டாச்சு. அவ சொல்றாளோ பார்க்கலாம் !

**தாய்** : என் மகனே ...

**மாத்து** : நிறுத்தச் சொன்னா ! பெரிய ஒங்க அன்பு ! அதானே கண்ணையிழந்து யுத்தம் செய்து பணம் அனுப்பிக் காப்பாத்திட்டு திரும்பி வரும்போது தயார் பண்ணி வச்சிருக்கீங்க? அன்பு ! (வெறுப்போடு பல்லைக் கடிக்கிறான்) நீங்க ஒண்ணும் சொல்ல வேண்டாம். அவகதையை அவளே சொல்லட்டும் – அடீ ஸாராம்மா !

**ஸாரா** : (மிகவும் தாழ்ந்த குரலில்) என்னா ?

**மாத்து** : அப்போ ஒனக்குக் கேக்குது இல்லே ? நீ இங்க வா.

(அவள் மெல்ல அருகே செல்கிறாள். மாத்துக்குட்டி தடவிப் பார்க்கிறான், ஸாராம்மா கைகளிரண்டையும் தானே மாத்துக் குட்டியின் கைகளில் கொடுக்கிறாள்)

**மாத்து** : அடீ, அம்மா சொன்னதெல்லாம் நெஜமா ?

**தாய்** : (ஓடி வந்து மாத்துக் குட்டியின் கையைப் பிடித்துக் கொண்டு) அவளை அடிக்காதே மகனே, அவளுக்கு ...

**மாத்து** : இதுக்கு நடுவுல ஒங்களை யாரு வரச்சொன்னா – அடீ ஸாராம்மா, சொல்லு யாரு ஒன்னை இப்படியாக்கினது ?

**ஸாரா** : (நிலத்தை நோக்கியாவாறு) எனக்கு முடியாது.

**மாத்து** : ஒங்கிட்டக் கேட்டதுக்குப் பதில் சொல்லுங்கிறேன். (ஸாராம்மா நிர்க்கதியாகக் குஞ்ஞுவர்க்கியைப் பார்க்கிறாள். அப்பார்வையைத் தாங்க மாட்டாமல் குஞ்ஞுவர்க்கி அறையின் மறுபுறமாகப் போகிறான். ஸாராம்மா அழுதவாறு பேசுகிறாள்)

**ஸாரா** : அதை எங்கிட்டக் கேக்காதீங்க என்னை அடிச்சுக்குங்க, கொன்னு போடுங்க, இங்கேயிருந்து வெளியே வெரட்டிடுங்க. அதமட்டும் எங்கிட்டக் கேக்காதீங்க ! நான் சொல்ல மாட்டேன். (அழுதவாறு மாத்துக்குட்டியின் காலில் விழுகிறாள். அவன் பிடித்துத் தூக்கி நிறுத்துகிறான்)

**மாத்து** : நேரா நில்லுடி. நீ சொல்ல மாட்டேல்லே ? ஒன்னச் சொல்ல வைக்கிறேன். (மிதிக்கக் காலைத் தூக்குகிறான். வேண்டாமென்று முடிவுசெய்து அவளுடைய தலை மயிரைப் பிடிக்கிறான்) அடீ, கேட்டதுக்குப் பதில் சொல்லுடிங்கிறேன்.

**ஸாரா** : (மௌனமாய் நிற்கிறாள், மாத்துக்குட்டி தலைமயிரைப் பிடித்துக் குலுக்குகிறான்) இல்லை, நான் சொல்லமாட்டேன்.

**மாத்து** : (கோபம் இன்னும் அதிகமாகிறது) மாட்டாய்! இல்லையா? தேவடியா! நீ சொல்றியா இல்லையான்னு பாக்கறேன். (கழுத்தைப் பிடிக்கிறான். குஞ்ஞுவர்க்கி ஓடிச் சென்று தடுக்கிறான்).

**குஞ்ஞு** : வேண்டாம், மாத்துக்குட்டி, வேண்டாம். ஸாராம்மாவை மிதிக்காதே, நான்தான் இதுக்குக் காரணம். அவள் பாவம். நான் தான் அவளை வழி தவற வச்சேன். நான் ஒங்க எல்லாரையும் ஏமாத்திட்டேன். ஒங்க உதார குணத்தை நான் துர் உபயோகப்படுத்திட்டேன். எனக்கு மன்னிப்புக்குத் தகுதியில்லை. ஆனா, அந்த சாதுவை உதைக்காதே.

(எல்லோரும் திகைக்கிறார்கள், தாயார் சட்டென்று கோபம் மேலிட குஞ்ஞுவர்க்கியின் நேராகத் திரும்புகிறாள்)

**தாய்** : குடும்பத்துல விட லாயக்கில்லாத துஷ்டா ! எறங்கு வெளியில. நம்பி வீட்டுக்குள்ள விட்டு, காபியும் சாப்பாடும் தந்து உபசாரம் பண்ணினதுக்கு நன்றி காட்டிட்டியே ! நன்றியில்லாத நாய் ! உம், எறங்கு.

**குஞ்ஞு** : பெரியம்மா, கோபப்பட வேண்டாம். நான் போயிட்டுத்தானிருக்கேன், நான் ஒங்களுக்கெல்லாம் துரோகம் பண்ணிட்டேன். மாத்துக்குட்டீ, என் பட்சமாக எனக்குச் சொல்ல ஒண்ணுமில்லை. ஆனாலும் ஒண்ணு இருக்கு. நடக்க வேண்டியது நடந்து போச்சு. ஸாராம்மா அவள் தவறுக்கு வேண்டியதுக்கு அதிகமாகவே அனுபவிச்சாயிடுச்சு. இனிமே அவளை ஒதைக்கிறது பாவம். நான்தான் குற்றவாளி பெரியம்மா ! நான் போறேன். நீங்க செய்திருக்கிற ஒபகாரங்களுக்கு நன்றிகாட்ட எனக்கு சக்தியில்லை. மாத்துக்குட்டி, மன்னிச்சுடு, (நடந்து போகிறான். ஸாராம்மா பார்த்தவாறிருக்கிறாள். வாயிற்புறத்திலிருந்து குஞ்ஞுவர்க்கி திரும்பி ஸாராம்மாவைப் பார்க்கிறான். ஆனால் அவள் முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள். ஒரு பெருமூச்சுடன் குஞ்ஞுவர்க்கி வெளியே போகிறான்).

**தாய்** : (பார்த்தவாறு) பால் வார்த்த கையைக் கடிக்கிற பாம்பு! துஷ்டன் ! இவனுக்கு நரகத்துல கூட எடம் கெடைக்காது.

**மாத்து** : அவனை எதுக்குச் சொல்றீங்க ? இவளில்லையா ஆளு ! அவனில்லைன்னா இன்னொருத்தன்.

**தாய்** : நீயும் வெளியில் எறங்கிப் போயிரக் கூடாதா அவனோட ? என்ன பாத்துக்கிட்டு நிக்கிறே ? ஒனக்கு அங்க தான் எடம். (சுட்டிக்காட்டியவாறு) அங்கே – அங்கே அந்த ரோட்டுல.

**மாத்து** : என்னைக்கு ஆரம்பிச்சேடி இந்த வியாபாரம் ?

**ஸாரா** : (மாத்துக்குட்டியின் பார்வையிழந்த விழிகளின் முன் வணங்கியவாறு) ஐயோ! அப்படிச் சொல்லாதீங்க. நான்

குற்றவாளிதான். அதுக்கு என்னை இஷ்டம் போல தண்டிச்சுக்குங்க. ஒரு தப்புக்கு, சத்தியம் ... ஒரே தடவை ... (அழுகிறாள்)

**மாத்து** : (பரிகாசமாகச் சிரித்துக் கொண்டு) இப்ப அவ கணக்குக் கொண்டு வரா. சரியாப் போச்சு ! அவனுடைய கணக்கும் அவளுடைய வேதாந்தமும்! ... கேட்கிறேன், கேட்கிறேன் !

**தாய்** : இந்த மூதேவி இங்க வந்தப்புறம்–என் கடவுளே, நாசமில்லாம எதுவும் ... ஓ ! (கைகளைத் தலையில் வைக்கிறாள்).

(மாத்துக் குட்டி சிரிப்பை நிறுத்துவதில்லை. ஸாராம்மா சட்டென்று நிராசையும் கோபமும் கலந்த முகபாவத்துடன் எழுந்து மாத்துக் குட்டியைப் பார்த்தவாறு நிற்கிறாள்)

**ஸாரா** : (பட்டென்று சினத்துடன்) போதும் நிறுத்துங்க. இனிமே நான் என்ன செய்யணும் ? சாகணுமா ? இவ்வளவு சிரிக்க என்ன இருக்கு ? நான் தப்புச் செய்திட்டேன். அதுக்கு வேண்டியது அனுபவிச்சாச்சு. இன்னும் என்னைப் போட்டு மிதிக்கிறது எதுக்காக ?- என்னை வெளியே தள்ளிருங்க. இங்க நிறுத்திக் கொல்றது எதுக்காக ? நான் ஒரு பெண். எனக்கும் வாழணும். நாலு வருஷம் யாரும் எதுவும் இல்லாம, அன்பு காட்டவோ ஒதவி செய்யவோ யாருமில்லாம என்னைத் தனியா விட்டுட்டு பேருக்குக் கல்யாணமானவள்னும் சொல்லிட்டு இப்ப வந்திருக்காரு கேட்க. (வெடித்து அழுகிறாள், காண முடியாத ஸாராம்மாவின் கோபம் கண்டு ஆச்சரியவயப்பட்ட மாத்துக்குட்டி திடீரென்ற இந்த அழுகையைக் காண்கையில் ஒரேயடியாகக் குழம்பிப் போகிறான். அவன் களைப்புற்று நாற்காலிக்காகத் தடவுகிறான். ஸாராம்மா அதைப் புரிந்து கொண்டு அவனுடைய கையைப்பிடித்து நாற்காலியில் அமர்த்துகிறாள். எல்லோரும் சற்று நேரம் மௌனமாயிருக்கிறார்கள்)

**தாய்** : (மாத்துக் குட்டியினருகில் சென்று) என் மகனே, உன் கண்ணுக்கு என்னாச்சு ? சொல்லு மகனே, அம்மா கேக்கட்டும். (அவள் மாத்துக் குட்டியைப் பிடித்துக் குலுக்கியும் அவன் அசைவதில்லை, நிராசையுடன் அவள் ஸாராம்மாவின் பக்கம் திரும்புகிறாள்). பிசாசே ! இவளைக் கட்டிக்கிட்டுத்தான் என் மகன் கண்ணு போச்சு. பொணமே ! இன்னும் எதுக்குடி முழிச்சுக்கிட்டு நிக்கிறே ?

**குரல்** : (தொலைவில்) அவன் மீண்டும் வருகிறான் ! சத்ய விசுவாசிகளே! தயாராகிக் கொள்ளுங்கள். (ஸாராம்மா கவனித்து விட்டுக் கோபத்துடன் பல்லைக் கடிக்கிறாள்). அவன் வரும்போது விழிப்புள்ள கன்னிகளை அவன் ஸ்வீகரிப்பான். (மாத்துக்குட்டி தலையை உயர்த்திக் கவனிக்கிறான்). இல்லாதவர்களை அவன் சாகாத புழுவும் அணையாத நெருப்புமுள்ள நித்ய நரகத்துள் பிடித்துத் தள்ளுவான். அவர்களுக்கு–ஹா, பாவம் !

**தாய் :** அது ஒரு உபதேசியார் மகனே !

(மாத்துக்குட்டி அதைக் கேட்பதில்லை. அவன் தாகமெடுப்பது போலக் கழுத்தைத் தடவிக் கொள்கிறான். ஸாராம்மா விஷயத்தைப் புரிந்துகொண்டு ஓடிப்போய் தண்ணீரெடுத்து வந்து கொடுக்கிறாள்)

**ஸாரா :** தண்ணீர் !

(மாத்துக் குட்டி தண்ணீர் குடித்துவிட்டு தட்டுத் தடுமாறி நடக்கிறான். அவன் வழியில் கிடக்கும் ஒரு ஸ்டூலை ஸாராம்மா எடுத்து நகர்த்துகிறாள்)

**மாத்து :** (நின்று, இடறிய தொனியில்) கடவுளே, ஏன் இந்தக் கஷ்டங்களெல்லாம்! என்னவெல்லாம் பயங்கரமான காட்சிகளைக் கண்டேன் ! என்னவெல்லாம் நரக வேதனைகளை அனுபவிச்சேன் ! தலையிழந்த மனித உடல்களிலிருந்து ரத்தம் சீறிப் பாய்வதைப் பார்த்திருக்கேன். அந்த நாசமாப் போற யுத்தத்தின் பயங்கர முடிவுகள்—பாம் வெடித்து காலும், தலையும், கையும், கழுத்தும் எல்லாம் நாலு புறமும் சிதறுவதைப் பார்த்திருக்கேன். உயிர் பிரிந்திராத மனித உடம்புகளைக் குள்ள நரிகள் பிடித்து இழுத்துக் கொண்டு போகும் பயங்கரக் காட்சி ! ஐயோ!... அதொண்ணும் இத்தனை அதிகமா என்னை வேதனைப்படுத்தலை ... (இன்னும் கொஞ்சம் தணிந்த குரலில்) அம்மா எறந்து போயிட்டதா நான் கனவு கண்டிருக்கேன். என் கண் பிளந்ததும் நான் செத்துடுவேன்னு டாக்டர்மார் சொன்னாங்க. ஆனா ஆனா ... (தாங்க முடியாத துக்கத்துடன் நீண்ட பெருமூச்சு விடுகிறான்) ஆனாலும் என் ஸாராம்மா நீ இப்படி ...

**ஸாரா :** (அருகில் வந்து) அப்படிச் சொல்லாதீங்க. நான் தப்புச் செய்திட்டேன். மன்னிக்க முடியாத தவறு. அதுக்கான தண்டனையெல்லாம் நான் அனுபவிச்சுக்கிறேன். நான் ஒரு சுகத்துக்கும் ஆசைப்படலை... ஆனாலும்... ஒரு வேலைக்காரியைப் போல... (அவள் குரல் இடறுகிறது. தலையைக் குனிந்து அவள் மாத்துக் குட்டியின் பாதத்தைத் தொட்டு நெற்றியில் வைக்கிறாள்).

**மாத்து :** (ஸாராம்மாவின் தலையில் அன்பு பொங்கத் தடவியவாறு கிளர்ச்சியுடன்) அழாதே ஸாராம்மா, (கண நேரம் மௌனமாயிருந்து விட்டு) அம்மா, எனக்குப் பசிக்குது.

**(திரை)**

## இரண்டாம் அங்கம்

## *பெண்ணே, எனக்கும் உனக்கும் இடையே என்ன ?*

### காட்சி ஒன்று

*(மாத்துக்குட்டியின் வீட்டில் ஓர் அறை. பின்புறமும் வலதுபக்கமும் வாசல்கள். ஸாராம்மா ஒரு மூலையிலமர்ந்து காய்கறி நறுக்கிக் கொண்டிருக்கிறாள். மாத்துக்குட்டி கருப்புக் கண்ணாடியணிந்து மெல்ல உலாவிக் கொண்டிருக்கிறான்.)*

**மாத்து** : *(உட்புறம் திரும்பி) அம்மா ! அம்மா !*

**ஸாரா** : *ஏன் எப்பவும் இப்படி அம்மாவக் கூப்பிடறீங்க ?*

**மாத்து** : *எனக்குக் கொஞ்சம் காபி வேணும்*

**ஸாரா** : *(எழுந்திருந்தவாறே) அத எங்கிட்ட சொன்னா போதாதா ?*

**மாத்து** : *அம்மா !*

**அம்மா** : *(பின்னாலிருந்து) ஓ !*

**மாத்து** : *(உரக்க) எனக்குக் கொஞ்சம் காபி தா.*

**ஸாரா** : *கேட்டதுக்குப் பதில் சொல்லாதது ஏன் ?*

**மாத்து** : *அதுக்கு விசேஷமா பதில் ஒண்ணும் சொல்றதுக் கில்லை. மனுஷனுக்கு ரொம்பவும் கஷ்டம் வரும்போது ஓடிப்போகிறது அம்மாகிட்டத்தான்.*

**ஸாரா** : *எப்பவும் ?*

**மாத்து** : *எப்பவும்*

**ஸாரா** : *மனைவி இருந்தாலும் ?*

**மாத்து** : மனைவியும் மக்களும் இருந்தாலும் அம்மாவப் போல பொறுத்துக்கவும் அன்பு காட்டவும் ஒரு மனைவிக்கு முடியாது.

*(அம்மா ஒரு கப் காபியுடன் பிரவேசிக்கிறாள். இருமுகிறாள். காபியை மாத்துக் குட்டியின் கையில் பிடித்து வைக்கிறாள்).*

**அம்மா** : *என்னடீ பொண்ணே ? அத்தனுண்டு காபி எடுத்து வந்து கொடுக்கப் படாதா ? அதுக்கும் இந்த வயசுகாலத்துல நான் தான் வரணுமா ? இருமிக்கிட்டாவது ... (இருமுகிறாள்) (ஸாராம்மா மௌனமாக மாத்துக் குட்டியின் முகத்தை நோக்குகிறாள். ஊமையான அந்த விண்ணப்பம் குருடனான மாத்துக்குட்டிக்குப் பொருளற்றதென்பதைக் கண்டு நிராசையுடன் திரும்பவும் தலை குனிந்தமர்ந்து காய்கறி வெட்டுகிறாள்).*

**மாத்து** : *(காபி குடித்தவாறு) அம்மா, அது அவ தப்பில்லை. அம்மாவே கொண்டு வந்தால் போதும்னு நான் சொன்னதுனால தான்.*

**அம்மா** : *அது அப்படித்தான் ஆகும். (வெறுப்பைக் காட்டி தலையைக் குலுக்குகிறாள்) அவள் குணம் பிடிக்காது. எனக் கென்னடான்னா இருமல்னால... நேத்து மழையில நனைஞ் சதுலன்னு தோணுது, நான் போயிக் கொஞ்சம் படுத்துக்கட்டும்.*

*(காபிப் பாத்திரத்தை வாங்கிக் கொண்டு உட்புறம் போகிறாள். மாத்துக்குட்டி பாக்கெட்டிலிருந்து பீடியை எடுத்துக் கொளுத்திக் கொண்டு திரும்பவும் நடக்கிறான்)*

**மாத்து** : *ஸாராம்மா !*

**ஸாரா** : *என்னவோ ?*

**மாத்து** : *நீ ஏன் ஒண்ணும் பேசலை ?*

**ஸாரா** : *நான் என்ன பேசறது ? யாருட்ட பேசறது ?*

**மாத்து** : *தாய்மார்களுக்குத்தான் கூடுதல் அன்புன்னு சொன் னதுல ஒனக்கென்ன? நீயும் ஒரு நாளைக்கு – (பட்டென்று நிறுத்துகிறான்)*

**ஸாரா** : *(முகம் வெளிறுகிறது–வேகமாக எழுந்து போய் மாத்துக்குட்டியின் பக்கத்தில் நிற்கிறாள்) ஆமாம்; அதுதான். தன் மனைவி அந்த ஸ்தானத்துக்கு அருகதை இல்லைன்னு தெரிஞ்சுக் கிட்டவங்க அம்மாகிட்டத்தான் போவாங்க. என்னை மன்னிச்சுடுங்க ! நான் மனசைத் தெறந்து சொல்றேன். நான் ஒங்க வாழ்க்கையில் ஒரு சுமை. நீங்க என்னைக் காப்பாத்தினீங்க, நான் ஒங்களுக்கு வஞ்சனை பண்ணினேன், ஒங்க அன்புக்கு எனக்கு உரிமையில்லை. நான் போயிடறேன், எனக்குக் கோபமோ அதிருப்தியோ ஒண்ணுமில்லை, தயவு செஞ்சு எனக்குப் போக அனுமதி கொடுங்க.*

**மாத்து** : ஸாராம்மா, நீ தெறந்து சொல்றது எனக்கு சந்தோஷம், நானும் அதுபோல எல்லாம் தெறந்து சொல்றேன். உன் சுகத்தைப் பற்றி எனக்கு ரொம்பவும் கவலையுண்டு. ஆனால் ஒரு மனைவி என்கிற நிலையில் உன்னை நேசிக்க என்னால் முடியலை. நீ கிளர்ச்சியுற வேண்டாம். கடந்த மூணு மாசமா நான் உன்னை நேசிக்க முயற்சி செய்துட்டுருக்கேன். நமக்குள்ளே உள்ள பந்தம் மாதாகோயிலில் வைத்து ஏதோ சில சடங்குகள் நம் முன்னால் நடத்தப்பட்டன என்பது மட்டுந்தான். ஒடனேயே நான் யுத்துத்துக்குப் போயிட்டேன். நான் திரும்பி வர்ரதுக்குள்ள அந்த பலவீனமான பந்தம் கூடத் தகர்ந்து போய்விட்டிருந்தது. அன்றைக்கு உன்னை இரண்டாம் முறையாகவும் ஏற்றுக்கொள்ள என்னைத் தூண்டியது என்னுடைய கருணை மட்டுமில்லை; அதில் சுயநலமுமிருந்தது. சற்று என் குறையைப் பற்றிய உணர்வும் இருந்தது. நீ வழி தவறிப் போய் விட்டாய். நான் குருடனாகிவிட்டேன். அதனால் தகர்ந்துபோன இரண்டு வாழ்க்கைகள் சேர்ந்திணைந்து புதிய ஒன்றை உண்டாக்கலாமென்று நான் ஆசைப்பட்டேன். ஆனால் அன்பு அப்படி உருவாக்கப்படக் கூடிய ஒன்றல்லவாயிருக்கலாம். யதார்த்தமான வாழ்க்கை சௌகரியங்கள் மட்டுமல்லவே விவாகத்தின் அடிப்படை! (தாய் உள்ளேயிருந்து இருமுகிறாள்) நாம் ஒருபோதும் சேரப்போவதில்லை. இனி முக்கியமாக.....

**ஸாரா** : (மிகவும் சாந்தமாக, தணிந்த குரலில்) முக்கியமாக?

**மாத்து** : என் கண் பொட்டையாகிவிட்டாலும், உன் உடலில் உண்டாகும் மாற்றங்கள் .....

**ஸாரா** : (காதைப் பொத்திக்கொண்டு) ஐயோ! நிறுத்துங்க. இப்படிப் பேசாதீங்களேன். எனக்கு அதைப் பொறுக்க முடியலை! என்னை வெரட்டிடுங்க. இப்படி உயிரோட சுடாதீங்களேன் !

**மாத்து** : ஸாராம்மா! நான் உன்னை வேதனைப் படுத்துறதுக்காகச் சொல்லலை. எனக்கு உன்னிடம் ஒரு கடமையுண்டு. உன்னை இங்கிருந்து வெரட்டிட்டா உனக்கு யாரு துணை ?

**ஸாரா** : ஒங்க மனச்சந்தோஷத்துக்குத் தேவைன்னா என்னை இங்கிருந்து வெரட்டிடுங்க. நான் எங்கயாவது போய் வாழ்ந்துக்கறேன். நான் குற்றவாளிதான். ஆனாலும் எனக்கும் இருக்கு ஒரு இதயம் !

**மாத்து** : ஸாராம்மா, நீ அனாவசியமானதெல்லாம் யோசிச்சு ஒண்ணும் மனசைப் புண்ணாக்கிக்கிட வேண்டாம். என் கையால் இந்த ஜன்மத்தில் நான் எந்தவிதமான கொடுமையும் செய்ய மாட்டேன். குரூரத்தின் சுபாவம் என்னவெல்லாம்னு யுத்தகளம் எனக்குப் புரிய வச்சிருக்கு. நீ போறேன்னு சொல்றே, யாராவது உன்னைப் போகச் சொன்னாங்களா? போனா நீ என்ன செய்வே?

**குரல்** : (மேடையின் பின்னாலிருந்து) அவன் மீண்டும் வருகிறான்! (இருவரும் திடுக்கிடுகிறார்கள்)

**மாத்து** : (பட்டென்று) ஸாராம்மா ! குஞ்ஞோர்க்கி எங்கேன்னு ஒனக்குத் தெரியுமா ? (ஸாராம்மா மௌனம் சாதிக்கிறாள்)

**மாத்து** : கேட்டது காதில விழலியா ?

**ஸாரா** : (தரையைப் பார்த்தவாறு) இங்க எங்கேயோ இருக்கார்.

**மாத்து** : என்ன செய்துட்டுருக்கான் ?

**ஸாரா** : எனக்குத் தெரியாது! சும்மா அலைஞ்சு திரிஞ்சுக் கிட்டிருக்கார்னு தோணுது.

**மாத்து** : இங்க வரதுண்டா ?

**ஸாரா** : இல்லை.

**குரல்** : (பின்புறமிருந்து) அவன் மீண்டும் வருகிறான்! விழிப்பு மிக்க மணவாட்டிகளே ! காத்திருங்கள் !

**மாத்து** : ஆனாலும் .... என் மிகவும் உற்ற நண்பன் ... என்ன உலகம் ! கடவுளே! மனுஷன் பிசாசாகி விடுகிறான்.

**ஸாரா** : (விம்மி வெடித்துக்கொண்டு) ஐயோ, அப்படிச் சொல்லாதீங்க ! என் தப்புக்கு மத்தவங்க யாரையாவது ஏன் குத்தம் சொல்றீங்க ? என்னைத் தண்டிச்சுக்குங்க.

**மாத்து** : இன்னும் நீ அவனை சரியென்கிறாயல்லவோ ?

**ஸாரா** : கோபப்படாதீங்க! என்னென்னவோ கேட்டு என்னைப் பேசவச்சுடறீங்க. அவரும் தப்பு செய்தார். அதை என்கிட்ட சொல்றதை நான் எப்படி சகிப்பேன் ?

**மாத்து** : சரி, நான் பொட்டைக் கண்ணனாச்சே, இனிமேலும் என்னை வஞ்சிக்கலாமில்லையா ?

**ஸாரா** : ஐயோ ! இல்லை, நீங்க வந்த பிறகு நான் அவரைப் பார்க்கலை, இனிமே பார்க்கவும் மாட்டேன். எங்களை மன்னிக்கணும்னு மட்டுமே நான் கேட்டுக்கறேன்.

**மாத்து** : நான் அவனை நேசிச்சேன். அவன் எனக்குத் துரோகம் பண்ணினான். அவன் இந்த மூணு மாசமா என்னை ஒரு தடவை பார்க்கக் கூட இல்லை. அப்படியும் நான் அவனை மன்னிக்கனும். எதற்காக ?

**ஸாரா** : ஒங்க பழைய சிநேகிதர் ஒங்களை இன்றும் நேசிக்கிறார். ஒங்ககிட்ட மன்னிப்புக் கேட்கணும்னு விரும்புகிறார். ஆனால் அதுக்காக ஒங்க பக்கத்துல வர தைரியமில்லை, அவ்வளவு தான் !

**மாத்து** : மன்னிப்புக் கேட்கணும்னா ?

**ஸாரா** : *ஆமாம். அன்றைக்குப் பல முறை முயற்சி செய்தார்! ஆனா நீங்க கோபிச்சுக்கிட்டிருந்தீங்க.*

**மாத்து** : *ஒனக்கு இது எப்படித் தெரியும்?*

**ஸாரா** : *நானொரு பெண்ணல்லவோ?*

**மாத்து** : *சுருக்கமாச் சொன்னா, உன் இதயம் இப்பவும் குஞ்ஞோர்க்கி கிட்டத்தான்.*

**ஸாரா** : *திரும்பத்திரும்ப இப்படிச் சொல்லி என்னை வேதனைப் படுத்துவானேன்?*

**மாத்து** : *(நிராசையுடன் திரும்பி நின்றுவிட்டு, திரும்பி) ஸாராம்மா! நான் பண்ணினதுதான் தப்பு. நான் தான் உங்களை வஞ்சிக்கிறேன். என்னை மன்னிச்சுடு! இனிமெ நான் உங்க வாழ்க்கைக்குக் குறுக்கே நிற்க மாட்டேன். நானே போயிடறேன்.*

**ஸாரா** : *(ஓடி வந்து மாத்துக் குட்டியின் கைகளைப் பிடித்துக் கொண்டு) ஐயோ! அப்படிச் சொல்லாதீங்க. நான் உங்களை ஏமாற்றினேன்; துரோகம் பண்ணினேன். இன்னும் என்னால் இங்கருந்து நீங்க போகவும் செய்திட்டா? நான் ஆணையிட்டுச் சொல்றேன் "அவர் ஒருபோதும் இங்க வரமாட்டார்"*

**மாத்து** : *ஸாராம்மா! நீ என்னைத் தப்பாப் புரிஞ்சுகிடறாய், குஞ்ஞோர்க்கி இங்க வரதுல எனக்கு எந்த விதமான ஆட்சேபணையுமில்லை, நான் ஒன்னை வெறுத்துட்டுப் போகலை. நான் ஒங்களுக்குக் குறுக்கே நிக்கிறதுனால மட்டுந்தான்.*

**ஸாரா** : *நீங்க போயிட்டா அம்மா என்ன செய்வாங்க?*

**மாத்து** : *(சற்றுப் பின்னர்) அம்மா, சரிதான். அம்மா என்ன செய்வா? எனக்குப் போயிடணும்னு இருக்கு. ஆனா நான் எப்படி அம்மாவை விட்டுட்டுப் போவேன்? போதாததுக்கு நான் பொட்டைக் கண்ணனுமாகிப் போனேன், அம்மாவுக்காகவும் எனக்காகவும் நான் இங்கே இன்னும் கொஞ்ச காலம் இருக்கேன், நீ அதப் பொறுத்துக்கணும்.*

**அம்மா** : *(உள்ளேயிருந்து) மாத்துக்குட்டீ, மகனே மாத்துக்குட்டீ, (இருமுகிறாள்)*

**ஸாரா** : *அம்மா கூப்பிடறாங்க*

**அம்மா** : *(உள்ளே) மாத்துக் குட்டீ!*

**மாத்து** : *என்னவாம்? (ஸாராம்மாவின் நேராகக் கை நீட்டுகிறான். ஸாராம்மா மாத்துக்குட்டியின் கையைப் பிடித்து உட்புறமாக அழைத்துப் போகிறாள்.)*

**(திரை)**

## காட்சி இரண்டு

*(மாத்துக் குட்டியின் அறை. ஸ்டேஜின் வலது பக்கத்தில் முன் புறமாக நகர்ந்து நின்று கொண்டு மாத்துக்குட்டி நமக்குப் பரிச்சயமற்ற ஒருவனிடம் பேசிக் கொண்டிருக்கிறான்.)*

**பரிச்சயமற்றவன்** : *அது பரவாயில்லை.*

**மாத்து** : *கண்ணு கூட இல்லாமப் பின்னெ என்னால என்ன தான் செய்ய முடியும் ?*

**பரிச்ச** : *வெடி மருந்தெல்லாம் அங்கே இருக்கு. அதை வெடியாகக் கட்டுறதும், எறியறதும் எல்லாம் எப்படின்னு சொல்லித் தந்தாப் போதும்*

**மாத்து** : *அது சரிதான் ராகவா, ஆனாலும் ....*

**பரிச்ச** : *வரதுல வேற ஏதாவது தடையுண்டா ?*

**மாத்து** : *இல்லாம இல்லை.*

**பரிச்ச** : *, 'ண மனசில்லைன்னா நான் கட்டாயப்படுத்தலை. விஷயம் ரொம்ப ஆபத்து நிறைஞ்சதுன்னு உங்களுக்குத் தெரியுமில்லையா ?*

**மாத்து** : *என் ராகவா ! இப்ப நடந்தது போல ஒரு யுத்தத்தைக் கண்ட எனக்கு கோழைத்தனம் என்கிறதின் அர்த்தம் கூடத் தெரியாது. ஒங்களோட வர்ரதுல எனக்கு ஆட்சேபணையில்லை. இத்தாலியிலும் எகிப்திலும் யுத்தம் செய்ய எங்களுக்கு உற்சாகம் தந்தது எதிரிகளின் நீசத்தனமான குரூரமே. இங்கே காணும் அக்கிரமமும், அநீதியும் என்னை வெறிகொள்ள வைக்குது. இங்கேயும் நான் யுத்தம் செய்யத் தயார்தான். வெற்றியைப் பற்றிக் கூட நான் சிந்திக்கிறதில்லை. ஒரு விஷயந்தான் என்னைத் தடுக்குது. நான் இங்கிருந்து போனா அம்மாவுக்கு யாரும் துணையில்லை.*

**பரிச்ச** : *பொதுநலத்துக்காக வேண்டி சொந்த உணர்ச்சிகளைப் பலியிடாமல் வேறுவழியில்லைன்னு உங்களுக்குத் தெரியுமே. நான் என் அம்மாவப் பார்த்து ஆறு வருஷம் ஆச்சு.*

**மாத்து** : நான் சொல்றதை நியாயப்படுத்த நான் முயற்சிக்கலை. ஆனாலும் உடனே ஒரு பதில் சொல்ல... (உபதேசியார் பிரவேசிக்கிறார்)

**உபதேசி** : கர்த்தருக்குத் தோத்திரம் ! என்ன மாத்துக்குட்டி, சௌக்கியம் தானே ?

**பரிச்ச** : அப்ப மாத்துக்குட்டி, நான் போய்ட்டு வரட்டுமா ? (அவசரமாக வெளியே போகிறான்)

**உபதேசி** : (சந்தேகத்துடன் ராகவனைப் பார்த்துக் கொண்டு) அது யாரு, மாத்துக் குட்டீ ?

**மாத்து** : (அசட்டையாக) அந்த ஃபாக்டரியில் எங்கேயோ உள்ள ஒரு ஆசாமி.

**உபதேசி** : அவன் எதுக்கு வந்தான் ?

**மாத்து** : ஓ, சும்மா. நாங்க முன்னால் ஃபாக்டரியில் சேந்து வேலை பார்த்திருக்கோம்.

**உபதேசி** : மரியாம்மா அக்காவுக்கு எப்படியிருக்கு? (ஸாராம்மா பிரவேசிக்கிறாள்)

**மாத்து** : ஜாஸ்தியொண்ணுமில்லை.

**உபதேசி** : யாரு? இது ஸாராம்மா இல்லே ?

**ஸாரா** : (மாத்துக் குட்டியிடம்) அம்மா. இங்க வந்து இருக்கணும்னு சொல்றாங்க. (மாத்துக் குட்டியின் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் செல்கிறாள்)

**உபதேசி** : (கைகளை உயர்த்தி சொர்க்கத்தைப் பார்த்தவாறு) கர்த்தர் அருளிச் செய்திருப்பது நிகழவேண்டிய காலமாகி விட்டது. இது எதிர்ப்பின் காலம். உலக முடிவில் மனித புத்திரன் கிழக்கேயிருந்து வருவதை நான் காண்கிறேன். தண்டனைவிதிக்கும் நாள் தவிர்க்க முடியாததாகி விட்டது. கர்த்தருக்குத் தோத்திரம் !

(ஸாராம்மாவும் மாத்துக் குட்டியும் அம்மாவைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு வந்து நாற்காலியில் அமர்த்துகின்றனர்)

**உபதேசி** : (அருகில் சென்று) மரியம்மாக்கா, இருமல் கொறஞ்சிருக்கா? கொஞ்சம் நாளாவே இந்தப் பக்கம் வரணும்னு பார்த்துக்கிட்டிருந்தேன்.

**அம்மா** : என் உபதேசியாரே எனக்குக் கொஞ்சமும் முடியலை. ஒரு வைத்தியர் வந்து மருந்து எழுதிக் கொடுத்திருக்கார். அத வாங்கிட்டு வரக் கூட ஆளில்லை. மாத்துக் குட்டிக்குன்னா கண்ணு தெரியாது. (இருமுகிறாள்) இவ எப்படி வெளியே போவா ? சாபத்தை இழுத்துப் போட்டுக்கிட்டு மனுசங்க முகத்தைப் பாக்க முடியுமா ? (ஸாராம்மா தலை குனிந்தவாறு உள்ளே போகிறாள்)

**மாத்து** : எதுக்கும்மா, அவள எப்பவும் இப்படித் திட்டிக்கிட்டேயிருக்கீங்க? நடந்தது நடந்திடுச்சு. இனிமே சொல்லி என்ன பிரயோஜனம்?

**அம்மா** : இனிமே என்ன பிரயோஜனம்ங்கிறியா? ஒண்ணுமில்லை. முடிஞ்சு போச்சு. எல்லாம் முடிஞ்சு போச்சு (கோபத்துடன்) இந்தக் குடும்பமே தீர்ந்து போச்சு, (இருமுகிறாள்) இந்த மூதேவியின் சாபத்துனாலதான் எனக்கு வியாதி வந்தது. அவள் இதுக்கு அனுபவிக்காம ....

**உபதேசி** : உன் கோபத்துல சூரியன் அஸ்தமிச்சுடாம இருக்கட்டும், மரியக்கா. கர்த்தரான இயேசு கிறிஸ்து நம் பாவங்களுக்காகச் சிலுவையிலறைபட்டார். பெரிய கடனைப் பொறுத்திருந்து பெற்றவனைப் போல நாமும் பொறுக்க வேண்டும்.

**அம்மா** : எதைப் பொறுக்கணும்னு நீங்க சொல்றீங்க?

**மாத்து** : அம்மா, கோபப்படாதீங்க, உடம்பை அலட்டிக்கிட்டா இருமல் ஜாஸ்தியாகும். ஸாராம்மா!

**ஸாரா** : (உள்ளேயிருந்து) என்ன?

**மாத்து** : அம்மாக்கு ஏதாவது குடிக்க எடுத்துட்டு வா.

**அம்மா** : (இருமலுக்கு நடுவில்) எனக்கு வேண்டாம்.

**மாத்து** : இருமல் நிக்கும்

**அம்மா** : வேண்டாம்னு சொன்னேனில்லையா?

**மாத்து** : இங்கே ரொம்பக் குளிர். இங்கே இருந்தா இருமும். நீங்க உள்ளே போயிப் படுத்துக்குங்க (மாத்துக்குட்டி அம்மாவைத் தாங்கிப் பிடித்து உள்ளே அழைத்துப் போகிறான்)

**உபதேசி** : (தலையைக் குலுக்கியவாறு) பாவத்தின் பலன் கசப்பானது. (ஸாராம்மா பிரவேசிக்கிறாள்)

**ஸாரா** : என் உபதேசியாரே!

**உபதேசி** : பெண்ணே, எனக்கும் உனக்குமிடையில் என்ன?

**ஸாரா** : நான் என்ன செய்யணும் உபதேசியாரே? நான் தவறு செய்திட்டேன். அதுக்கு வருத்தப்படறேன். ஆனா அம்மா என்னை மன்னிக்கிறதில்லை. என் புருஷன் என்னை நேசிக்கிறதில்லை.

**உபதேசி** : கர்த்தரிடம் சரணடை.

**ஸாரா** : அதுக்கு நான் என்ன செய்யணும்? (மாத்துக் குட்டி நுழைகிறான்)

**மாத்து** : உபதேசியாரே, அம்மாவுக்கு ஜாஸ்தியாகி யிருக்குன்னு தோணுது. மருந்து வாங்க என்ன வழி ?

**உபதேசி** : யாரையாவது அனுப்பணும்

**மாத்து** : அதுக்கு இங்க யாருமில்லையே.

**உபதேசி** : அதுக்கு நான் வழி பண்றேன். ஆனா நான் போகிறதுக்கு முன்னாடி எனக்கு உங்கிட்ட ஒரு சுவிசேஷம் சொல்றதுக்கு இருக்கு.

**மாத்து** : என்ன அது ?

**உபதேசி** : மன்னிப்பவர்கள் பாக்கியசாலிகள்.

**மாத்து** : சரி.

**உபதேசி** : பின்னே ஏன் நீ ஸாராம்மாவை மன்னிக்கலை ?

**மாத்து** : நான் மன்னிக்கலைன்னு யாரு சொன்னாங்க ?

**உபதேசி** : மன்னிச்சா மட்டும் போதாது. நேசிக்கவும் செய்யணும்.

**மாத்து** : அது எனக்கு முடியலை.

**உபதேசி** : மாத்துக் குட்டீ, நீங்க இரண்டு பேரும் தெய்வ சன்னிதியில் வைத்து இணைக்கப் பட்டவர்கள். எத்தனை பெரிய தவறுகள் செய்தாலும் நீங்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் விலக நம் விசுவாசம் நம்மை அனுமதிப்பதில்லை. தெய்வம் இணைத்தவர்களை மனிதன் விலக்காதிருக்கட்டும் !

**மாத்து** : தெய்வம் இணைத்ததை... (சிந்தனையுடன் உலாவுகிறான்)

**உபதேசி** : என்ன மாத்துக்குட்டீ யோசிக்கிறாய் ?

**மாத்து** : ஒரு சந்தேகம், அவ்வளவு தான்.

**உபதேசி** : என்ன அது ?

**மாத்து** : தெய்வம் யாரை இணைத்தது ? ஏன் இந்த யுத்தம் வந்தது? ஏன் பட்டாளத்தில் சேருமளவு நான் தரித்திரனாகிப் போனேன்? யார் ஸாராம்மாவையும் குஞ்ஞுவர்க்கியையும் அருகருகே கொண்டு வந்தார்கள் ? என் உற்ற நண்பனும் என் மனைவியும்! எப்படி இதெல்லாம் நிகழ்ந்தது ! இதெல்லாம் நிகழ யார் காரணகர்த்தா ?

**உபதேசி** : அப்படிப்பட்ட யோசனைகளையெல்லாம் களை மாத்துக்குட்டீ, சமரஸம்தான் வாழ்க்கையின் வெற்றி ரகசியம். புற்களைப் பார், புயலடிக்கையில் அவை வளைந்து கொடுக்கின்றன; ஒடிவதில்லை.

**மாத்து :** ஏதானாலும் சமரஸம் எனக்கு முடியாது. நான் யுத்த களத்திலிருந்து திரும்பி வந்தவங்கிறதை நினைவு வச்சுக்குங்க.

**உபதேசி :** என்னவானாலும் மாத்துக்குட்டீ, யோசனை செய். அவசரத்தில் ஒன்றும் செய்யாதே. நான் இன்னும் தாமதித்தால் மருந்து விஷயம் குழப்பமாகும். (வெளியே போகிறார்)

**மாத்து :** *ஸாராம்மா !*

**ஸாரா :** *என்ன ?*

**மாத்து :** *நீ என்னிடம் வருத்தப் படாதே, எனக்கு உன்னிடம் விடை பெற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. நான் இங்கே இருப்பது உனக்கும் எனக்கும் ஒரே போலக் கஷ்டம்தான்.*

**ஸாரா :** *அப்போ அம்மா ?*

**மாத்து :** *அம்மா! (யோசனை வயப்பட்டு தலையைப் பிடித்துக் கொண்டு நாற்காலியில் அமர்கிறான்) அப்ப மருந்து வாங்க என்ன வழி ? உபதேசியார் இப்படிக் கோஷம் போட்டுக்கிட்டுப் போகிறதைத் தவிர யாரையாவது சொல்லி அனுப்புவாரோ, என்னவோ ?*

*(ஒரு பக்கத்திலிருந்து குஞ்ஞுவர்க்கி மெல்ல நுழைகிறான். ஸாராம்மா சற்று பயத்துடன் மாத்துக் குட்டியின் முகத்தைப் பார்க்கிறாள்)*

**மாத்து :** *யாரது ?*

**குஞ்ஞு :** *நான் ... நான் ... குஞ்ஞுவர்க்கி.*

**மாத்து :** *(நாற்காலியிருந்து குதித்தெழுகிறான்) குஞ்ஞுவர்க்கியா?*

**குஞ்ஞு :** *ஆமாம்*

**மாத்து :** *எதுக்காக ?*

**குஞ்ஞு :** *உபதேசியார் சொல்லியனுப்பினார். என்னவோ மருந்து வாங்கணும்னு.*

**மாத்து :** *(அற்பநேரம் மௌனமாய் நின்று விட்டு) ஸாராம்மா ! அந்தச் சீட்டும் பணமும் எடுத்துக் கொடு.குஞ்ஞுவர்க்கி போய் மருந்து வாங்கிட்டு வரட்டும். (உள்ளேயிருந்து இருமல் ஒலி கேட்கிறது. ஸாராம்மா போய்ப் பணமும் ஒரு சீட்டும் எடுத்துக் கொண்டு வந்து, சற்றுத் தயங்கி நின்ற பின் மாத்துக்குட்டியின் கையில் பிடித்து வைக்கிறாள்)*

**மாத்து :** இந்தா, குஞ்ஞுவர்க்கி

*(குஞ்ஞுவர்க்கி பணத்தையும் காகிதத்தையும் வாங்கிக் கொண்டு மௌனமாக வெளியேறுகிறான்)*

**மாத்து** : *(பெருமூச்சுடன்) அம்மாவுக்காக அப்படியும் நடக்கட்டும்.*

**ஸாரா :** *ஐயோ, அப்படிச் சொல்லாதீங்க,*

*(விம்மியழுகிறாள், மாத்துக்குட்டியின் நாற்காலியருகே போய் நிற்கிறாள்)*

**(திரை)**

# காட்சி மூன்று

(மாத்துக் குட்டியின் அறை. அறையின் இடதுபுறத்தில் ஒரு கட்டில். தலையணைகளில் தலையை உயர்த்தி வைத்துக் கொண்டு அம்மா அதில் படுத்திருக்கிறாள். நடுநடுவே இருமி, படிக்கத்தில் துப்புகிறாள். ஸாராம்மாவும் மாத்துக்குட்டியும் சிச்ருஷை செய்துகொண்டு பக்கத்தில் நிற்கிறார்கள்.

**அம்மா** : மாத்துக்குட்டீ, மகனே !

**மாத்து** : என்னம்மா ?

**அம்மா** : தண்ணி

(ஸாராம்மா தண்ணீரையெடுத்து மாத்துக்குட்டியின் கையில் கொடுக்கிறாள். மாத்துக்குட்டி அம்மாவுக்குக் கொடுக்கிறான். அவள் சிறிது குடிக்கிறாள்)

**அம்மா** : முற்றம் ஒண்ணும் பெருக்கலை. எனக்கு ஒரு வேலையும் செய்ய முடியாமப் போயிடிச்சு. எல்லாம் இவளால தான். (இருமுகிறாள்) பிசாசு ! (இருமுகிறாள்)

**மாத்து** : அம்மா, பேசினா இருமல் ஜாஸ்தியாகும்.

**அம்மா** : ஆகட்டும். (இருமுகிறாள்) இருமி இருமி சாகறேன். அப்புறம் இவளுக்கு இஷ்டப்படி நடக்கலாமில்லே. மருந்து வாங்கியாச்சா ? என்ன ? அந்த உபதேசியாரையும் காணலியே ? (அம்மா பலமாக இருமுகிறாள்)

**மாத்து** : உபதேசியார் போகலை மருந்து வாங்க, குஞ்ஞோர்க்கி.

**அம்மா** : குஞ்ஞோர்க்கியா ? அந்த சதி ...

(இருமுகிறாள். இருமல் நிற்காததினால் ஸாராம்மாவும் மாத்துக்குட்டியும் பக்கத்தில் சென்று மேலே தடவி விட்டுக்கொண்டிருக்கிறார்கள். குஞ்ஞுவர்க்கி மருந்துடன் வந்து மௌனமாக நிற்கிறான்)

**குஞ்ஞு** : (சற்று நேரத்திற்குப் பின்) மருந்து.

**மாத்து** : ஆ, குஞ்ஞோர்க்கி வந்தாச்சா ? ஸாராம்மா, அந்த மருந்தை வாங்கு. (ஸாராம்மா மிகவும் நிதானமாக நடந்து போய் மருந்தை வாங்குகிறாள்) ஒரு கப்புல விட்டுக் கொண்டா,

(ஸாராம்மா மருந்தை ஊற்றி அம்மாவுக்குக் கொடுக்கிறாள்)

**அம்மா** : *எனக்கு வேண்டாம்.*

**மாத்து** : *அதக் குடிம்மா! நல்ல மருந்தாக்கும்.*

**அம்மா** : *எனக்கு வேண்டாம்னுல்லே சொன்னேன்? (இருமுகிறாள்)*

**மாத்து** : *இத எப்படி நான் கொடுப்பேன் ? அது கீழ எங்கயாவது சிந்திடும். குஞ்ஞோர்க்கி! (குஞ்ஞுவர்க்கி முன்னால் வந்து மருந்தை வாங்கி அம்மாவின் வாயில் விடுகிறான். அம்மா குடிக்கிறாள். குஞ்ஞுவர்க்கியும் ஸாராம்மாவும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்கிறார்கள். ஸாராம்மா தலை குனிகிறாள்)*

**அம்மா** : *குஞ்ஞோர்க்கி, நீ இதுவரை எங்கேயிருந்தே ?*

**குஞ்ஞு** : *இங்கேயே தான் இருந்தேன்*

*(மாத்துக்குட்டி ஸ்டேஜின் முன்பாகத்திற்குப் போகிறான், ஸாராம்மா அம்மாவுக்கு விசிறிக்கொண்டிருக்கிறாள்)*

**குஞ்ஞு** : *என்னோட ஒண்ணும் பேசமாட்டியா ?*

**மாத்து** : *என்ன பேசணும் ?*

**குஞ்ஞு** : *சின்ன வயசு நட்பை நினைச்சாவது என்னை மன்னிச்சுடு! மாத்துக்குட்டீ, மனுஷனுக்குத் தவறு நேரலாம்னு நான் சொல்லாமலேயே உனக்குத் தெரியுமில்லை ? என்னை மன்னிச்சுடு.*

**மாத்து** : *இல்லை, என்னால் முடியாது. நான் பொய் சொல்லலை.*

**குஞ்ஞு** : *அம்மா கூட என்னை மன்னிச்சுட்டதைப் பார்த்தாயில்லையா ?*

**மாத்து** : *அம்மா இதுவரை ஸாராம்மாவை மன்னிச்சாளா ? அவகையிலிருந்து மருந்து கூட வாங்கிக் குடிக்காததைப் பார்க்கலியா ?*

**குஞ்ஞு** : *நீ ஸாராம்மாவை மன்னிச்சுட்டேன்னா பின்னே என்னை மன்னிக்காதது ஏன் ?*

**மாத்து** : *உங்களுக்கிடையேயுள்ள உறவுதான் நமக்கிடையே யுள்ள பிளவு. ஜாஸ்தி கேட்காதே குஞ்ஞோர்க்கி, சீக்கிரமா நான் இங்கேயிருந்து போயிடப்போறேன்.*

**குஞ்ஞு** : *எங்கே ?*

**மாத்து** : *ஆபத்து நிறைந்த ஒரு வேலைக்கு. சம்பளம் கிடைக்காத ஒரு யுத்தகளத்துக்கு. நாட்டுக்காகவும், நாட்டவர்களுக்காவும் வாழ்க்கையை அர்ப்பணித்த சிலருடன்.*

**குஞ்ஞு** : *அப்புறம் அம்மாவுக்கு யார் துணை ?*

**மாத்து** : அம்மா ஸாராம்மாவை மன்னிக்கலைன்னாலும் உன்னைச் சீக்கிரமா ஏத்துக்கிட்டா இல்லையா ? அதனாலே இனிமே நீ இங்க இரு. குருடனான என்னால யாருக்கும் ஒரு பிரயோஜனமும் இல்லை. அதனால் நான் போகட்டும்.

**குஞ்ஞு** : மாத்துக்குட்டீ, அது தப்பில்லையா ? (உபதேசியார் பிரவேசிக்கிறார்)

**உபதேசி** : ஜெருசலம் புத்ரிகளே, உங்களுக்கு ஹா, கஷ்டம் ! மாத்துக்குட்டீ, மரியாம்மாக்காவுக்கு எப்படியிருக்கு ? மருந்து குடுத்தியா ?

**மாத்து** : மருந்து கொடுத்தோம்.

**உபதேசி** : (கட்டிலினருகே சென்று) மரியாம்மாக்கா வேதனைப் படாதே. கர்த்தர் தன்னை நம்பும் மணவாட்டியை ஏற்றுக் கொள்வார். நான் ஆறுதலின் தூதன். நான் போகட்டுமா ?

**அம்மா** : உபதேசியார்! போறீங்களா ?

**உபதேசி** : (குரலையுயர்த்தி) நான் போகிறேன். கர்த்தரின் ஆன்மா என்னை நடத்துகிறது. அவன் அழைக்குமிடத்துக்கு நான் போவேன். இரண்டாம் வருகையின் காலம் வந்துவிட்டது. (போகிறார்)

**அம்மா** : குஞ்ஞோர்க்கி, இந்த மருந்தை எத்தனை வாட்டி குடிக்கணும்னு சொன்னாங்க ?

**குஞ்ஞு** : அஞ்சாறு தடவை குடிச்சாப் போதும்

**அம்மா** : வைத்தியனை இங்க கொஞ்சம் அழைச்சுக்கிட்டு வரியா ?

**குஞ்ஞு** : வரேன்.

(மாத்துக் குட்டி உலாவிக் கொண்டிருக்கிறான். ராகவன் மெல்ல நுழைந்து மாத்துக்குட்டியை ஒரு ஓரமாக அழைத்து ரகசியமாக என்னவோ பேசுகிறான். ஸாராம்மா உள்ளே போகிறாள். சற்று நேரத்திற்குப் பின்னர் அம்மா மிகவும் பலமாக இருமுகிறாள். எல்லோரும் கட்டிலினருகே ஓடிப் போகிறார்கள், ஸாராம்மா வீசுகிறாள், குஞ்ஞுவர்க்கி தலையணையை சரி செய்கிறான். அம்மா நெளியவும்,முனகவும் செய்கிறாள்)

**அம்மா** : ஐயோ! எனக்கு முடியலியே! கொஞ்சம் குடிக்க ... ஐயோ ! (குஞ்ஞுவர்க்கி மருந்து குடிக்கக் கொடுக்கிறான்) எனக்கு மருந்து வேண்டாமே! தண்ணி ... தண்ணி, என் மாத்துக்குட்டீ ! என் கர்த்தாவே! (குஞ்ஞுவர்க்கி தண்ணீரெடுத்து மாத்துக்குட்டியின் கையைப் பிடித்து அவள் வாயில் விடுகிறான்) எனக்குக் கொஞ்சம் வீசு, மாத்துக்குட்டீ, நான் செத்துக்கிட்டிருக்கேன். (குஞ்ஞுவர்க்கி வீசுகிறான்)

**குஞ்ஞு** : ஸாராம்மா, இன்னும் கொஞ்சம் தண்ணி எடுத்துக்கிட்டு வா.

(ஸாராம்மா, உள்ளே போகிறாள்)

**அம்மா** : தண்ணி! என் கர்த்தாவே! (அம்மா மரண லட்சணங்கள் காட்டுகிறாள். ஸாராம்மா தண்ணீருடன் வருகிறாள்)

**அம்மா** : என் ...குஞ்ஞுவர்க்கி, என் மகன் ... கண்ணில்லாம ... கர்த்தாவே! ... பார்த்துக்குங்க! (இறந்து போகிறாள்)

(எல்லோரும் அருகில் வந்து நிற்கின்றனர். மாத்துக் குட்டி அம்மாவின் உடலைக் கட்டிக் கொண்டு அழுகிறான். ஸாராம்மா கால்மாட்டில் முழந்தாளிட்டு அமர்கிறாள். குஞ்ஞுவர்க்கியும் வருகிறான்)

**மாத்து** : (நிதானமாக எழுந்து) ராகவா !

(ராகவன் அருகே வருகிறான், மாத்துக்குட்டி ராகவனின் கையை அழுத்திப் பிடிக்கிறான்)

**மாத்து** : ஸாராம்மா, குஞ்ஞுவர்க்கி, நான் இனிமே போகலாம்...

(ஸாராம்மா எழுந்து ஓடி வந்து மாத்துக் குட்டியின் கையைப் பிடிக்கிறாள்)

**ஸாரா** : ஐயோ ! இப்பவா ? இதென்ன, பைத்தியமா ?

**மாத்து** : ஒடனேயே வேணும்னில்லையே ... எனக்கும் இந்த வீட்டுக்குமிருந்த ஒரே உறவு தகர்ந்து போச்சு. இனிமே நான் போறேன்.

**ஸாரா** : அம்மா!

**குஞ்ஞு** : மாத்துக்குட்டீ, என்ன நீ இப்படிச் சொல்றே ? அம்மா!

**மாத்து** : இறந்து போய்விட்டவர்கள் தங்களுடைய இறந்தவர்களை அடக்கம் செய்யட்டும்.

(ஸாராம்மாவும் குஞ்ஞுவர்க்கியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறார்கள். ஸாராம்மா அம்மாவின் கண்களை மூடுகிறாள். ஒரு வெள்ளைத் துணியை எடுத்து உடலைப் போர்த்துகிறாள். பிறகு சில மெழுகுவத்திகளை ஒவ்வொன்றாய்க் கொளுத்தி கட்டிலின் தலைமாட்டில் நிறுத்துகிறாள். அதன் பின்னர் இருவரும் அருகருகே முழந்தாளிட்டமர்ந்து பிரார்த்தனை செய்கிறார்கள்)

**(திரை)**

# மூன்றாம் அங்கம்

## மனிதன் சேர்த்து வைத்ததை தெய்வம் பிரிக்காமலிருக்கட்டும்

### காட்சி ஒன்று

*(மாத்துக் குட்டியின் வீடு. கட்டில் நாற்காலி, ஸ்டூல் முதலியன அங்குமிங்குமாய்ச் சிதறிக் கிடக்கின்றன. ஒரு மூலையில் லாந்தர் விளக்கு இருக்கிறது. ஆகமொத்தம் ஒரு தாறுமாறான சூழல். பெருத்த வயிற்றுடன் ஸாராம்மா ஒரு நாற்காலியில் அமர்ந்திருக்கிறாள். குஞ்ஞுவர்க்கி அருகில் நின்று ஸாராம்மாவுடன் பேசிக் கொண்டிருக்கிறான். நேரம் பகல் பத்து மணி.)*

**ஸாரா** : என்ன குழந்தையாயிருக்கும்?

**குஞ்ஞு** : பெண்

**ஸாரா** : ஓ! பெண்ணாம் பெண்!– ஆணாயிருக்கும்.

**குஞ்ஞு** : அது என்னத்துனால?

**ஸாரா** : பெண்ங்கிறது என்னத்துனால?

**குஞ்ஞு** : அவலத்திலல்லவோ உருவெடுத்தது? அனுபவிக்க வேண்டாமா கொஞ்சம்? *(உபதேசியார் பிரவேசிக்கிறார். ஸாராம்மா எழுந்திருக்கிறாள்)*

**உபதேசி** : கர்த்தருக்கு தோத்திரம்! ஸாராம்மா, நீ எழுந்து கஷ்டப்படவேண்டாம். *(ஸாராம்மா நாற்காலியைப் பிடித்துக் கொண்டு நிற்கிறாள்)*

**ஸாரா** : ஓ! வேண்டாம். நான் இப்பிடி நிண்ணுக்கிறேன்.

**உபதேசி** : குஞ்ஞுவர்க்கி, நான் உன்னைப் பார்க்கத் தான் வந்தேன்.

**குஞ்ஞு** : *உம் ?*

**உபதேசி** : *(ஸாராம்மாவிடம்) குழந்தாய், நீ உள்ளே போய்க்கொள். எங்களுக்குச் சில விஷயங்களெல்லாம் பேசுறதுக்கு இருக்கு.*

**ஸாரா** : *வேண்டாம் உபதேசியாரே, எதுக்காக இத்தனை சுத்தி வளைக்கிறீங்க ? நாங்க ரெண்டு பேருமே நேராக் கேட்டுக்கறோம். கணவன் மனைவிக்கு இடையிலுள்ள நடவடிக்கை எப்படீண்ணு உபதேசியாருக்குத் தெரியாதுண்ணு தோணுது. (நாற்காலியில் அமர்கிறாள்)*

**உபதேசி** : *கணவனும் மனைவியும் ! (யோசிக்கிறார்)*

**ஸாரா** : *உம் ? என்ன யோசிக்கிறீங்க ?*

**உபதேசி** : *எந்த மாதாகோயிலில் வைத்து உங்க திருமணம் நடந்தது ?*

**ஸாரா** : *இந்தக் கோயிலில் வைத்துத் தான்.*

**குஞ்ஞு** : *அதுக்குக் கோயில் வேணுமா என்ன ?*

**உபதேசி** : *புரோகிதனும் வேண்டாமோ ?*

**குஞ்ஞு** : *கிடைக்க வழியில்லைண்ணா இல்லாமச் செய்துக்கணும்*

**உபதேசி** : *நான் தெறந்து சொல்றேன் குஞ்ஞுவர்க்கி. நீ என்னிடம் வெறுப்படைய வேண்டாம். தெய்வத்தின் பணி செய்வதில் முகம் பார்த்தால் முடியாது. மாத்துக் குட்டி போய் இன்று ரெண்டு மாசம் நெறையுது. நீங்க ரெண்டு பேரும் இப்படி இங்க சேர்ந்து வாழுறீங்க. இது கடவுளுக்கும் மனுஷனுக்கும் அடுக்காத செயல்.*

**குஞ்ஞு** : *இப்போதைக்கு நான் கடவுளையும் மனுஷனையுமல்ல கவனிக்க நிச்சயம் பண்ணியிருக்கேன். ஸாராம்மாவைத் தான்.*

**உபதேசி** : *அதைக் கடவுள் பார்த்துப்பார்.*

**குஞ்ஞு** : *பட்டினிக்கான திறந்த வழி.*

**உபதேசி** : *கடவுள் அப்படி திருமனசு பண்ணினால் மனுஷன் அதையும் அனுபவிக்கணும்*

**குஞ்ஞு** : *(ஸாராம்மாவைப் பார்த்தவாறே) அவளுடைய இந்த நிலைமையிலுமா ?*

**உபதேசி** : *கட்டாயமா, அதையும் கடவுளின் பாரத்தில் விடுங்கள்.*

**குஞ்ஞு** : *கடவுளுக்கு ஒரு மருத்துவச்சியையும் பரிச்சயமில்லை. வைத்தியனைக் கூப்பிடவும் மருந்து வாங்கவும் அவருக்கு நேரமுமில்லை.*

**உபதேசி** : (காதைப் பொத்திக் கொள்கிறார்) தெய்வ தூஷணை பேசாதே குஞ்ஞுவர்க்கி

**குஞ்ஞு** : இது முழு உண்மை

**உபதேசி** : குஞ்ஞுவர்க்கி, இது வெறும் சுயநலம், சுகத்ததுக்காக, தெரிந்து கொண்டே பாவம் புரிகிறீர்கள்.

**குஞ்ஞு** : (ஆவேசமுற்றவனாய்) யாருடைய சுயநலம்? யாருடைய சுகம்? என்னுடையதா? நிம்மதியின்றி அபவாதத்தின் நடுவில் கிடந்து உமித்தீ போல கனன்று தகிப்பதா? உபதேசியாருக்குத் தெரியுமா ஜனங்க என்னெல்லாம் சொல்றாங்கன்னு?

**உபதேசி** : அதுதான் நானும் கேட்கிறேன்.

**குஞ்ஞு** : வெட்டுண்டவனுக்குத் தானே வலி தெரியும். அவங்க என்ன சொல்றாங்கன்னு எனக்குத் தெரியும். அதக் கேட்டு என் காது தழும்பேறிப் போச்சு. அவங்களுக்கு வேண்டியது என்னென்னும் எனக்குத் தெரியும். ஆதரவு தேடும் ஸாராம்மா அவங்க காம விளையாட்டுக்கு விலை குறைந்த ஒரு பொம்மையாகக் கிடைக்கணும். போதாததுக்கு மிகவும் அனுசரணையான ஒரு சமையல்காரியாகவும் இருக்கணும். இல்லை, அதுக்கு நான் சம்மதிக்க மாட்டேன். நாங்க செய்தது தப்புன்னு எங்களுக்குத் தெரியும். ஆனா, இனிமேலும் ஸாராம்மாவை உதறிட்டுப் போய் அந்தத் தவறைப் பெரிதாக்க நான் தயாரில்லை.

**உபதேசி** : இகலோக சுகத்துக்காக நீ ஆன்மாவை அழிக்கிறாய்.

**குஞ்ஞு** : ஆன்மாவை நான் பார்த்ததில்லை.. ஆனால் பெரிய வயிற்றைத் தூக்கிக் கொண்டு உதவி தேடும் ஸாராம்மாவை என்னால் பார்க்க முடிகிறது. மாத்துக் குட்டியின் அம்மா இறந்து போயிட்டா, மாத்துக்குட்டியும் வீட்டை விட்டுப் போயிட்டான். எங்கேன்னு ஒரு துப்புமில்லை, இனிமே யார் இருக்காங்க ஸாராம்மாவைக் காப்பாத்த, அவ நெலமையில ? மிகவும் ஜவாப்தாரியான ஆசாமியே அந்தக் கடமையையும் ஏத்துக்கட்டும்னு நான் தீர்மானிச்சேன். கருணையென்று ஒன்று உங்கள் வேதப் புஸ்தகத்தில் இல்லையா உபதேசியாரே ?

**உபதேசி** : உண்டு, ஆனால் ஸாராம்மா ஆதரவிழந்தவளல்ல. அவள் இன்னும் மாத்துக்குட்டியின் மனைவிதான்.

**ஸாரா** : ஓ! (முகம் வெளிறுகிறாள். எழுந்து நின்று சற்று யோசித்து விட்டு, தாலியை அறுத்துத் தூர எறிகிறாள்) இல்லை!

(எல்லோரும் ஸ்தம்பித்து நிற்கிறார்கள்)

**உபதேசி** : (ஆகாயத்தை நோக்கி) தெய்வம் இணைத்து வைத்ததை மனிதன் பிரிக்காமலிருக்கட்டும் !

**குஞ்ஞு** : யார் தெய்வத்துக்கு இந்த வேலை கொடுத்தார்கள் ? தெய்வம் அவங்களை எங்கு வைத்து இணைத்தது ?

**உபதேசி** : புரோகிதன் தெய்வத்தின் பிரதிநிதியாக்கும்.

**குஞ்ஞு** : இல்லை, பரவாயில்லை, தெய்வத்திடமிருந்து எனக்குப் பெரிய தொந்திரவு இல்லை. மனுஷன் தான் தொந்திரவு செய்கிறான்.

**உபதேசி** : புரோகிதன் அந்தச் செயலில் சமுதாயத்துக்குச் சாட்சி நிற்கும் ஆளாக்கும்.

**குஞ்ஞு** : சாட்சியா?

**உபதேசி** : ஆமாம், சாட்சி. மனிதன் ஒரு சமூக ஜீவன். அவனுடைய எல்லாக் கர்மங்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் சாட்சி இருந்தே தீர வேண்டும்

**குஞ்ஞு** : சாட்சி கிடைக்க வழியில்லைன்னா ....

**உபதேசி** : எல்லாத்துக்கும் விதண்டாவாதம் செய்யாதே குஞ்ஞுவர்க்கி.

**குஞ்ஞு** : நியாயம் எப்படி விதண்டாவாதம் ஆகும் ?

**குஞ்ஞு** : நான் தோற்றேன். (போகப் புறப்படுகிறார்) வெளியே பார்த்தவாறு) ஜெருசலேமே! உனக்கு ... ஹா, கஷ்டம்! எத்தனை தடவை நான் உன்னைக் காப்பாற்ற முயற்சித்தேன். நீ அதுக்குக் காது கொடுக்கலை. பெட்டைக் கோழி குஞ்சுகளைக் காப்பது போல நான் உன்னை என் சிறகுகளுக்கடியில் வைத்துக் கொண்டிருப்பேன். ஆனாலும் நீ பிடிகொடுக்கவில்லை. சாகாத புழுவும் அணையாத நெருப்பும் நிறைந்த நித்யநரகத்துக்கு ...

**ஸாரா** : ஐயோ, உபதேசி!

**குஞ்ஞு** : சாபமிடாதீங்க உபதேசியாரே! என்னைச் சோதிக்காதீங்க, பலஹீனனும் பாவியுமான ஒரு சாது மனுஷன் ஒரு நல்ல காரியமாவது செய்து நிம்மதியடையட்டும்.

**உபதேசி** : நான் போகிறேன். குஞ்ஞுவர்க்கி, மறக்காதே! (போகிறார்)

**ஸாரா** : இந்த உபதேசியார் ஒரு பெரிய தொந்திரவு. (குஞ்ஞுவர்க்கி மௌனமாக ஒரு நாற்காலியில் அமர்கிறான்)

**ஸாரா** : என்ன, ஒண்ணும் பேசலை ?

**குஞ்ஞு** : நான் யோசிச்சுக்கிட்டிருக்கேன்.

**ஸாரா** : என்ன ?

**குஞ்ஞு** : சாட்சி விஷயம். உபதேசியார் சொன்னதில் அர்த்தமிருக்கு. நான் இன்றைக்கு உன்னை விட்டுட்டுப்

போயிடலாம். அதை சமூகம் விரும்புவதில்லை. அதனால் தான் சாட்சி வேணும்னு வச்சுருக்காங்க !

(இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்கிறார்கள்)

**ஸாரா** : 'அவர்' தான் நம்ம விவாகத்துக்கு சாட்சி, புரோகிதன் எல்லாம்.

**குஞ்ஞு** : அது முடியாது. மாத்துக்குட்டிக்கு அதுக்கு உரிமையில்லை.

**ஸாரா** : அவர் போய் இது வரை ஒரு செய்தியுமில்லையே.

**குஞ்ஞு** : நான் விசாரிச்சேன். எங்கேயோ மறைவிடத்துல இருக்கான், ராகவனையும் காணோம்.

**ஸாரா** : ஏதாவது ஆபத்து வந்திருக்குமோ ? கடவுளே, கவனிச்சுக்குங்க ! கண்ணும் இல்லை, பாவம் !

**குஞ்ஞு** : ஸாராம்மா, நீ இப்பவும் மாத்துக் குட்டியை நேசிக்கிறியா ?

**ஸாரா** : பொறாமையோ ?

**குஞ்ஞு** : இல்லை

**ஸாரா** : சந்தேகமோ ?

**குஞ்ஞு** : அதுவுமில்லை, பொறாமையுமில்லை, சந்தேகமுமில்லை, என்னவோ ஒரு உணர்வு. சாட்சி வேணும்னு தோணுது.

**ஸாரா** : நான் எப்படி அவரை மறப்பேன் ?

**குஞ்ஞு** : எல்லாத்தையும் மன்னிச்சுட்டதுனால உண்டான நன்றியாயிருக்கலாம்.

**ஸாரா** : இல்லை, அது மட்டுமில்லை.

**குஞ்ஞு** : பின்னே ?

**ஸாரா** : நாங்க அன்னியரா ? ஒரு காலத்துல ...

**குஞ்ஞு** : ஸாராம்மா, அதை எனக்கு நினைவு படுத்தாதே, புருஷர்களுக்கும். பொறாமை உண்டுன்னு நினைவிருக்கட்டும், ஒரு காலத்துல... ஆமாம் அந்தக் காலத்தைத்தான் என்னால நினைச்சுப் பார்க்க முடியலை.

**ஸாரா** : பின்னே எதுக்காக நீங்க இதையெல்லாம் கிளறிட்டிருக்கீங்க ?

**குஞ்ஞு** : ஸாராம்மா, மன்னிச்சுடு, நான் உன்னை வேதனைப் படுத்திட்டேன். ஞாபகமில்லாம அப்படிச் செய்திட்டேன். மணவாழ்க்கையில் இப்படிப்பலவும் ஒருத்தருக்கொருத்தர் மன்னிக்கவும் மறக்கவும் செய்ய வேண்டியிருக்கு.

**குரல்** : பாவத்தின் கூலி மரணமே.

*(இருவரும் திடுக்கிடுகிறார்கள் ஸாராம்மா குஞ்ஞுவர்க்கியின் அருகே சென்று நாற்காலியில் சாய்ந்து நிற்கிறாள்)*

**ஸாரா** : இந்த வேதனை என்று தீரும், கடவுளே !

**(திரை)**

## காட்சி இரண்டு

*(இடம் முந்தைய காட்சியிலிருந்ததுவே. பல்லெல்லாம் போன ஒரு கிழவியும் ஸாராம்மாவும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். நேரம் அந்தி வேளை)*

**கிழவி** : அத நெனச்சு என் கொளந்தை கஷ்டப்பட வேண்டாம்.

**ஸாரா** : ஆனாலும் எப்படித்தான் பெரியம்மா நடத்தறது ? மனுஷங்க மொகத்துல முழிக்க வேண்டாமா ?

**கிழவி** : ஒங்களுக்கு எளம்வயசானதுனால இப்படியெல்லாம் தோணுது. இப்படி எத்தனை பாத்துருக்கு இந்த ஒலகம். இந்த வயசுக்குள்ள இப்பிடி எத்தினி பேரு கண்ணீரை நான் பாத்துருக்கேன்! அவங்கள்ளாம் இன்னிக்கு சொகமா வாழறாங்க!

**ஸாரா** : என் விஷயம் மட்டும் இல்லியே.

**கிழவி** : அது நல்லாப் போச்சு. ஆளு கூட இல்லாம எத்தனை பேரு கெடந்து கஷ்டப்படறாங்க. என் கொளந்த கவலைப்பட வேண்டாம். எல்லாம் பெரியம்மா பாத்துக்கிடறேன்.

**ஸாரா** : பெரியம்மாக்கு எங்கிட்ட வெறுப்பு உண்டாகலியா ?

**கிழவி** : வெறுப்பா ? எதுக்கு ? எனக்கென்ன கொளந்தே, என் வேலயப் பாத்தாப் போறாதா ? தாய்க்கும் சேய்க்கும் ஒண்ணும் ஆயிரக் கூடாது. எப்பிடி உண்டாச்சு, யாருக்கு உண்டாச்சுன்னெல்லாம் நான் ஏன் பாக்கணும் ? ஏளைகளுக்கு மானம் அவமானம் எல்லாம் இருக்கா ? நாமெல்லாம் எதுக்காக இதெல்லாம் யோசிக்கணும் ?

**ஸாரா** : *(முகம் சற்று வெளிறி)* ஏழைகளுக்கு, நமக்கு ... *(குஞ்ஞுவர்க்கி பிரவேசிக்கிறான்)*

**குஞ்ஞு** : பெரியம்மா, எப்ப வந்தீங்க ? நாங்க எதிர்பாத்துட்டுருந்தோம்.

**கிழவி** ; நான் வந்து கொஞ்சம் நேரமாச்சு. ஸாராம்மாகிட்ட ஏதோ ஊர்க்கதை பேசிக்கிட்டிருக்கேன்.

**குஞ்ஞு** : அவளுக்கு எப்படியும் சீக்கிரமா ஆயிடும்னு தோணுது.

**ஸாரா** : *போன காரியம் என்னாச்சு ?*

**குஞ்ஞு** : *மாத்துக்குட்டியைப் பற்றி ஒரு விவரமுமில்லை, ராகவனைப் பார்க்கலாம்னாலும் ஒரு வழியுமில்லை. அங்கே ஒரே ரகளை.*

**ஸாரா** : *என்ன ரகளை ?*

**குஞ்ஞு** : *ஃபாக்டரியில் வேலை நிறுத்தம். வெடிகுண்டு வீச்சோ என்னவோ நடந்திருக்கு. கொஞ்சம் பேரு செத்துப் போயிட்டாங்க. ரெண்டு போலீஸ்காரங்களும் செத்துட்டாங்கன்னு கேள்விப்பட்டேன் !*

**ஸாரா** : *எதுக்காக இந்த வேலை நிறுத்தம் ?*

**கிழவி** : *அது தெரியலியா ? கூலி கூடுதல் கிடைக்கணும்னு. என் புள்ளையுமிருக்கான் வேலை நிறுத்தத்துல. கடவுளே, அவனுக்கொண்ணும் ஆயிருக்கக் கூடாதே.*

**ஸாரா** : *கூலி ...ஆ ... (நிறுத்துகிறாள்)*

**குஞ்ஞு** : *நீ என்ன சொல்ல வந்தே ?*

**ஸாரா** : *ஒண்ணுமில்லை பெரியம்மா, வீட்டுக்குப் போகணும்னா சீக்கிரம் போயிட்டு வரணும், இல்லாட்டா. எதுக்காகப் போகணும் ?*

**கிழவி** : *நடக்காது. என்னால போவாம இருக்க முடியாது, ஸாராம்மா, நான் போயிட்டு சீக்கிரமா வரேன்.*

**ஸாரா** : *அதிகமா இருட்டுறதுக்கு முன்னடியே வந்துடுங்க.*

*(கிழவியின் காதில் என்னவோ சொல்கிறாள். கிழவி தலையாட்டிக்கொண்டு வெளியே போகிறாள்)*

**குஞ்ஞு** : *நீ என்னவோ சொல்ல ஆரம்பிச்சியே என்ன ?*

**ஸாரா** : *வேறொண்ணுமில்லை கூலி விஷயம்தான். இப்படி எத்தனை நாள் ஓட்டுறது ? ஏதாவது ஒரு வருமானம் வேண்டாமா? கொஞ்ச நாளா நான் அதத்தான் யோசிச்சுக்கிட்டிருக்கேன்.*

**குஞ்ஞு** : *நானும் யோசிச்சேன், ஒரு வழியும் தெரியலை. கணக்கு எழுதற வேலை கூட இனிமே கெடைக்காது. மத்யதரவர்க்கத்தின் நிலைமை இதுதான். சமுதாயத்தை எதிர்த்தால் பட்டினிதான் மிச்சம்.*

**ஸாரா** : *நாம மத்யதரவர்க்கம்னு யாரு சொன்னாங்க ? அந்தப் பெரியம்மா சொல்லிக்கிட்டிருந்தது அதுதான். நாம ஒரு படி கீழேபோயிட்டோம்.*

**குஞ்ஞு** : *சரிதான். சமூகத்துக்கு அப்படியெல்லாம் செய்யும் சக்தியுண்டு.*

**ஸாரா** : அது மட்டுமில்லை! பண விஷயமும். இனிமே கூலிவேலையில்லாம வேறென்ன வழி ?

**குஞ்ஞு** : அதுதான் எனக்கும் தோணுது. நீ என்ன சொல்லுவியோண்ணு பேசாம இருந்தேன்.

**ஸாரா** : எனக்கென்ன தனியா ? மனுஷங்க வாழவேண்டாமா ?

**குஞ்ஞு** : (யோசனையுடன்) அது மட்டுமில்லை. தாழ்ந்தவனின் சன்மார்க்கக் கோட்பாட்டிலும் வித்தியாசம் உண்டு. அவனுக்கு வேறு நியதி. நம் தவறு அவன் கண்ணில் மன்னிக்கத் தக்கதாயிருக்கும். அவங்க நம்மை ஏற்றுக் கொள்ளவும் செய்வாங்க.

**ஸாரா** : அந்தப் பெரியம்மாவின் பேச்சைக் கேட்டபோது எனக்கும் அப்பிடித் தோணிச்சு. அவங்க நியதியெல்லாம் வாழ்வதற்கானவைகள்.

**குஞ்ஞு** : வேலை நிறுத்தம் நீங்கட்டும். அந்த ஃபாக்டரியிலேயே போய்ச் சேரறேன்.

**ஸாரா** : ஒரு சமாதானம். குழந்தையைப் பட்டினி போடாம இருக்கலாமில்லையா ?

**குஞ்ஞு** : குழந்தை! (யோசனை வயப்படுகிறான்)

**ஸாரா** : ம் ... ?

**குஞ்ஞு** : ஸாராம்மா !

**ஸாரா** : எதுக்காக என்னைக் கூப்பிடறீங்க ? நான் இங்கே நிக்கிறேனில்லையா ...

**குஞ்ஞு** : இல்லை ...

**ஸாரா** : என்ன இல்லை ?

**குஞ்ஞு** : இல்லை, நான், நினைச்சுப் பார்த்துட்டிருந்தேன். அந்த நிரபராதியை நாம கொல்ல யோசிச்சோமில்லையா ... ? பாவம் ?

**ஸாரா** : (முகம் வெளிறுகிறது) அத நினைவு படுத்தாதீங்க. இனிமே யோசிச்சு என்ன பலன் ? நடந்தது நடந்து போச்சு.

**குஞ்ஞு** : ஆமாம். அது நடந்துபோச்சு, நாம அந்தத் தவறிலிருந்து தப்பிச்சோம். ஆனா அந்த மகாபாதகத்தைச் செய்திருந்தா ... ?

**ஸாரா** : நாம் இன்று சன்மார்க்கிகள்—கௌரவமானவர்களாக இருந்திருப்போம். சமூகம் நம்மை சித்திரவதையும் செய்து கொண்டிராது.

**குஞ்ஞு** : என்னவானாலும் அது அதிருஷ்டந்தான். எத்தனை அழுதாலும் அப்படி நேரமாப் போயிருச்சில்லே !

**ஸாரா** : அப்புறம் எனக்கு ஒரு ஆசை,

**குஞ்ஞு** : உம் ?

**ஸாரா** : அவனுக்கு ...

**குஞ்ஞு** : ஹூம்! அவன்னு என்ன அத்தனை நிச்சயம் ?

**ஸாரா** : 'அவன்'னா தான் எனக்குக் கேட்க இருக்கு.

**குஞ்ஞு** : 'அவன்'னா என்ன வேணும்.

**ஸாரா** : மாத்துக் குட்டின்னு பேர் வைக்கணும்

(குஞ்ஞுவர்க்கியின் முகம் சிவக்கிறது. ஸாராம்மாவுக்கும் ஒரு குழப்பம்)

**குஞ்ஞு** : ஸாராம்மா !

**ஸாரா** : என்னவாம் ?

**குஞ்ஞு** : எனக் ரு உங்கிட்ட ஒரு விஷயம் கேக்கணும்

**ஸாரா** : அதுக்கு ப் பிரத்யேகமா அனுமதி கேட்கணுமா ?

**குஞ்ஞு** : நீ கேட்டதுனால நானும்—உன் ஆசையை ஒரு தடவையாவது எதிர்க்க எனக்கு அனுமதி வேணும்.

**ஸாரா** : நான் ஒண்ணும் கட்டாயப்படுத்தலை, இஷ்டமிருந்தா மட்டும்போதும்.

**குஞ்ஞு** : நீ கேட்டது எனக்கு விருப்பமில்லை.

**ஸாரா** : பேர் வைக்கிறதா? வேண்டாம்னா வேண்டாம். நான் அவருடைய கருணையை நினைச்சுச் சொல்லிட்டேன்.

**குஞ்ஞு** : ஸாராம்மா,நீ திரும்பவும் மாத்துக்குட்டியின் விஷயம் பேசாதே.

**ஸாரா** : அவர் நம்மகிட்ட கருணைதானே காட்டியிருக்கார்.

**குஞ்ஞு** : ஆமாம், அதுனாலதான் எனக்குக் கஷ்டம். (சுற்று முற்றும் பார்ப்பதற்கடையில் சுவரிலிருக்கும் மாத்துக் குட்டியின் படத்தைப் பார்க்கிறான்) ஸாராம்மா, அந்தப் படம் அங்கே இருக்கிறது கூட எனக்கு சகிக்கலை. (ஒரு ஸ்டுலை எடுத்துப் போட்டு படத்தை எடுத்துக் கொண்டு கீழே இறங்குகிறான்) நான் இந்தப் படத்தைத் தூர எறியப் போறேன். மாத்துக்குட்டிகிட்ட நன்றியில்லாததினால அல்ல ; உன்னை நேசிக்கிறதுனால.

**ஸாரா** : அதுக்கு அந்தப் படத்தைத் தூர எறியணுமா ?

(ராகவன் மூச்சிறைக்க ஓடி வந்து நுழைகிறான். உடலில் கொஞ்சம் இரத்தம் தெறித்திருக்கிறது)

**குஞ்ஞு** : என்ன ராகவா இது ?

**ராகவன்** : ஃபாக்டரியில் குண்டு வெடிச்சுட்டுது. நாங்க கைக்குண்டு எறிஞ்சோம். ஒண்ணு ரெண்டு பேர் செத்துட்டாங்க.

**குஞ்ஞு** : *மாத்துக் குட்டி எங்கே ?*

**ராகவன்** : *(நிலத்தை நோக்கியவாறு)* எனக்குத் தெரியாது. ஒரு வேளை வெடி ...

**ஸாரா** : ஐயோ கடவுளே ! *(குஞ்ஞுவர்க்கியை ஒட்டி நிற்கிறாள்)*

**குஞ்ஞு** : *உள்ளதைச் சொல்லு ராகவா !*

**ராகவன்** : *(தலையையுயர்த்தி)* மாத்துக்குட்டி எங்களுக்காக இறந்தார். நான் இதச்சொல்லத்தான் வந்தேன். இனிமே போகட்டுமா.

**குஞ்ஞு** : *நில்லு, நானும் வரேன்.*

**ராகவன்** : வேண்டாம் பிணங்களையெல்லாம் மண்ணெண்ணெய் விட்டு அவங்க எரிச்சுட்டாங்க. *(போக முற்படுகிறான்)*

**ஸாரா** : போகாதே ராகவா, இங்க எங்கயவாது ஒளிஞ்சு ...

**ராகவன்** : வேண்டாம் எங்க வர்க்கம் போரிலிருந்து ஒளிந்து ஓடுவதில்லை. யுத்தத்திற்காக ஒளிகிறது உண்டு. என்னவானாலும் இனிமே கூலி கிடைக்கும்–நிச்சயம். *(போகிறான்)*

**குஞ்ஞு** : *ஆமாம், எனக்கு நாளை கூலி கிடைக்கவும் மாத்துக்குட்டிதான் முயற்சிக்க வேண்டியிருக்கு நண்பா, சகோதரா!*

**ஸாரா** : *(போட்டோவை வாங்கக் கை நீட்டுகிறாள்)*

**குஞ்ஞு** : வேண்டாம் உன் கையிலிருந்து கீழே எங்கேயாவது விழுந்துடும், *(போட்டோவை ஒரு முறை நெற்றியில் வைத்துக்கொண்டு விட்டு ஸ்டூலை எடுத்துப் போட்டு, போட்டோவை அதனிடத்தில் மாட்டுகிறான். பிறகு கீழே இறங்கி படத்தின் முன்னே வணங்குகிறான்)*

**குரல்** : *(மேடையின் பின்புறமிருந்து)* இதோ நாச காலம் ! மக்கள் மக்களோடும், நாடு நாட்டுடனும் போரிடுவர்!

*(மேடை மெதுவாக இருளடைகிறது. ஸாராம்மா மூலையிலிருந்து லாந்தரை எடுத்து ஸ்டூல்மேல் வைக்கிறாள்)*

**( திரை )**

## காட்சி மூன்று

(சென்ற காட்சியின் அறைதான். லாந்தர் கொளுத்தி ஸ்டூலின் மேல் வைக்கப்பட்டிருக்கிறது. குஞ்ஞுவர்க்கி நிலைகொள்ளாமல் அங்குமிங்கும் நடக்கிறான். சுற்றிலும் பீடித்துண்டுகளும் தீக்குச்சிகளும் இறைந்து கிடக்கின்றன. ராகவன் லாந்தருடன் பிரவேசிக்கிறான். நேரம் இரவு.)

**ராகவன் :** இரவு முடியலாச்சு.

**குஞ்ஞு :** சூரியன் உதிச்சாச்சா ?

**ராகவன் :** இல்லை, விடிவெள்ளி மேல வந்தாச்சு. (கிழவி பின் புறவாயில் வழியாகப் பிரவேசிக்கிறாள்)

**குஞ்ஞு :** என்னா பெரியம்மா ? எப்படியிருக்கா ?

**கிழவி :** ஒண்ணுமில்லெ, பயப்படவேண்டாம் மகனே, ஒன்னப் போயிப் படுத்துக்கிடச் சொன்னா ஸாராம்மா.

**குஞ்ஞு :** எனக்குத் தூக்கம் வரலை, நீங்க போங்க, அவ தனியா இல்லே இருக்கா ?

**கிழவி :** தனியாவுமில்லே, ஒண்ணுமில்லே. ரெண்டு பொம்புளைங்க வந்திருக்காங்க. ஆனாலும் நான் இருக்கணும். (போகிறாள்)

**குஞ்ஞு :** பின்னே என்ன இவ்வளவு சீக்கிரமாக் கிளம்பிட்டே ?

**ராவகன் :** ஆறு மணிக்கு வேலைக்குப் போகணும். அதுனால சீக்கிரமாவே விஷயத்தைத் தெரிஞ்சுக்கிட்டுப் போகலாம்னு நெனச்சேன்.

**குஞ்ஞு :** விசேஷம் ஒண்ணுமில்லை. ராத்திரியெல்லாம் அப்படியே வலியும் வேதனையுமா ஓட்டினா.

**ராகவன் :** அப்படின்னா சிவராத்திரியாயிருந்தது இல்லே ?

**குஞ்ஞு :** ஓ, அது அப்படியெல்லாம்தான் இருக்கும்.

**ராகவன் :** (மடியிலிருந்து பீடியும் தீப்பெட்டியும் எடுத்து நீட்டி) குஞ்ஞோர்க்கியண்ணன் குடிக்கிறீங்களா ?

**குஞ்ஞு :** வேண்டாம் ஏராளம் குடிச்சிட்டேன்.

**ராகவன்** : (தரையைப் பார்த்துப் பீடித் துண்டுகளைக் கண்டு) இத்தனையுமா குடிச்சுத் தீர்த்தீங்க ! ஊர் முழுசும் பீடித்துண்டும் தீக்குச்சியும். இது அந்த உபதேசியார் சொல்றது போலத் தான்!

**குஞ்ஞு** : உபதேசியார் என்ன சொல்றாரு ?

**ராகவன்** : ஆ. ஏதோ அஞ்சு மணவாட்டிகள் ராத்திரிமுழுசும் யாருக்காகவோ காத்திருந்தாங்கன்னு (பீடியைக் கொளுத்திக் குடிக்கிறான்)

**குஞ்ஞு** : அவங்களும் ஏராளம் பீடி குடிச்சிருப்பாங்க.

**ராகவன்** : அதில்லை இந்தக் காத்திருத்தல். யாரையாவது எதிர்பார்த்திருப்பது பெரியவீண்.

**குஞ்ஞு** : இங்கே மணவாட்டியொண்ணுமில்லை, ஆரம்பமே பிரசவத்தில தான் !

(இருவரும் சிரிக்கிறார்கள். உள்ளேயிருந்து 'ஐயோ! எனக்குத் தாங்கலியே' என்றெல்லாம் கூக்குரல் கேட்கிறது. இருவரும் உட்புறம் பார்க்கிறார்கள். சப்தம் மேலும் தொடர்கிறது. ராகவனும் குஞ்ஞுவர்க்கியும் சென்று பின்புற வாயிலின் பக்கமாக நிற்கிறார்கள்)

**குஞ்ஞு** : பெரியம்மா !

**கிழவி** : என் மகன் ஒண்ணும் பயப்படவேண்டாம். இன்னும் கொஞ்சம் நேரம் ஆகும். போய்ப்படுத்து உறங்கிக்கோ (கிழவி போகிறாள்)

**குரல்** : (பின்னாலிருந்து) அவன் மீண்டும் வருகிறான் !

**குஞ்ஞு** : அந்த ஆசாமிக்குப் பைத்தியம். பொழுது புலரலை, அதுக்கு முன்னாலேயே தொடங்கியாச்சு பிரசங்கத்தை !

**ராகவன்** : அவருக்கு அப்படியெல்லாம் ஒண்ணும் கெடயாது. சில சமயம் ராத்திரியிலகூடச் சத்தமாச் சொல்லிக்கிட்டுத் திரிவார். நான் போறேன், எனக்கு நேரமாச்சு. (குஞ்ஞுவர்க்கி திரும்பவும் நடக்கிறான். மாத்துக்குட்டியின் படத்திற்கருகே சற்றுநேரம் பார்த்துக் கொண்டு நிற்கிறான். பிறகு ஒரு பீடியைக் கொளுத்துகிறான்)

**குஞ்ஞு** : சாயங்காலம் பார்க்கலாமா ?

**ராகவன்** : (போக முற்படுகிறான்) பார்க்கலாம். அட, இது யாரு, உபதேசியாரில்லையோ? (உபதேசியார் நுழைகிறார். ராகவன் வெளியே போகிறான்)

**உபதேசி** : எப்படியிருக்கு குஞ்ஞுவர்க்கி ?

**குஞ்நு** : விசேஷமொண்ணுமில்லை, நீங்க கோவிச்சுக் கிட்டிருப் பீங்கண்ணு நெனச்சேன்.

**உபதேசி** : நான் யாரோடயும் கோபிக்கிறதில்லை. பாவத்தை நான் வெறுக்கிறேன். பாவியை நான் நேசிக்கிறேன்.

**குஞ்நு** : உங்க சிநேகமும் இப்படித் தானோ ?

**உபதேசி** : அப்படின்னா? எனக்குப் புரியலை.

**குஞ்நு** : சிநேகமும் இப்படி ஆகாயத்தில்தானோ அப்படின்னு

**உபதேசி** : இப்பவும் புரியலை.

**குஞ்நு** : உபதேசியார் எப்படி பாவியை பாவத்திலிருந்து பிரித்து நேசிக்கிறீங்க. அதைப் போல நல்லதை நேசிக்கிறதும் மனுஷனிலிருந்து பிரிச்சுத்தானே அப்படின்னு மட்டும்தான் கேட்டேன்.

**உபதேசி** : எனக்கொண்ணும் புரியலை. புரிஞ்சாலும் நான் பதில் சொல்லப் போறதுமில்லை.

**குஞ்நு** : உபதேசியார் கோபப்பட வேண்டாம். நான் சும்மா சொன்னேன்.

**உபதேசி** : குஞ்ஞுவர்க்கி, நான் இதயமில்லாதவனல்ல, நான் பைத்தியமுமில்லை, நான் உன் நன்மையை உத்தேசித்து மட்டுமே சொன்னேன். உனக்கு அது பிடிக்கலைன்னா நான் கஷ்டப் படுத்தப் போறதில்லை. (நடக்கிறார்) கேட்கச் செவியுள்ளவர் கேட்கட்டும்.

**குஞ்நு** : உபதேசியாரே! (உபதேசியார் நிற்கிறார்) மாத்துக் குட்டி இறந்து போனான்.

**உபதேசி** : நான் தெரிந்து கொண்டேன். அதனால் என்ன ? அப்படியும் நீங்கள் கணவன் மனைவியாகி விடவில்லை. கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! (வெளியேறுகிறார்)

(குஞ்ஞுவர்க்கி ஒரு பீடியைக் கொளுத்தஆரம்பிக்கிறான். உள்ளே ஏதோ சில சத்தங்கள் கேட்டு அங்கே பார்க்கிறான். உள்ளேயிருந்து குழந்தையின் அழுகை கேட்கிறது. பீடியையும் தீப்பெட்டியையும் கீழே வைத்து விட்டு குஞ்ஞுவர்க்கி பின்புற வாயிலை நோக்கி ஓடுகிறான்).

**கிழவி** : (வருகிறாள்) பெத்துட்டா!

(அறையில் ஒளி அதிகமாகிறது)

**குரல்** : (பின்னாலிருந்து) காலையை சிருஷ்டித்த கடவுளுக்கு தோத்திரம்!

**குஞ்நு** : (பரபரப்புடன்) என்ன ?

**கிழவி** : (சுருக்கம் விழுந்த முகத்தில் ஒரு கொஞ்சலுடன்) ஆண்

(குஞ்ஞுவர்க்கி கண்ணை மூடிச் சற்றுநேரம் மௌனமாக நிற்கிறான். கிழவி பொக்கைவாய்ச் சிரிப்புடன் உள்ளே போகிறாள்)

**குஞ்ஞு** : என் மகன்! (லாந்தரையெடுத்து அணைத்து வைக்கிறான்)

**குரல்** : (பின்னாலிருந்து) அவன் சமாதானத்தின் தூதன்!

**குஞ்ஞு** : சமாதானத்தின் தூதனோ, விலங்கோ, சாட்சியோ, புரோகிதனோ எது வேண்டுமானாலும் இருந்துக்கட்டும். (மாத்துக்குட்டியின் படத்தருகே போய் நின்று கொண்டு) ஸாராம்மா! உன் விருப்பப்படியே ஆகட்டும் (உள்ளேயிருந்து குழந்தையின் அழுகை உரக்கக் கேட்கிறது) என் சின்ன மாத்துக்குட்டி!

**குரல்** : (பின்னாலிருந்து) அவன் திரும்பத் திரும்ப வருகிறான்!

(மலர்ந்த முகத்துடன் குஞ்ஞுவர்க்கி பீடியையும் தீப்பெட்டியையும் தரையிலிருந்து எடுத்துக்கொண்டு நாற்காலியில் சென்றமர்கிறான். சாய்ந்து படுத்துக் கொண்டு பீடியைக் கொளுத்தி புகையை மேலே விடுகிறான்)

(திரை)

# இது உலகம்

— கெ. டி. முகம்மது —

## இது ஆகாயமல்ல

*முஸ்லிம்களின் வாழ்க்கையைத் தொடும் ஒரு நாடகத்திற்கு முஸ்லிம் சமுதாய நாடகம் என்று பெயரிடலாமெனின் இது அப்படிப்பட்டது.*

*இந்நாடகத்தால் யாரையும் வேதனைக்குள்ளாக்க நேரிடக் கூடாதென நான் எண்ணியதால் பயனில்லை.*

*மதம் மனிதனைச் சீர்படுத்த உண்டாகியது. ஆனால் இன்று விஷயம் இதற்கு நேர் எதிராக இருக்கிறதோவெனச் சந்தேகிக்க வேண்டி வருகிறது. மதத்தின் உருவமும் பாவமும் மாறவில்லை. மத உணர்வு கொண்டவனான மனிதன் இப்போது முந்தைய ஸ்தானத்தில் நிற்பதுவுமில்லை. இன்று கடவுளைக் காப்பதற்கான கவசமாயிருக்கிறது மதம். (கடவுள் சர்வ சக்தி வாய்ந்தவன். தன் பாதுகாப்பை அவன் மனிதனின் கையில் ஒப்படைப்பதில்லை.)*

*இந்தத் தலைசுற்றல், மதத்தை மனிதனிலிருந்து உயர்த்திப் பிடிக்கிறது. இதன் காரணமாக மத அனுஷ்டானங்கள் ஒரு விதமான கடனைக் கழிப்பதாய் மாறிவிட்டிருக்கின்றன. அப்படிக் கடனைக் கழிப்பவர்களை இது வேதனைக் குள்ளாக்கினால் எனக்கு ஆட்சேபணையில்லை.*

*தங்களுடைய வஞ்சனைகள், வாழ்வதற்கான முயற்சியில் செய்துவைக்கும் எல்லாத் துர்ச்செயல்கள் — இவற்றின் மேல் மதத்தின் ஆபரணத்தையணிவித்துத் தப்பிக்கப் பார்க்கும் "முஸ்லீம்கள்" ஏராளமாக உளர். மதம் அவர்களுக்கு ஒரு வியாபாரப் பொருள். அவர்களையும் இது வேதனைப் படுத்தலாம். எனக்கு ஆட்சேபணையில்லை.*

அநாசாரங்களையும் குருட்டு நம்பிக்கைகளையும் இந்நாடகத்தில் தொட்டிருக்கிறேன். "மயிரை ஏழு இழையாகப் பிளந்து" ஒரு பாலம் இஸ்லாம் மதத்தில் இல்லை, முஸ்லீம்களுக்கிடையே உண்டு. அதை ஒரு உதாரணமாக மட்டுமே எடுத்துக் கொள்ளவும்.

பல விஷயங்களையும் சொல்லத் தைரியமடைந்திருப்பது மதத்தின் அடிப்படை விஷயங்களோடு மோதிப் பார்த்தல்ல. தவறென்று தோன்றியவற்றைத் தவறென்றும் சரியென்று தோன்றியவற்றை சரியென்றும் கூறியிருக்கிறேன். பரிபக்குவமான மத உணர்வை நான் உரிமை கொண்டாடவில்லை. அது உள்ளவர்கள் உண்மையை நோக்கி டார்ச் அடிக்கட்டும். ஒரு வேளை எனது உணர்வில்தான் இருளென்று எனக்கு அப்போது புரியலாமல்லவா. எங்கேயானாலும் இருளை நீக்க வேண்டமென்பது தான் என் விருப்பம்.

'மதம் என்னவானாலும் மனிதன் நன்றாக ஆனால் போதும்' என்பதை இந்நாடகத்தின் நீதியாக நான் கொள்ளவில்லை. அதாவது 'மனிதன் கெட்டாலும் நோன்பும் நிஸ்காரமும் செய்து கொண்டிருந்து விட்டால் போதாது' என்று நான் கருதுகிறேன்.

நல்ல மதத்தின் குறிக்கோள் நல்ல மனிதன் என்றிருக்க வேண்டுமல்லவா. நல்ல மனிதன் என்றால் விரிவும் வளர்ச்சியும் அடையும் மனிதன் என்று எல்லோரையும் போல நானும் பொருள் கொள்கிறேன்.

ஏனென்றால், இது உலகம்.

– **கெ. டி. முகம்மது**

## உலகில் வாழ்கிறவர்கள்

**முதலாளி** : *முதலாளித்துவம் இதில் பிரச்னையாவதில்லை. ஆனால் ஒரு முதலாளி கைவசம் இருக்கும் மத அதிகாரங்களை யெல்லாம் கையிலெடுத்துக் கொண்டு நடக்கிறார். குழந்தைகளை வளர்ப்பது கோபத்தில் தோய்த்த வாத்ஸல்யத்தோடு. வயது முதிர்ந்த ஒரு ஆசாரவாதி. (தலை மொட்டையடித்து, தாடி வளர்த்து, வட்டக் கழுத்து கொண்ட பனியணிந்து, பச்சை நிற பெல்ட் இடுப்பில் கட்டி, தன்னைவிடத் தாழ்ந்ததே இந்த உலகம் என்கிற மாதிரியில் ஒரு நடையும் பாவனையும்)*

**ஔக்கர் கோயா** : *மூத்த மகன், வாப்பாவின் எல்லா சுபாவங்களும் அவனுக்குக் கிடைத்திருக்கின்றன. நோன்பும், நிஷ்டையும், கடை வைப்பதும், வியாபாரம் செய்வதும்–அதற்கு மிஞ்சி பெரியவருக்கு துனியா கிடையது. (தொப்பியும், சட்டையும், பெரும்பாலான நேரமும் கீழே பார்த்தவாறே நடை. ஓர் அதிருப்தி எப்போதும் ஐயாவைச் சங்கடப்படுத்திக் கொண் டிருக்கிற மாதிரித் தோன்றும்)*

**ஹஸன்** : *இரண்டாம் மகன், வாப்பா சொல்வது முழுவதையும் கடைப் பிடிக்கத் தனக்குத் தைரியம் போதாது என்றே அவன் சொல்கிறான். அவனுக்கு வாப்பாவின் கைப்பிரம்பிடம் பயம். ஆனால், அதனால் சொல்ல வேண்டியதைச் சொல்லாமலிருக் கவும், செய்ய வேண்டியதைச் செய்யாமலிருக்கவும் அவனுக்கு முடியவில்லை. (தலைமயிரை வாப்பாவின் அதிகாரத்திற் கெதிராக கிராப் அடித்திருக்கிறான். வாப்பாவின் முன்னால் தொப்பி அணிவான். அல்லாத போது அது கையிலிருக்கும். பல நேரமும் துணியை இறக்கிக் கட்டுவான்)*

**கதீஜா** : *ஹஸனுக்கு இளையவள். சுபாவத்தில் ஹஸனின் தங்கையாக அவளுக்கு அருகதை உண்டு. அறியும் துடிப்பு மிக்கவள். சந்தேகம் எதுவானாலும் யாரிடமானாலும் கேட்பாள். பார்ப்பதற்கு எப்போதும் ஒரு சாதுப் பெண்ணாகத் தோன் றுவாள். ஆனால் .... (காச்சித் துணியும், அங்கியும், தலைத் துணியும். கழுத்திலும் காதிலும் நகைகள், கையில் வளையங்கள்)*

**உஸ்மான்** : *முதலாளியின் தம்பி. வாழ்வது அந்த முதலாளித் துவத்தின் நிழலிலல்ல. சூறாவளிகளை விரும்பாமல் வாழ ஆசைப்படுகிறான். சுற்றிலும் நோக்குவான், காண்பான்,*

*கிரகிப்பான், சிந்திப்பான். ஓட்டத்திற்குத் தடைபோடத் துணிய மாட்டான். (தாடி உண்டு, வெள்ளைத்தொப்பி அணிவான் ஃபுல்ஷர்ட்டும், துணியும், தோளிலொரு துண்டும்).*

**ஆமினா** : *உஸ்மானின் மனைவி. வாழ்க்கையில் எப்போதாவது சிரித்த நினைவு கூடத் தோன்றாது. வாழ்க்கை அவளுக்குச் சுமை என்று தோன்றும். அதிகாரமான பேச்சு. (தலைத் துணியும், தைத்த அங்கியும், கச்சைத் துணியும்)*

**காலிது** : *தான் காணும் சரியானவைகளை சரியானவை யென்று நிறுவுவதற்காக வாழ்கிறான். எதிர்ப்புக்களைப் புல்லாக மதிக்கும் தன்னம்பிக்கை கொண்டவன். (கிராப் செய்த தலை, ஷர்ட்டும், வேஷ்டியும். ரிஸ்ட் வாட்ச் கட்டியிருக்கிறான். பெரும்பாலான நேரங்களிலும் கையில் புத்தகங்கள் காணப்படும்)*

**பாத்தேயி** : *அவளுக்கு ஒன்றும் தெரியாது. பதினாறு வயது ஆகியிருக்கலாம். ஏழை காலிதின் தைரியத்தில் அவள் விகஸிக்கவும் வளரவும் செய்கிறாள், ((முதற் காட்சியில் தாறுமாறாய்க் கிழிந்த உடைகள். சுருங்கிப் போனவை. தலைத்துணி, லுங்கி, அங்கி. மற்றவைகளில் சுத்தமான நல்ல உடைகளை உபயோகிக்கிறாள். இறுதிக் காட்சிகளில் ஓரிருமுறை ஸாரியணிகிறாள்)*

*(ஒரு வருட காலத்தினுள் மத்திய மலபாரில் இக்கதை நடக்கிறது)*

## காட்சி ஒன்று

### *உலகத்துள் வழுக்கி விழுந்த ஒரு பெண்*

*(உஸ்மானின் வீடு, இரவு நேரம். ஒரு மேஜை மேல் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. ஆமினா ஒரு நாற்காலியிலமர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறாள். தலைத்துணி தோளில் கிடக்கிறது. கைகளும் முகமும் வெளியே தெரியாமல் பர்தாவணிந்த ஒரு உருவம் உள்ளேயிருந்து பிரவேசிக்கிறது. ஆமினாவின் காதருகில் வந்து என்னவோ முணுமுணுக்கிறது. அவள் அதை அறியவில்லை. அவ்வுருவம் அவளை ஒன்றிரண்டு முறை சுற்றி வந்து அவளுக்கு முன்னால் துள்ளிக் குதிக்கிறது. சப்தம் கேட்டு அவள் திடுக்கிட்டு விழித்து, குதித்தெழுந்து விலகி நின்று நடுங்குகிறாள்)*

**ஆமினா** : *(குதித்தெழுந்தவாறே) என் ரப்பே! காப்பாத்து ...*

*(குத்திட்ட கண்களுடன் அவ்வுருவத்தை நோக்குகையில் அது மெல்ல மெல்ல உட்புறமாகவே போகிறது. பயம் மேலிட்டு ஆமினாவின் சுவாசகதி வேகமடைகிறது. வீட்டில் வேறு யாருமில்லாத போதிலும் அவள் கணப்போது சுற்று முற்றும் நோக்குகிறாள். பிறகு பார்வை முழுவதையும் உட்புறமிருக்கும் வாசலில் பதித்துக் கொண்டு, எச்சரிக்கையுடன் கால்களை முன் புறம் நகர்த்தி அந்தப் புறமாக நீங்குகிறாள். இதையொன்று மறியாமல் அப்போது உஸ்மான் வெளியேயிருந்து வந்து நுழைந்து ஆமினாவைக் கவனிக்கிறான். ஆமினா இதை உணரவில்லை)*

**உஸ்மான்** : *என்னா ஆமினா ?*

**ஆமினா** : *(பயத்துடன்) மம்பரத் தெத்தங்களே ! (திடுக்கிட்டுத் திரும்பி நிற்கிறாள்)*

**உஸ்மான்** : *என்னாயிடுச்சு ஒனக்கு ?*

**ஆமினா** : *(கோபத்துடன்) எனக்கு மண்ணாங்கட்டி, பத்ரீக்களே! ... சீக்கிரமா வர்ரதில்லெ வாப்பாவும் மவனும், நான் தான் இருக்கேனே காத்துக் கெடக்க, கண்ட கண்ட*

சைத்தான்களும் ஜின்னுக்களும் உள்ள நொளையத் தொடங்கியாச்சு (உட்புறம் நோக்கி) நீங்க கொஞ்சம் உள்ளாரப் போயிப் பாருங்க.

**உஸ்மான் :** என்னாத்தப் பாத்துட்டே நீ?

**ஆமினா :** பாத்தது என்னெண்டு பாத்துக்கிடுங்க ! போயிப் பாருங்க.

**உஸ்மான் :** நீ பாத்ததச் சொல்லு.

**ஆமினா :** மொகம், காலு, கையு ஒண்ணுமில்லாத ஒரு சமாச்சாரம். ஏம்மின்னாடி வந்து துள்ளிக் குதிக்குது. நானானதுனால சத்தம் போட்டு ஊரக் கூட்டலை.

**உஸ்மான் :** (பெரிதாக எடுத்துக் கொள்ளாமல்) பத்ரீக்களையும், மம்பரத்தெத்தங்களையும் நூறு வாட்டியாவது கூப்புட்டுருப்பே ... ம்... பொறவு அது என்னா செய்திச்சு ?

**ஆமினா :** நானு சத்தம் போட்டப்ப அது உள்ளாரப் போயிருக்குது.

**உஸ்மான் :** மண்ணாங்கட்டி, நீ கனா கண்டுருக்கப்போறே ஆமினா.

**ஆமினா :** என் பத்ரீக்களே ... ! இந்த மனுஸன் சொல்றதப் பாத்தீங்களா.

**உஸ்மான் :** நீ ஏன் ஆமினா, இந்தச் செத்துப் போனவங்களை யெல்லாம் கூப்புட்டுக்கிட்டுருக்கே? அல்லாவையே சரியாக் கூப்புடேன்.

**ஆமினா :** இந்த ஆம்புளைக்கு எப்பவும் வெளையாட்டும் கேலியும்தான்யா. நீங்க அப்படிக் கொஞ்சம் உள்ளாரப் போயிப் பாருங்கண்டுல்லா சொல்லுதேன். இது நான் என் கண்ணால பாத்தது.

**உஸ்மான் :** ஒம் வேலையைப் பாரு ஆமினா.

**ஆமினா :** கொஞ்சம் போயிப் பாருங்க உள்ளார.

**உஸ்மான் :** நம்மால முடியாது. (நாற்காலியிலமர்கிறான்)

**ஆமினா :** (உட்புற வாசலைப் பயத்துடன் பார்த்து) சொன்னா இந்த மனுஸன் நம்பமாட்டேங்குதல்லா! நானும் இப்பிடியே ஒக்காந்துருக்கேன்.

**உஸ்மான் :** ஒன்னப் போல பொம்புளங்க இருக்க எடத்துல ஒரு சைத்தான் இருக்க வேண்டியதுதான். அது அப்படியே உள்ளாரவே இருக்கட்டும்.

**ஆமினா :** என் ரப்பே! நான் நடுங்கிப் போய்க் கெடக்கேன்.

**உஸ்மான்** : ஒரு நடுக்கமும் இல்லெ. நீ உள்ளாரப் போயி ஒரு டம்ளர் பச்சத் தண்ணி கொண்டா. காக்கா ஊட்லருந்து நான் வயிறு நெறைய துண்ணுட்டு வந்துருக்கேன். பெரிய காக்கா இந்த வருஷம் ஹஜ்ஜுக்குப் போறார் இல்லே!

**ஆமினா** : ஒங்களுக்குத்தான் அந்த மாதிரியான எண்ண மெல்லாம் கெடயாதே ! பேசாம ஒக்காந்துருங்க. ஒங்களுக்கு இப்ப முடியும்னா கொஞ்சம் உள்ள போயிப் பாருங்க. நான் நிக்கிற எடத்துலருந்து அசையப் போறதில்லெ.

**உஸ்மான்** : (ஓரக் கண்ணால் பார்த்து புன்சிரிப்புடன்) நீ அசைய வேண்டாம். அங்கயே நிண்ணுக்க. எனக்கு என்னண் டாலும் சைத்தான வெரட்டுற வேலை தெரியாது, தெரிஞ்ச யாரயாச்சும் கூட்டியாரேன். என்ன? (எழுந்திருக்கிறான், போக முற்படுகிறான்)

**ஆமினா** : இந்தா, நீங்க மனுஸாள மடையராக்க வேண்டாம். இந்த சமயம் பாத்து நீங்க வம்படிச்சிட்டிருக்க வேண்டாம். எனக்கும் தெரியுண்டேன் இங்க கெடந்து வெளியே போவ.

**உஸ்மான்** : போய்ப்புடேண்டி, நான் இங்கிட்டு கெடக்யேன் ... ஆமினோய், எனக்கு ஒன் வெள்ளாடலைப் பாக்குறப்பொ ... நீ போயி தண்ணி எடுத்தா, போ.

**ஆமினா** : என்னால ஆவாதுண்டுல்லே நான் சொல்லுதேன். ஒணுண்டா போயிக் குடிச்சிக்கிருங்க. ஒங்களுக்கும் நல்லதுல்லா, (உஸ்மான் சிரித்துக் கொண்டு உட்புறம் போகிறான். போகும்போது திரும்பி நின்று)

**உஸ்மான்** : நானு திரும்பி வரலைண்டா என்னெ சைத்தான் புடிச்சுக்கிருச்சுண்டு நெனச்சுக்கோ,

**ஆமினா** : (கவலையுடன்) நானு வரணுமா ஒங்களோட உள்ளார?

**உஸ்மான்** : நீ அங்கிட்டு நிண்டா போதும். பெரிய சூரிதான், (போகிறான்)

**ஆமினா** : (நெஞ்சில் கை வைத்து) என் மம்பரத் தெத்தங்களே! (உட்புறம் கவனிக்கிறாள். சட்டென்று உள்ளே பாத்திரங்கள் உருண்டு விழும் சப்தம் கேட்கிறது. ஆமினாவுக்குத் தூக்கிவாரிப்போடுகிறது. சற்றுக் கழிந்து உஸ்மான் எதுவுமே நடவாத மாதிரி வந்து நாற்காலியில் அமர்கிறான். ஆமினா பயமும் வியப்பும் கலக்க கணவனை உற்று நோக்குகிறாள்)

**ஆமினா** : இன்னா ஆச்சு ? நீங்க ஒண்ணும் பாக்கலியா?

**உஸ்மான்** : அதுக்கு அங்கன ஏதானும் இருக்க வாணாமா?

**ஆமினா** : பின்னே இன்னா அது சத்தம்.

**உஸ்மான்** : அது அந்தப் பாத்திரம் கீத்திரம்லாம் வுளுந்த தில்லெ. எனக்கு ஒளுங்காத் தண்ணி எடுக்குதுக்கெல்லாம் தெரியுமா ? ஆமினா, நீ பெரிய பயந்தாங்கொள்ளி தான்.

**ஆமினா** : அது தெரிஞ்சிருந்தா என்னெக் கட்டிக்கிட்டிருக்க மாட்டியளோ ?

**ஊஸ்மான்** : இன்னா செய்றது. ஒங் கஷ்ட காலண்டு நெனச்சுக்க.

**ஆமினா** : நீங்க சும்மா என்ன அதுவும் இதுவும் பேச வைக்க வேண்டாம்.

**உஸ்மான்** : காலீது எங்க போனான் ? ஒங்கிட்ட எதுனா சொன்னானா ?

**ஆமினா** : ஏங்கிட்ட ஒண்ணும் சொல்லலை. சாயங்காலம் ஆனா ஆராச்சும் ஒருத்தர் இங்கிட்டு இருப்பியளா, இப்பிடி பொணத்துக்குக் காவலு நிக்கிறதுபோல இங்கன மனுஸாள் குந்தியிருக்கோணும். ஆம்புளங்களுக்கென்னா, பொம்புளங்க இருக்காளில்லெ பொறுத்துக்கிர. (உட்புற வாசலைப் பார்க்கிறாள்)

**உஸ்மான்** : (அதைக் கவனித்து) ஓம் பயம் தீரலை, நீ தூக்கத்துல எதுனா கனா கண்டுருப்பே ஆமினா! இல்லாம நீ சொல்ற கோலத்துல எங்கருந்து ஒரு சைத்தான் வரும் ?

**ஆமினா** : (கூறியது எதையும் கணவன் பெரிதாக எடுத்துக் கொள்ளாததினால் சோர்ந்து போய்) நான் கனாக் கண் டுருந்தேண்டா அப்பிடியே இருக்கட்டும், ஒங்ககிட்ட நாம அதப் பத்தியொண்டும் சொல்லிக்கிடலை, சரியாப் போச்சா.

**உஸ்மான்** : அடி சக்கை! நல்லாப் போச்சு! ஒனக்கு நானு ஒரு வேலை கொடுக்கப் போறேன். காலீது வந்தா நீ தான் கொஞ்சம் சொல்லிப்புடு—அஸனுக்கும் கதீசாவுக்கும் அதுவும் இதுவும் சொல்லிக் குடுக்க வாண்டாண்டு. அவன் கண்டதையும் வாசிச்சு, கத்துக்கிடறதாயிருந்தா அதுனால அவன் தலை மட்டும் கெட்டுப் போனா போதும். பாக்கிக் கொளந்தைங்க தலைய அவன் கெடுக்கவாண்டாம்.

**ஆமினா** : (பயத்தை முழுவதும் விலக்க முடியாமலேயே) ஏன் அவன மட்டும் குத்தம் சொல்றீங்கோ? அஸன்கோயா அசஞ்சா காலீதுகிட்ட வந்துப்புடுவான். காலீது படிக்கிறதயெல்லாம் கொண்டு போயி அவனும் படிப்பான். கதீசாவுக்குத் தான் ஏதப் பாத்தாலும் அதப் பத்திக் கேட்டுத் தெரிஞ்சிக்கிராம ஆகாதே ?

**உஸ்மான்** : எப்படிண்டாலும் நம்ம காக்கா ஏங்கிட்ட இப்பம் கொஞ்சம் சொல்லியிருக்காரு, ஏம்புள்ளங்களப் படிக்க வைக்க எனக்குத் தெரியும். ஓம் மகன அவன் வேலயப் பாத்துக்கிரச் சொல்லுண்டு சொல்லிப்புட்டுருக்காவ.

**ஆமினா** : அந்தி வேளை, பாதி ராத்திரி ஒரு சேதி கொண்டு வந்துருக்காவ, எனக்கு இதொண்ணும் கேக்க வேண்டாம். ஒங்களுக்கு எதுனா வேணுமா கொஞ்சம் தின்ன ?

**உஸ்மான்** : எனக்கு ஒண்ணும் வாண்டாம்.

**ஆமினா** : அப்படிண்டா எனக்குப் படுத்து ஒறங்கணும். பத்து வாட்டி சோறு வைக்க எளுந்திருக்க வாண்டாம். நான் வாசலை அடக்யேன். அவன் எப்பம் இங்கிட்டு வந்து தொலைப்பாண்டு அல்லாக்குத் தான் தெரியும்.

**உஸ்மான்** : போயி நீ படுத்துக்க பீவி. அவன் வந்தா நான் கதவத் தொறந்து விட்டுக்கிடறேன். சோறும் போட்டுக்கிடறேன். என்னா சரியா ?

**ஆமினா** : கொஞ்சம் வாப்பாவும் அப்படி வேலையெல்லாம் செய்துக்கிரலாம். கையொண்ணும் ஒடிஞ்சு போயிராது. (உள்ளே போவதற்காக வாசல் வரை போகிறாள், நிற்கிறாள், பயத்துடன் திரும்பிப் பார்க்கிறாள்)

**உஸ்மான்** : அங்கிட்டுப் போய்க்கோ ஆமினா! ஒம்பயமும் நீயும் ! (அப்படியும் போகாமல் நிற்பதைக் கவனித்து) உள்ளார ஒரு மண்ணும் இல்லைண்டு நான் சொன்னேனில்லே. அங்கிட்டுப் போ ஆமினோய். (எழுந்து அருகில் சென்று) நான் ஒன்னை அங்கிட்டுப் புடிச்சித் தள்ளிப் புடுவேன். (ஆமினா தைரியத்தைக் காட்டி உள்ளே போகிறாள். உஸமான் திரும்பி வந்து நாற்காலியில் அமரப் போகிறான். சட்டென்று "ஏன் ரப்பே ; காத்துக் கருப்பு" என்று கூக்குரலிட்டவாறு ஆமினா ஓடி வருகிறாள். பலமாக மூச்சு வாங்குகிறது. கைகால்கள் சோர்வது போலத் தோற்றமளிக்கிறாள். உஸ்மான் தூக்கி வாரிப்போட்டு நகர்ந்து நிற்கிறான்)

**ஆமினா** : சொன்னாப் புரியறதுல்லே. என்னால முடியா தப்பா! மனுஸாளைக் கொல்லுறதுக்குல்லெ கௌம்பியிருக் காவோ.

**உஸ்மான்** : (இப்போது மிதப்போடு) இன்னாயிருச்சு ஆமினோய் ?

**ஆமினா** : (பயத்துடன் கோபமும் முதிர) தேங்காக் கொலை !! பாத்துக்கிட்டு நிக்காவ, கொஞ்சம் போயிப் பாருங்கோ. சைத்தான்மார் ஒண்ணும் இல்லெ இல்லியா ? பாருங்கோ, கொஞ்சம் உள்ளாரப் போயிப் பாருங்கோ, காலீது ரூமுள்ளார ... என்னப் பாத்தும் எனக்கு நேரா ஒரு குதி (உஸ்மான் யோசனையுடன் உள்ளே போகிறான். கால்கள் குழைந்து ஆமினா கீழே அமர்கிறாள்.)

சற்றுப் பின்னர் உஸ்மான் அந்த பர்தா அணிந்த உருவத்தையும் பிடித்துக் கொண்டு பிரவேசிக்கிறான். ஆமினா எழுந்திருந்து குத்திட்ட கண்களுடன் பார்க்கிறாள்)

**உஸ்மான்** : இதோ ஒஞ் சைத்தான்.

**ஆமினா** : என்னா என் பத்ரீங்களே இது ?

**உஸ்மான்** : இதுதான் இஸ்லாம் 'ஜின்' னுண்டு சொல்ற சங்கதி. கொஞ்சம் வந்து தொட்டுப் பாரு.

**ஆமினா** : (அவ்வுருவத்தின் காலடிகளைக் கவனிக்கையில் உஸ்மான் பர்தாவை மேலே பிடித்துச் சிறிது சிறிதாக உயர்த்துகிறான். சட்டென்று ஆளைப் புரிந்து கொள்வதால்) டேய், திருட்டு ஹராமி! (அடிக்கப் போகிறாள்) ஒனக்கு நான் சொல்லித் தாரனே. (ஹஸன் பர்தாவை அவிழ்த்து எறிந்து விட்டு வெளியே ஓடுகிறான். உஸ்மான் விழுந்து விழுந்து சிரிக்கிறான்) நீ இங்கிட்டு வருவே அஸன்கோயா, ஒனக்கு நானு இங்க எடுத்து வச்சுருக்கேன். (போய் பர்தாவை எடுக்கிறாள்) ரப்போ, இது என் பர்தாவாச்சே! கொள்ளையில போவானே. சைத்தானே, என் நாலு வருச வளர்ச்சி நிண்ணு போச்சு.

**உஸ்மான்** : அப்ப நல்லதாப் போச்சு. நாலு வருசம் லாபமாச்சே

**ஆமினா** : நீங்க அதுக்கும் மேல போவீங்கோ, பேசாம அப்பிடிக் குந்தியிரிங்கோ, (பர்தாவை மேஜை மேல் வைத்து விட்டு வாசலைச் சாத்தப் போகிறாள்)

**உஸ்மான்** : இனிமே காலிது வந்த பொறவு அடச்சாப் போதாதா ஆமினா, வாசலை.

**ஆமினா** : (வாசலையடைத்துவிட்டு வந்து) என்னால ஆவாது காத்துக் கெடக்க.

(பர்தாவுடன் உள்ளே போகிறாள். உஸ்மான் நாற்காலியிலமர்கிறான். அப்போது யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டு உஸ்மான் வாசலைக் கவனிக்கிறான்)

**காலிது** : (வெளியிலிருந்து) உம்மா, ஒம்மா !

**உஸ்மான்** : (உட்புறம் நோக்கி) ஆமினா, அந்தா வந்துருக்கான் ஒம் மவன்.

**ஆமினா** : (கோபத்துடனேயே பிரவேசிக்கிறாள்) நம்புளாலே ஆவாதப்பா. சைத்தானே, அவன் கொஞ்சங் கூட ஒறங்குறதில்லெ; மத்தவங்களயும் ஒறங்க உடறதில்லெ. கொசு மாதிரி.

**காலிது** : (வெளியேயிருந்து) கொஞ்சம் சட்டுனு தொறம்மாவ்.

(ஆமினா வாசலைத் திறந்து விடுகிறாள். காலிது நுழைகிறான். உஸ்மான் வாயிற்புறம் நோக்குகிறான்.)

**காலிது** : *அவள அப்பிடி அளச்சுக்கிடும்மா.*

**உஸ்மான்** : *யாரிது ?*

**காலிது** : ஒரு பொண்ணு வாப்பா.

**உஸ்மான்** : *(சற்று முன்னே நகர்ந்து)* உள்ளார வாம்மா பொண்ணே. *(ஆமினா கோபத்துடன் வருகிறாள்)*

**ஆமினா** : இன்னாடாது கூடாத்ததை செய்யறவனே அது ?

**காலிது** : ஒரு பொண்ணு

**ஆமினா** : பொண்ணுண்டு சொன்னா ? இந்த வாசலுக்குள்ளார நொளய நான் சம்மயிக்க மாட்டேன்.

**உஸ்மான்** : *(ஆமினாவிடம்)* ஒடனேயே தொடங்கிப்புட்டா இவ ... நான் நல்லா அப்படி ஒரு அடி வச்சுருவேன். *(நாக்கைக் கடித்துக் கொண்டு அடிக்க ஓங்குகிறான். வாயிற்புறம் நோக்கி)* உள்ளார வந்துரு ம பளே.

**காலிது** : பெ ிய வேதனை வாப்பா, அவ விசயம். *(உம்மாவிடம்)* உம்ம, அவளுக்கு ஏதாச்சும் இருந்தா கொடு. பசிச்சு உளுந்து கெடந்த எடத்துலருந்து நான் அளச்சுக்கிட்டு வாரேன்.

**ஆமினா** : இந்த நட்ட நடு ராத்திரியில ... ஒரு வயசுக்காரப் பொண்ண ... என்னப் பேச வக்காதே.

**உஸ்மான்** : போள்ளா. அவுளுக்கு ஏதாச்சும் கொடு ஆமினோய் ... அத்தோட ஒன் சவடால நிறுத்திக்க போ,

*(ஆமினா நொடித்துவிட்டு உள்ளே போகிறாள்)*

**காலிது** : உள்ளார வந்துக்க. ம்!

*(கிழிந்து நைந்த உடைகளையணிந்து சோர்வுற்ற வதனத்துடன் ஒரு முஸ்லீம் பெண் நுழைகிறாள்)*

**உஸ்மான்** : ஒண்ணும் பயப்பட வாண்டாம். இப்பிடி உள்ளார வந்துக்க.

*(பயத்துடன் அவள் இன்னும் சற்று முன்னால் நகர்கிறாள். காலிது உள்ளே போகப் பார்க்கிறான்)*

**உஸ்மான்** : வந்து, மகளே, நீ எங்கிட்டாச்சும் வேலை பார்க்கக் கூடாதா ?

**பெண்** : *(களைப்புடனும் வருத்தத்துடனும்)* பாத்துட்டுருந்தேன். *(காலிது அந்த சம்பாஷணையைக் கேட்டுத் திரும்பி நிற்கிறான்)*

**உஸ்மான்** : அப்புறம் ?

**பெண்** : அங்கிட்டுருந்து போயிட்டேன்

**காலிது** : ம்! ஏன் போனே ?

**பெண்** : அவுக என்னைப் "போ"ண்டாக. நானு அந்தக் காதர் குட்டி மொதலாளி வூட்டுல இருந்தேன்.

**காலிது** : ஏன் அவுக வெளிய அனுப்பிச்சுட்டாக ?

**பெண்** : எனக்குத் தெரியாது

**காலிது** : சும்மா ஒண்ணுமில்லாம எப்பிடி ?

**உஸ்மான்** : எதுனாச்சும் இருக்குமடா ? அவளு கஞ்சி குடிச்சிட்டு அங்கிட்டுப் போயிக்கிரட்டும்

**காலிது** : நீ சரியா நடந்துக்கிரலையா அங்க ?

**பெண்** : நான் நல்லா சரியாத்தான் நடந்துக்கிட்டேன்.

**காலிது** : அப்படின்ன நீ அங்க எதுனாச்சும் தொலச்சிருப்பே பாத்திரம் எதயாவது ஒடைக்கவோ, ஏதாச்சும் திருடவோ ...

**பெண்** : நானு அப்படியொண்ணும் செய்யலை.

**காலிது** : அப்படிண்டா நீ அங்கிட்டுருந்து பென்ஷன் வாங்கிட்டு வந்துருப்பே. வயசாச் சுண்டா அப்பிடி ஒரு ஏற்பாடு இருக்கில்லெ ?

**உஸ்மான்** : நீ இன்னா கேள்விடா கேக்குறே ?

(ஆமினா கஞ்சியும் கறியுமாக பிரவேசிக்கிறாள். அவள் முன்னால் வைத்துவிட்டு நகர்ந்து நிற்கிறாள்)

**காலிது** : இன்னா காரணண்டு கொஞ்சம் தெரிஞ்சிக் கிரலாமில்லெ.

**பெண்** : என்னைப் போல ஒருத்தி அவுகளுக்கு இதுவரை கெடைக்கலைண்டு மொதலாளி பொண்ணுங்க பக்கத்து வீட்டுக்காரங்களோட பேசிக்கிடறத நான் கேட்டுருக்கேன்.

**காலிது** : அப்ப, நல்லா வேலை செய்யுறவல்லாம் அவுகளுக்கு வேண்டாண்டு அவுக சொல்லிப்புட்டாவளா ?

**ஆமினா** : இன்னாடா இது, இப்பிடி கண்ட பொண்ணுங்கள யெல்லாம் அளச்சுட்டு வந்து இப்பிடி வேண்டாததையெல்லாம் கேக்குறே. புள்ளே, இன்னா ஒனக்கு ?

**உஸ்மான்** : அவ அதக் குடிச்ச பொறவு அங்கிட்டுப் போய்க்கிரட்டும்டா

**காலிது** : எனக்கு இது தெரிஞ்சாவணும்

**உஸமான்** : (குரலைத் தாழ்த்தி) அது எதுனாச்சும் இருக்கும்டா (பெண் அழுகிறாள் அதைப் பார்த்து) நீ ஏன் அளுவுறே ?

**காலிது** : அளுறா. அப்படிண்டா நான் கேக்கலை, அந்தக் கஞ்சியக் குடிச்சிட்டுப் போயிரு.

**உஸ்மான் :** *நீ அந்தக் கஞ்சியக் குடி மகளே.*

**பெண் :** *(பெருகும் விசனத்துடன்)நானு ஒரு தப்பும் செய்யலை, மொதலாளி மவன் இஸ்கூல் சாத்தினதும் மத்ராஸிலருந்து வந்துருக்கான். அப்ப மொதலாளியம்மா என்ன அங்க உடறது நல்லதில்லெண்டு சொல்லி போகச் சொல்லிட்டாவ (பர்தாவால் முகத்தை மூடிக் கொண்டு அழுகிறாள்)*

**உஸ்மான் :** *அளுவாதே மவளே. நீ அந்தக் கஞ்சியக் குடிச்சிக்க.*

**பெண் :** *(விசனத்தைத் தாங்க முடியாமல் சற்று உரக்க) நான் இப்படியெல்லாம் அறியாதவ.*

**ஆமினா :** *இவளுக்கென்னா யாருமில்லியா ?*

**உஸ்மான் :** *நீ எப்படி கொளந்தே காலம் களிக்கிறே ?*

*(தாங்க முடியாத துக்கமும், யோசனையும், களைப்பும் காரணமாக தலை சுற்றுவது போலத் தோன்றுவதால் கால் தடுமாறி அப் பெண் விழப் போகிறாள்)*

**உஸ்மான் :** *ஆமினா !*

**காலிது :** *உம்மா !*

*(ஆமினா அவளைத் தாங்கிக் கொள்ளவும் சிச்ருஷை செய்யவும் முன்னே போகிறாள்)*

**( திரை )**

## காட்சி இரண்டு

### *நோன்பு காலத்தில் ஒரு சைத்தான்*

*(முதலாளியின் வீடு. இரவு கிட்டத்தட்ட மணி இரண்டு. நோன்பு காலம். வயிறு நிறைய உணவுண்டு முதலாளி நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். மேஜைவிரிப்புடன் ஒரு மேஜை பக்கத்தில் இருக்கிறது. அதன் மேல் எரிந்து கொண்டிருக்கும் ஒரு விளக்கு. பின்னால் கதீஜா நிற்கிறாள். முகத்தில் தூக்கச் சோர்வு)*

**முதலாளி** : *(மேஜை மேலிருந்த விசிறியையெடுத்து விசிறிக் கொண்டு) மகளே! கதீசா !*

**கதீஜா** : *இன்னா வாப்பா ?*

**முதலாளி** : *நீ இப்பிடி நம்ப முன்னால வந்து நில்லு, நாம் பாக்கட்டும். ரொம்ப வாட்டியா ஒங்கிட்ட ஒரு வெசயம் சொல்லணுண்டு நெனச்சுக்கிட்டுருக்கேன். இத்தோட எத்தினி நோம்பு செய்துருக்கே?*

**கதீஜா** : *எல்லாம் செஞ்சுருக்கேன் வாப்பா*

**முதலாளி** : *அடி கெட்டிக்காரி. நீ பலே ஆளாச்சே, பொம்புளக் குட்டிங்கண்டா அப்படித்தான் இருக்கோணும். வெள்ளாட்டு வெளயாடிக்கோ, நோம்பும் நிஸ்காரமும் செய்யாம வெளாடாதே. நாளைக்கு மேல போகையில அதெல்லாந்தான் நிக்கும். இந்த துணியாவுல உள்ளதுல ஒண்ணுலயும் ஒரு நெலயும் இல்லெடீ. யாரபூல் ஆலமீன்... இந்த துனியாவப் பாத்து நீ மயங்காதே; கேட்டியா மகளே! இபுலீஸ்ங்கிற சத்துரு நம்புள நாலு பக்கமும் சுத்தித் திரிஞ்சுக்கிட்டுக் கெடக்கான்.*

**கதீஜா** : *இபுலீஸ் ஏன் வாப்பா நம்மள எல்லாம் மாட்டி வைக்குறதுக்கு இப்பிடி அலையுது ?*

**முதலாளி** : *அதெல்லாம் பெரிய விசயம் மகளே, நீ அத் தொண்ணும் இப்பத் தெரிஞ்சுக்கிட வாண்டாம். நீ அல்லாவும் நபியும் சொன்னா மாதிரி நடந்துக்க. ஆ, நா மறந்துட்டேன்.*

(கூப்பிடுகிறார்) ஒளக்கரே.. ஒளக்கரே! (கூப்பிட்டது கேட்காததினால் கதீஜாவிடம்) ஒளக்கர் ஒறங்கிட்டானோ ?

**கதீஜா** : இல்லெ வாப்பா !

**முதலாளி** : (மீண்டும் அழைக்கிறார்) ஒளக்கரே ... ஒளக்கரே !

**ஒளக்கர்** : (உள்ளேயிருந்து) ஒ ... இன்னா ?

**முதலாளி** : நீ கொஞ்சம் இப்பிடி வா. (ஒளக்கர் நுழைகிறான்) நீ வரப்போ கதீசாவோட தலைத்துணி கொண்டாந்தில்லெ? அதெங்கே ?

**ஒளக்கர்** : உள்ளார இருக்கு. நான் வாரதுக்குள்ளார அவ ஒறங்கிப் போட்டா.

**முதலாளி** : அப்படிண்டா அத இங்கிட்டு எடுத்தா, ஜல்தி எடுத்தா. (ஒளக்கர் போகிறான். எழுந்து நடந்தவாறு) மகளே பாரு, இப்பஎன் மண்டை முளுசும் ஒன் வெசயம்தான். நீ இப்பிடி மின்னப் போல வெளயாடிக்கிட்டுக் கெடந்தா போதுமா? நீ பெரிய ஆளாயிட்டில்லே? ஒனக்கு நானு மொத ஒரு தலத்துணி கொண்டாந்துருக்கேன். பெரிய கடையிலருந்து வாங்கினது. பொம்புளக் குட்டிகள வேத்து ஆம்புளங்க பாக்கப் படாது.

**கதீஜா** : இன்னா வாப்பா பாத்தா ?

**முதலாளி** : (வாத்சல்யபூர்வமான கோபத்துடன்) சொன்னத அப்பிடியே கேட்டாப் போதாதா. பாக்கப் படாதுண்டு சொல்றேன்லே. ஒந் தலையில ஏறுதா ? (ஒளக்கர் ஒரு பொட்டலத்துடன் வருகிறான்) ஆ! இப்பிடிக் கொண்டா. (வாங்கி மேஜை மேல் வைத்துக் கட்டையவிழ்த்து ஜரிகை நிறைந்த ஒரு தலைத் துணியைப் பிரிக்கிறார். ஒளக்கர் சற்று நகர்ந்து நிற்கிறான்) ஹ ... ஹ... ஹா ! மகளே பாத்தியா இத ? பாத்தியா ? எத்தினி அளகு. ரூபா ஒண்ணோ ரெண்டோ இல்லெ. இருபத்தஞ்சு கொடுத்தேன். ஒனக்கில்லாமப் பின்ன வேற யாருக்காக நாஞ் செலவளிப்பேன்! (ஒளக்கரிடம்) ஒளக்கரே, அஸன்கோயா எளுந்தானாடா? அவனுக்கென்னா நோம்பொண்ணும் இல்லெண்டு தோணுது.

**ஒளக்கர்** : அவன் அப்பிடி இளுத்து மூடிக் கெடக்கான். கைச்சா எத்தினிவாட்டி கூப்பிட்டும் அவன் ஏந்திரிக்கலெ.

**முதலாளி** : அங்கிட்டு ஓடிப்போயி மருவாதியா இங்கிட்டு எளுந்து வரச் சொல்லுலே ! நான் வந்து எளுப்ப வாண்டாண்டு சொல்லு. நோம்பும் நிஸ்காரமும் செய்துட்டுப் படுத்துக்கட்டும். அவனப் போயிக் கூப்பிடுடா.

**ஒளக்கர்** : நான் போயிக் கூப்புடறேன். (போகிறான்)

**முதலாளி** : நீ என்னா ஒண்ணும் பேசக் காணும் மவளே. நீ இதப் போட்டுக்க மவளே. ம் ... (அவள் அசையாததைக் கண்டு)

ஒனக்கு இன்னாயிடுச்சு? இது போதாதா? பயப்படாதே. இதோட ஒண்ணும் நான் நிறுத்திர மாட்டேன். நீ இப்பிடி நில்லு. ஆ! (துணி முழுவதையும் பிரிக்காமல் அவளுடைய தலையிலிடுகிறார்) இப்ப எத்தினி நல்லாருக்கு பாக்க. (சற்று நேரம் கூர்ந்து நோக்கி, வாத்சல்யத்துடன் அடிக்க ஓங்குகிறார்) கள்ளி! ... பாரு! கேட்டியா நீ? நான் ஒன் நிக்காவுக்கு வேண்டிய காரியமெல்லாம் செஞ்சு முடிச்சிட்டேன். ஒனக்கு நான் பாத்துருக்குற மாப்பிள ஏக்கிளாஸ் பையன். நல்ல குடும்பத்துக்காரன். கேட்டுக்குடுதியா? படா பைசா உள்ளவனும் கூட. மைசூர்ல பெரியவுகளுக்கு இருக்குல்லா அரமணை மாதிரி ஒரு சாயா மக்கான் .... ந்தா, இப்ப தலைத்துணிய இப்பிடி மடக்கி வச்சுக்க. (தலைத் துணியைத் தலையிலிருந்து எடுக்கிறார்) ஏதாச்சும் விசேசத்துக்கு, விளாவுக்குப் போறப்போ போட்டுக்கிரு. (தலைத்துணியை மடிக்கையில் கதீஜா பேசாமலிருப்பதைக் கவனித்து) என்னாடி பேசாமருக்கே? மஹா! இதோட போதுமா? புள்ளி போட்ட சட்டை, நடுவுல கோடு போட்ட தலத்துணி... சரிகை போட்ட பூட்சு. இப்பிடி என்னெல்லாம் கெடக்கு! அல்லாவின் அனுமதியோடு நான் எதுக்கும் கொறவக்க மாட்டேன். ஒரு பயறு நீளம் கூட கொறைக்க மாட்டேன். அப்படிண்டா போதாதா ஒனக்கு? (ஔக்கர் நுழைகிறான் –அவனிடம்) எளுந்தானா கூப்புட்டதும்?

**ஔக்கர்** : நம்மளால ஆவாது. ஒணுண்டா நீங்களே கூப்பிட்டுக்கிடுங்கோ. எத்தினி கூப்புட்டும் அவன் அசையலெ.

**முதலாளி** : (தலைத்துணியை மேஜை மேலேயே வைத்துவிட்டு) எங்கே அவன்? எங்கே? ம்? நான் இங்கிட்டு எளுந்தருளியிருக்குற சமயத்துல ... மணி இன்னாடா ஆச்சு?

**ஔக்கர்** : ரெண்டு ஆயிருக்குது.

(முதலாளி கோபத்துடன் உள்ளே போகிறார்)

**ஔக்கர்** : (தலைத் துணியை மடித்துக் கட்டி வைத்தவாறு கதீஜாவிடம்) உனக்கென்னாடி?

**கதீஜா** : எனக்கு ஒண்ணுமில்லெ காக்கா (உள்ளே போகிறாள்)

**முதலாளி** : (உள்ளிருந்து) எளுந்திருடா... எளுந்திரு. ஒன் தறுதலைத் தனத்தையெல்லாம் அப்பிடி மூட்டை கட்டி வையி. (ஹஸனைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு வருகிறார்) நோம்பத் தவிர வேற வெளாட்டொண்ணும் வேண்டாம் போ. (ஹஸன் உறக்கச் சோர்வினால் கொட்டாவி விடுகிறான். அடிபடாமலிருப்பதற்காக அழுவது போல் பாவனை செய்கிறான். முதலாளி அவனை மறுபுறமாகத் தள்ளுகிறார். பின்னர் உட்புறம் பார்த்து) கைச்சேய்! அஸனுக்குச் சோறு வையி. (ஹஸனைத் தள்ளுகையில் தலைபட்டுவிட்டதால் கைவிரல்களைப் பார்த்து) ஒரு கூடை எண்ணெ சாத்தான் தலயில! (மேஜை மேல் தேய்க்கிறார்)

(ஔக்கர் கட்டி வைத்த தலைத் துணியுடன் போகிறான்)

**முதலாளி** : (நாற்காலியிலமர்ந்து) கதீசா எங்கே ? கதீசா, கதீசா! (கதீஜா வருகிறாள்)

**கதீஜா** : இன்னா வாப்பா ?

**முதலாளி** : நீ ராச்சோறு துண்ணியா மவளே ?

**கதீஜா** : க்கும், வாப்பா

**முதலாளி** : வயறு நெறயத் துண்ணில்லெ ? அப்பொறம் அஸராகுறப்போ கொளஞ்சு விள வேண்டாம்! நல்லாத் துண்ணில்லே ? நே ?

**ஔக்கர்** : (நுழைந்து) அந்தப் பய காலீதுதான் வாப்பா இவுகளயெல்லாம் கெடுக்கான். இப்பனாச்சும் அவன் சுபாவம் மனுசங்களுக்குத் தெரியுதுல்லே ?

**முதலாளி** : கதீசோய், ஒங்கிட்ட நான் எத்தினியோ வாட்டியா சொல்லுதேன். இன்னா சொல்லுதேன் ? நீ அங்கிட்டுச் சுத்தக் கூடாதுண்டு. அந்த ஆளு ஊட்டுள்ளார போனா மனுசாளுக்குக் கிறுக்குப் புடிக்கும். அந்தத் திருட்டு ஒதவாக்கரப் பய ஆட்டத்தப் பாக்குறப்போ... அப்பொறம் அவுக உம்மாவும் வாப்பாவும், ஒண்ணு ஸுன்னியும் ஒண்ணு வகாபும். ரெண்டும் ரெண்டு பக்கமாப் போச்சு. இனிமெ சேத்தாலும் சேராது. எல்லாமாச் சேந்து ஒரு குட்டிச் சொவரு அங்கிட்டு. என்ன சரியாத் தெரிஞ்சுக்கிரலை. ஒங்கிட்ட நானு இன்னா சொன்னேனுண்டா அவசியமில்லாம நீ அங்கிட்டுப் போக வாண்டாண்டு. இனிமெ நீ போனேண்டு தெரியட்டு. அப்பத் தெரியும் என் கோலம்.

**கதீஜா** : நான் இனிமே போகலை வாப்பா.

**முதலாளி** : அதுதான் மகளே நல்லது. ரொம்ப அவசியம் இருந்தா கைச்சா போய்க்கிரட்டும்... ம்... நீ போயி நிய்யத்து வச்சுப் படுத்துக்கிரு. கைச்சாகிட்ட குளியலறையில ஒரு பக்கெட் தண்ணி கொண்டு வைக்கச் சொல்லு. (கதீஜா போகிறாள். ஔக்கரிடம்) டேய், நீ கணக்கெல்லாம் சரி பண்ணினியா ? டாக்ஸ் ஆபீசுக்குப் போவேண்டியது. கண்டத்தயும் நோண்டியெளுதி தலயக் கெடுக்காதே. டாக்ஸ் கொடுத்துக் கொடுத்து மனுசன் தோத்துக் கெடக்கான். கணக்குப் பிள்ளைகிட்ட நீ வேண்டியபடி சொல்லிட்டில்லே ?

**ஔக்கர்** : ம் ...

**முதலாளி** : புக் மாத்தி எளுதறப்போ நல்ல கவனமாயிருக் கோணும். கணக்குப் பிள்ளைக்கு அது ஒறைக்கறதில்லெ. டாக்ஸ் ஆபீசருக்குக் கண்ணு உறுத்திச்சுன்னா ? அர்மாங்குட்டி ஹாஜி சொன்னால. அவுக கணக்கு நேத்துக் கொடுத்திருக்காவ. நாள் பேரேட்டுல ஒரு ரெண்டு ரூவா வித்தியாசத்தப் பாத்தப்போ அவன் கொடகொடன்னு கொடஞ்சுப்புட்டானாம். அர்மாங்குட்டி ஹாஜி வெசத்துப் போயிட்டாகளாம் சொன்னாக. (ஹஸன்

சாப்பாடு முடித்து கை, முகம் கழுவித் துடைத்துக் கொண்டு நுழைகிறான்) டேய், இங்கிட்டு வா, நீ இத்தினி சுருக்கா சோறு துண்ணிட்டியா? (எழுந்து அருகில் செல்கிறார்)

**ஹஸன்** : ஙா ...

**முதலாளி** : இன்னாத்துக்கு இத்தினி இவசரம்? எத்தயாவது சாவு சொல்லப் போணுமோ?

**ஹஸன்** : இல்லெ வாப்பா, நான் சாப்புட்டேன்.

**முதலாளி** : என்னா சாப்புட்டே? சாதாரணமா ஒங்களுக்கு ஒரு மூட்டை அரிசி வேணுமே!

**ஹஸன்** : எம் வயித்துக்கு என்னவோ ...

**முதலாளி** : இன்னா ஓம் வயித்துக்கு? வயறு கெட்டுப் போக இன்னாத்த வாங்கினே? (ஔக்கரைப் பார்க்கிறார்)

**ஔக்கர்** : இங்க அப்பிடியாப் பட்டதொண்ணும் வாங்கலெ.

**முதலாளி** : இன்னாண்டு சொல்லுடோ. நீ நோம்பு நோக்கலே?

**ஹஸன்** : உண்டும் வாப்பா

**முதலாளி** : உண்டுண்டா சாப்பாடு நல்லா சாப்பிட வாண்டாமா?

**ஔக்கர்** : அவுனுக்கு இன்னாத்துக்கு வாப்பா சாப்பாடு? அவுனுக்குப் பொளுது வெடிஞ்சா அந்தக் கோபாலன் நாயர் ஒட்டல்ல கெடைக்குமில்லெ சாயாவும் சோறும்.

**முதலாளி** : (அடிக்கத் தயாராக நெருங்கி) அப்ப அஸன் கோயா, நீ ரம்ஜான் மாசத்துல கோவாலன் நாயர் ஒட்டலுக்குப் போறியா?

**ஹஸன்** : (அடி பட பயந்து கைகளால் தலையை மறைத்துக் கொண்டு) இல்லெ வாப்பா.

**முதலாளி** : நெசத்தச் சொல்லிரு. போறியா? ஔக்கர் பின்னெ பொய்யா சொல்லுதான்?

**ஹஸன்** : அது எனக்குத் தெரியாது. கோபாலன் நாயர் எனக்கு சாயாவும் சோறும் சும்மா குடுப்பானா?

**முதலாளி** : நே! ... எனக்கு ஒன்ன நல்லாத் தெரியும்டா. ஏங்கிட்ட கத உடாதே. ஔக்கரே, இனிமெ நீ பாத்தா ஏங்கிட்ட சொல்லு. அல்லா அனுமதியோடு அவன நான் சரி பண்ணுறேன். (ஹஸன் மெதுவாக பின்பிறமாகவே நகர்ந்து உட்புறம் பாய்கிறான். அதைப் பார்த்து) நீ போ, நீ போ.

**ஔக்கர்** : இவன் அந்தக் காலீது கூடத்தான் ராவும் பகலும். தெரியலியா ஆளும் நடத்தையும் பாத்தா. காலீது

வெசயமெல்லாம் இஸ்லாமுக்குத் தலைகீளா. நீங்க கொஞ்சம் சித்தப்பாகிட்ட சொல்லப்புடாதா ?

**முதலாளி** : (நாற்காலியில் அமர்கிறார்) நான் சொல்லுதேன். நான் சொல்லியும் இருக்கேன். அல்லாவின் அனுமதியினால இதெல்லாம் எனக்குப் புல்லு. நீ கேட்டுருக்கியா அவுக சொல்லுறத. கேட்டிருக்கியா. ஏதோ ஒரு ஆட்டம் உண்டுமே ? (ஔக்கர் புரியாமல் நிற்கிறான்) துணியெல்லாம் தொங்க விட்டு, வெளக்கெல்லாம் எரியவிட்டு ராமாணமோ என்னவோ சொல்லுதாவளே ?

**ஔக்கர்** : நாடகம்.

**முதலாளி** : நாடகம், அதான். அது இஸ்லாமுக்குக் கூடாதாம். வேசம் மாறுதுல்லே ? தம் புள்ளெண்டாலும் அப்பிடிச் செய்தாக் கொண்ணு போட்டாலும் தப்பில்லெண்டு சொல்லுதாவ. கொரவளை நடுங்கிக்கிட்டுல்லெ அவன் சொன்னான், அவன் ஊட்டுல ஏதுனா நல்லதுண்டா ?

**ஔக்கர்** : இதுக்கெல்லாம் அவமானம் ஒங்களுக்குத் தான். காலிது ஒங்க தம்பிமவன். இண்ணைக்கு அவன் இப்பிடிச் செய்யுதான். நாளைக்கு என்னா செய்வாண்டு அல்லாக்கே தெரியும்.... ம்.... நடந்ததச் சொல்ல நான் மறந்து போயிட்டேன்.

**முதலாளி** : இன்னாடா அது ?

**ஔக்கர்** : நான் கடயப் பூட்டுக்கிட்டு வாரப்ப அந்தப் புளிய மரத்தடில ஏராளமா சனங்க கூட்டம். போயிப் பாத்தா அங்கிட்டு ஒரு எளம் வயசுப் பொண்ணு உளுந்து கெடக்கா.

**முதலாளி** : இஸ்லாம் பொண்ணா ?

**ஔக்கர்** : ம், சனங்க ஒவ்வொண்ணு பேசுதாவ. அவ அந்தக் காதர் குட்டிமொதலாளி ஊட்டுல வேலைக்கிருந்தாளாம். அவுக மூத்த மவன் இருக்கானே, மதராசுல படிக்கிறவன், அவன் இப்ப வந்துருக்கான். பாக்க நல்ல வயசுப் புள்ளைல்லா! இவ அவங்கிட்டக் கொஞ்சிக் கொளஞ்சிருக்கா, பெரியவுகளுக்கு இது தெரிஞ்சதும் இவளப் படிச்சு வெளியே தள்ளிப்புட்டாவ. ஊட்டுக்கில்லெ அவமானம். அப்புறம் கொஞ்சநாளா தெருவுல அலஞ்சுக்கிட்டுக் கெடக்கா

**முதலாளி** : அப்பொறம் இன்னாச்சுடா ?

**ஔக்கர்** : அப்பொறம் அந்த ஒடுகாலியக் கூட்டிக்கிட்டு காலீது ஊட்டுள்ளாரப் போயிருக்கான்.

**முதலாளி** : ஙே ...இன்னா நீ சொல்றது... ? லாஹிலா ஒலாகவத்த இல்லாபில்லா !

**ஔக்கர்** : சனங்களுக்கெல்லாம் அதப் பாத்து ஒரு தமாசு. ஆனாலும் அவனுக்கு பேஜாரு இல்லெ. காதர் குட்டி வீட்டுக் கதை

ஊர்ல பாட்டு. அதுனாலதானே வேற யாரும் அவளுக்கு ஒரு வேலையும் கொடுக்கலெ,

**முதலாளி** : அப்ப அவளு இப்ப சித்தப்பா ஊட்டுல இருக்காண்டா நீ சொல்லுதே ? ம் ?

**ஔக்கர்** : எதுனாத் துண்ணக் கொடுத்து நல்லது சொல்லி அனுப்பிட்டாவளோ, எனக்குத் தெரியாது.

**முதலாளி** : பாருடா, போயிப் பாரு. சாப்புட்டுப்புட்டுப் படுத்துக் கெடந்தா நடவாது. இன்னாத்துக்கு நேரமாக்குறே. இப்பவே போ (சாவிக் கொத்தை இடுப்பிலிருந்து எடுத்து) இந்தா என் அலமாரில இருக்கு டார்ச் வெளக்கு. அத்த எடுத்துக்க. (கொடுக்கிறார்) நாம இங்கிட்டு உயிரோட இருக்குற சமயத்துல அவுக கண்டபடி நடக்கக் கூடாதுண்டு சொல்லிடு. (ஔக்கர் உள்ளே போகிறான்). இன்னா ஒணுண்டாலும் செய்துப் போடலாண்டு அவுக நெனப்பு. பொறுக்கிகளப் புடிச்சு ஊட்டுள்ளார ஏத்துறதா ? ம்ஹூம் ... (கோபம் ஏறி விட்டதால் இருப்புக் கொள்ளாதது போல் காட்டுகிறார்) அத்தினிக்காச்சா? அதெல்லாம் வேண்டாண்டு சொல்லிப்புடு. இதுவரை இந்தக் குடும்பத்துல இல்லாதது இனிமேலும் உண்டாக வேண்டாம் (ஔக்கர் டார்ச்சுடன் நுழைந்து வெளியே போகக் கிளம்புகிறான்) சாவிய இப்பிடிக் கொண்டா. (ஔக்கர் சாவியைத் திருப்பிக் கொடுக்கிறான், போகிறான்) ஔக்கரே, ஔக்கரே! (கூப்பிடுகிறார்). இப்பிடி வா, (ஔக்கர் வருகிறான்) இல்லாட்டி ஒரு வேலை பண்ணு. உஸ்மான இங்கிட்டு வரச் சொல்லு. (ஔக்கர் மீண்டும் போகிறான். சில நிமிடங்களுக்குப் பிறகு 'வாப்பா, வாப்பா' என்று கூவியவாறு கதீஜா பயத்துடன் அலறுவது கேட்கிறது)

**முதலாளி** : (தூக்கி வாரிப் போட்டு எழுந்து) இன்னா மவளே கதீசேய், கதீசேய்! (உள்ளே பரபரப்புடன் போகிறார்) இன்னாயிருச்சு ? (உள்ளே போய், கண்களைப் பொத்தியழும் கதீஜாவையும் அழைத்துக் கொண்டு வருகிறார். நாற்காலியிலமர்த்துகிறார்.) இன்னாச்சு மவளே ?

**கதீஜா** : (பயந்து நடுங்கி) இன்னாவோ வாப்பா. இன்னாவோ பக்கத்துல போச்சு.

**முதலாளி** : எம் மவளுக்கு வேர்த்துப் போயிருச்சே! ரப்பே! (விசிறியெடுத்து விசிறுகிறார்)இன்னாத்தப் பாத்தேம்மா நீ? நான் ஒண்ணத்தியும் பாக்கலியே ?

**கதீஜா** : எனக்கு பயமாயிருக்குது வாப்பா

**ஹஸன்** : (ஓடி வந்து) என்னாச்சு வாப்பா ?

**முதலாளி** : அவ என்னத்தியோ பாத்து பயந்துருக்காடா.

**ஹஸன்** : இன்னாத்தப் பாத்து பயந்துட்டாளாம் ?

**முதலாளி** : என்னாத்தியோ பாத்து பயந்துருக்கா. கொஞ்சம் போயிப் பாரு.

**ஹஸன்** : அங்க என்னா இருக்கும் ?

**முதலாளி** : போயிப் பாருடா. சொன்னத அப்பிடியே கேக்கப் புடாதா ? (ஹஸன் உள்ளே ஒடுகிறன்) என்னா உருவத்துல மகளே அதப் பாத்தே ? மனுச உருவத்துலயா, கொரங்கு உருவத்துலயா, சொல்லு மவளே, (மகளின் தலையைத் தொட்டு அழுத்திக் கொடுக்கிறார்)

**கதீஜா** : எனக்குத் தெரியலெ வாப்பா.

**ஹஸன்** : (வந்து) அங்கிட்டு ஒண்ணுமில்லெ வாப்பா.

**முதலாளி** : பின்னே சும்மாவாடா அளுவுறா அவ ?

**ஹஸன்** : நான் எதயும் காங்கலை. ஒங்க பளய கொட அங்க மாட்டியிருக்கு, அவ்வளவுதான்.

**முதலாளி** : (சிரித்தவாறு, ஹ ஹ ஹா. நான் சொல்லலியா, அவளுக்குச் சும்மாத் தோணியிருக்குது. வாப்பாவோட கம்பி ஒடஞ்ச கொட மாட்டிக் கெடக்கு அங்க. பரவால்லெ. அப்பொறம் இது ரம்ஜான் மாசமில்லியா? எல்லா ஜின்னையும் சைத்தானையும் கட்டிப் போடுற மாசமில்லியா ? அப்பொறம் ஒன்ன பயமுறுத்த புது சைத்தான் வரணுமா ? நான் கொஞ்சம் மந்திரம் போடுதேன் (ஒரு கையைத் தலையில் வைத்துச் சற்று நேரம் மந்திரித்து தலையிலிருந்து கீழ்ப்புறமாக ஊதுகிறார்)

(திரை)

## காட்சி மூன்று

### உலகம் சுற்றத் தொடங்கி விட்டது

*(உஸ்மானின் வீடு, எல்லாம் முதற்காட்சியைப் போலவே. மேஜை மேல் விளக்கு இல்லை. காலிது உம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு பிரவேசிக்கிறான்)*

**காலிது** : *உம்மா, இனிமெ ஒரு வார்த்தை கூடப் பேசாதீங்க. என்ன வந்தாலும் நீங்க அவள இங்க வச்சுக்கிருங்கோ. ஒங்களுக்கு இனிமெ வேலை செய்ய முடியாதுண்டு சொன்னீகல்லே.*

**ஆமினா** : *வேலை செய்ய முடியாதுண்டு சொன்னது இதுக்கா. (மகனின் கையிலிருந்து தன் கையை இழுத்துக் கொள்கிறாள்)*

**காலிது** : *பின்னே எதுக்காம் ?*

**ஆமினா** : *மண்ணுக்கு. பின்னெ என்னவாம்? டே, நீ அவ கதயக் கேக்கலியா ? ஒரு ஊட்டுக்குள்ள ஏத்த முடியுமா அவளை? இல்லெ, முடியுமா ? நல்ல பொம்புளைண்டாலாவது பரவால்லெ.*

**காலிது** : *இன்னாம்மா, அப்பிடி நல்ல பொம்புளைண்டு சொன்னா என்னா ? இவ பொறுக்கீண்டா இருக்கட்டும். காதர் குட்டி மொதலாளி மவ்ன மயக்கினாண்டா அதுவும் இருக்கட்டும். இன்னையிலிருந்து அவ நல்லா ஆவாளுண்டா நாம நல்லாகட்டுமுண்டு விடப் புடாதா ?*

**ஆமினா** : *அவுளுக்கு நல்லாக முடியாதுடா. ஒன்னயும் அவ கெடுத்துப் புடுவா. நான் சொல்லலைண்டு வர வாண்டாம் !*

**காலிது** : *நான் ஒங்க கிட்ட ஒண்ணு சொல்லுதேன். என்னக் கொண்ணாலும் நான் கெடமாட்டேன்.*

**ஆமினா** : *நீ இன்னா ஒணுண்டாலும் செய்துக்கோ. பெரியப்பா சொல்றதக் கேட்டுருக்கில்லே ?*

**காலிது** : பெரியப்பா அப்பிடி என்னவெல்லாமோ சொல்லு வாரும்மா. பெரியவர் எதிர கையை நீட்டிக்கிட்டுப் போனப்போ ஒரு சின்ன வயசுப் பொண்ணாச்சேண்டு நெனச்சு ஒரு பைசா எடுத்துக் கொடுத்திருக்க மாட்டாரு. உம்மா, உங்களுக்குத் தெரியுமா–பசி பொறுக்க முடியாததுனால மனுசன் என்ன வேணுண்டாலும் செய்வாண்டு ? "என்னை என்ன வேணுண் டாலும் செய்துக்கிருங்க. என்னால பசியோட கெடக்க முடியாது"ண்டாக்கும் அவ ஏங்கிட்ட சொன்னா. அதக் கேட்டுக்கிட்டு இருதயமுள்ள ஒரு ஆளுக்குக் கண்ண மூடிக்கிட்டுச் சும்மா போக முடியுமாம்மா ?

**ஆமினா** : அப்பிடி அவ எத்தினி பேருட்ட சொல்லியி ருப்பாளோடா. என்னெல்லாம் செய்திருப்பா ?

**காலிது** : அதெல்லாம் சரிதானும்மா. அப்பிடி நூறு பேர்கிட்ட சொல்ல வைக்கிறதுக்குக் கூட பசிக்குச் சக்தியுண்டு. நீங்க நோம்பு புடிக்கிறீகல்லே ? அதுனால ஒங்களுக்கு பசியோட கொடுமை நல்லாத் தெரியுமில்லெ ? ... இல்லாட்டா எப்படித் தெரியும் ? ராத்திரி சாப்புடறப்போ மறுநா சாயங்காலம் வரைத் தாங்கணுண்டு மூக்குப் பிடிக்கத் திண்ணுறீகல்லே? அதுக் கெல்லாம் மேல ரெண்டு பூவன் பளம் வேற முளுங்குறது.

*(உஸ்மான் கேட்டவாறே உள்ளேயிருந்து வருகிறான்)*

**உஸ்மான்** : இன்னா காலிது சொல்றே ?

**காலிது** : பகல் முளுசும் தின்னாமலும் குடிக்காமலும் இருந்துட்டா விரதம்ண்டு நெனைக்கிற கூட்டத்தச் சேர்ந்தவ உம்மா.

**உஸ்மான்** : *(சிரித்தவாறு)* நீ சொன்னது சரிதான். சரியா வெரதம் இருக்குறவங்க இப்ப ரொம்பக் கொஞ்சம்தான்.

**ஆமினா** : *(நொடித்து)* ஆமா, வாப்பாவும் மவனும் இருக்கீகல்லெ பெரிய தங்கமா. இல்லெ பின்ன ...

**உஸ்மான்** : ஒடனே ...

**ஆமினா** : நாங்கல்லாம் முட்டாளுவதான், சொல்லிக் குடுக்கத் தான் நீங்க இருக்கீகளே வகாபு ; இல்லெ ?

*(காலிது சிரிக்கிறான்)*

**உஸ்மான்** : நீ கேட்டுக்க ஆமினா, நாம எளுபத்திரண்டு பிரிவா ஆயிடுவம்ண்டுல்லெ சொல்லுதாவ. அதுல ஒரு கூட்டத்தவங்க மட்டுந்தா சொர்க்கத்துக்குப் போவாக.

**ஆமினா** : ஆமா, அது வகாபுகளாத் தானிருக்கும்.

**உஸ்மான்** : இல்லெ, ஸுண்யாளு !

**காலிது** : *(சிரிப்புடன்) ஒரு ஊட்டுள்ளளே அஞ்சாறு பிரிவுக இருக்கு. பின்னெ வெளியேயுள்ள நெலமையைச் சொல்லணுமா வாப்பா ?*

**ஆமினா** : *எனக்கு ஒங்களோட மல்லுக்கு நிக்க முடியாது. வாப்பாவும் மவனுமாச் சேந்து என்ன நாசம் வேணுமுண்டாலும் உள்ளாரக் கொண்டு வந்துக்கிருங்கோ. (உள்ளே போகிறாள்)*

**உஸ்மான்** : *டேய், ஒன் உம்மாவோட சண்டை போட நிண்டா நல்ல ஹராம் வந்து சேரும். பெரியவுகளுக்கு எப்பவுங் கோபந்தான்.*

**காலிது** : *வாப்பா உம்மாவ நல்லாப் புரிஞ்சு வச்சிருக்கீங்கோ.*

**உஸ்மான்** : *நான் கெளம்பப் போறேன். (உஸ்மான் வெளியேயேயும் காலிது உள்ளேயும் போக ஆயத்தமாகின்றனர்) ஆமாம்... ஒங்கிட்ட ஒரு வெசயம் கேக்கட்டும். இப்பிடி வா. (காலிது வருகிறான்) நீ அந்தப் பொண்ண இன்னா செய்யப் போறே ? இந்த ஊட்டுள்ளார அவளஇருக்க விட ஓம் பெரியப்பா சம்மதிக்கலெ. ஊர்க்காரவளும் ஒண்ணொண்ணு பேசுதாவ. நீ அவகிட்ட போயிரச் சொல்லு.*

**காலிது** : *எங்கிட்டு வாப்பா ? உம்மாவுக்கு இங்க ஒதவிக்கு ஒரு ஆளு வேணுண்டு சொல்ல ஆரம்பிச்சு கொஞ்ச நாளாச்சுல்லெ ? அது அவளாயிருக்கட்டும்.*

**உஸ்மான்** : *அதுக்கு நாம வேற ஆளப் பாக்கலாம்டா. இது நமக்கு நல்லதுக்கில்லெ. குல்மால் ஆப்பீசுதான் இங்கெ வந்துரும். அதான் நான் சொல்லுதேன்.*

**காலிது** : *அதுக்காவ நாம தெரிஞ்சுக்கிட்டே ஒரு தப்பு செய்யணுமா. ஒரு ஏளைப்பொண்ண ஊட்டுல வச்சுக் காப்பாத்தினோம்ண்டா அல்லா முன்னாடி அது ஒரு தப்பாகுமா ? இல்லைண்டா பொறவு நாம எதுக்காவ பயப்படணும் ?*

**உஸ்மான்** : *நான் இப்ப ஒண்ணும் சொல்லலெ. ஒனக்கு புத்தியிருக்குல்லெ? நீயே நல்லா யோசனை பண்ணு. (போகிறான்)*

*(உள்ளேயிருந்து பெண்களின் சிரிப்புக் கேட்டு காலிது ஆழ்ந்திருந்த யோசனையிலிருந்து விடுபட்டு உள்ளே கவனிக்கிறான்)*

**காலிது** : *(அந்தப் புறமாக நகர்ந்து) யாரு சிரிக்கிறது? (அவர்களைப் பார்த்து) இங்கிட்டு வாங்க. இப்பிடி. (கதீஜாவும் பாத்தேயி–பெண்–யும் வருகிறார்கள். கதீஜா சிரித்துக் கொண்டும் பாத்தேயி பயத்துடன் சிரிப்பையடக்க முயற்சித்துக் கொண்டுமிருக்கிறார்கள்) என்ன சிரிப்பு ?*

**கதீஜா** : *ஒண்ணுமில்லெ காக்கா*

**காலிது** : *ஒண்ணுமில்லாம எல்லாரும் சிரிக்காவளா ?*

**கதீஜா** : யாருக்குத் தெரியும் –?

**காலிது** : எப்பிடி நீங்க ரெண்டு பேரும் இப்பிடி சீக்கிரமா இத்தினி ஒட்டிக்கிட்டீக? அது சரி. கதீசாவுக்கு இந்தத் தெருவுக்கு வெளியே துணியா கெடயாது. அந்த துணியாவுல தான் பாத்தேயி கெடச்சா. (கதீஜா பாத்தேயியை நோக்கி மீண்டும் அடக்க முடியாமல் சிரிக்கிறாள்) இல்லெ, ஏங்கிட்ட சொல்லு நானும் ஒங்களோட சேந்து சிரிக்கட்டும்.

**கதீஜா** : நாங்க சும்மா சிரிச்சோம்.

**காலிது** : என்னவோ இருக்குது.

**பாத்தேயி** : (மெதுவாக) நான் சொல்லிடட்டுமா ?

**காலிது** : ம்... பாத்தேயி, சொல்லு, சொல்லு

**கதீஜா** : வேண்டாம் பாத்தேயி...

**பாத்தேயி** : என்னா இவளே, சொன்னா ? அவுக கேக்கட்டும்.

**காலிது** : சொல்லிடுஉம்

**கதீஜா** : சொன்னா எனக்குப் பிடிக்காது.

**காலிது** : (சற்று யோசித்துவிட்டு இருவரையும் நோக்கி) வேண்டாம். யாரும் சொல்ல வேண்டாம். நான் சொல்றேன் . கதீசாவோட நிக்காவப் பத்தித் தானே ? (பரிகாசமாக) எத்தினி கோலாகலமாயிருக்கும் தெரியுமா அண்ணைக்கு. செண்டையும் மேளமும் எல்லாம் கொட்டி, மாப்பிள்ளை அப்பிடி ஒரு நீள உடுப்பும், ஒரு சரிகை போட்ட பெரிய தொப்பியும், சால்வையும் எல்லாம் போட்டுக்கிட்டு,மூஞ்சியில காஸ்லைட் வெளிச்சம் விள அப்பிடி வருவாரு. (கதீஜா தவிப்பைக் காட்டுகிறாள். பாத்தேயி தலை குனிந்து சிரிக்கிறாள்) அப்பொறம் மாப்பிளெ கதீசாவோட ஊட்டுள்ளார மேடை மேல உக்காருவாரு. ஊருல உள்ள அத்தினி பெரிய மனுசாளும் உத்யோகஸ்தாளும் அப்ப அங்க வந்திருப்பாவ. அப்பிடி கதீசாவ ரூமுள்ளாரக் கூட்டியார நேரமாயிரும். கதீசா களுத்திலயும் காதிலயும் கையிலயும் நெறய நகை போட்டு –இல்லாததக் கொஞ்சம் கடன் வாங்கியும் போட்டுக்கிட்டு அந்தக் கனத்துல தலயக் குனிஞ்சு ஒரு மூலையில நிப்பா. அப்ப வயசான ஒரு பொம்புள அவகிட்ட வந்து சம்மதம் கேப்பா.

**கதீஜா** : (பொறுமையிழந்து கோபத்துடன்) வேண்டாம், காலிது காக்கா. நான் சின்னம்மாகிட்டப் போயிச் சொல்லிக் குடுக்கட்டுமா? (உள்ளே போகிறாள். காலிது சிரிக்கிறான். பாத்தேயியும் சிரிக்கிறாள். அதற்குள் ஆமினாவின் கையைப் பிடித்திழுத்துக் கொண்டு கதீஜா வருகிறாள். காலிது அதைக் கவனிக்காமல் தொடர்கிறான்)

**காலிது** : மேலப்பரம்பு கோயமொய்தீனுக்கு ஒன்னக் கட்டிக் கொடுக்குறது ஒனக்கு சம்மதந்தானா? கதீசா அப்ப வெக்கத்துல நெளியுவா, அப்பத் திரும்பத் திரும்பக் கேப்பாவ. சம்மதமா, சம்மதமா, சம்மதமா? அப்பவும் சொல்ல மாட்டா. கொஞ்சமும் சொல்ல மாட்டாங்குறப்போ யாராச்சும் ஒரு பொண்ணு கதீசாவ லேசாக் கிள்ளுவா. அப்ப வலியினால கதீசா ஒரு வாட்டி 'ஹா'ண்டு சொன்னாப் போதும். ஒடனே எல்லாரும், சம்மதிச்சுட்டா, சம்மதிச்சுட்டாண்டு சத்தம் போடுவாக. அப்பிடி நிக்கா ஆயிரும்.

**ஆமினா** : (முன்னால் வந்து காலிதை நெட்டித் தள்ளியவாறு) ஆயிடும்ண்டா, ஆயிப்போடட்டும்டா. அதுக்கு நீ ஏன் சுருதிப் பெட்டி பாடற மாதிரி சொல்றே? ஒனக்குப் புடிக்கலே இல்லெ பின்னே!

**காலிது** : எதுக்காவ உம்மா இப்பிடி சம்மதம் கேக்குறாவ?

**ஆமினா** : சம்மதத்துக்காவத்தான், பொண்ணோட சம்மதம் இல்லாம ஒண்ணும் சரியில்லே இல்லியா?

**காலிது** : பந்தப் போட்டு சோறும் கறியும் வச்சு ஆளுக வந்து எல்லாம் ஆன பொறவு எதுக்காவ ஒரு சம்மதம் கேக்கணும்?

**ஆமினா** : அதெல்லாம் போதும். நீ நல்லபடியாப் போயிக் கேட்டுக்கோ. போதுமா?

**காலிது** : நான் கேப்பேன்.

**ஆமினா** : அப்பிடி நல்லபடியா சம்மதம் கேக்காம நாங்க யாரும் இங்க காலந்தள்ளலியோ?

**காலிது** : ஆமா, நல்லா காலந்தள்ளுறிய. ஒங்க தலயிலயெல்லாம் முளுசும் இருட்டுத்தான்.

**ஆமினா** : இருட்டுண்டா ரொம்ப நல்லது. எனக்கு ஒன்னோட வம்புக்கு நிக்க முடியாது (போகிறாள்)

**காலிது** : பாத்தேய்! (சற்று யோசித்து கதீஜாவிடம்) இல்லை, பாத்தேய் இல்லை, ஃபாத்திமாங்கிறதுதான் சரியான பேரு. இனிமே அப்பிடியே கூப்புடலாம். என்னா கதீசா?

**கதீஜா** : என்னால முடியாது–பாத்திமாண்டெல்லாம் கூப்புட, நான் பாத்தேய்ண்டுதான் கூப்புடுவேன்.

**காலிது** : பாத்தேய்ண்டு கூப்புட்டா கேக்காதே ஃபாத்திமா.

**கதீஜா** : கேக்க வேண்டாம்.

**காலிது** : கொண்ணாலும் கேக்காதே

**ஹஸன்** : (வெளியிலிருந்து கூப்பிடுகிறான்) கதீசா, கதீசா! (நுழைகிறான்) பீடை, வாப்பா அந்தா பொண்ணக் கூப்புடுதாவ,

ஒம் முதுகு மத்தளமாயிரப் போவுது இப்ப, பெரிய சங்கடந்தான் ஒங்காரியம். வாப்பா வார சமயத்துல அவ இங்கிட்டு வந்துருவா.

(கதீஜா பயத்தை வெளிப்படுத்துகிறாள்)

**காலிது** : என்னா, அவ இங்கிட்டு வரக் கூடாதா ?

**ஹஸன்** : அப்பிடியாப்பட்ட முஸீபத் இல்லெ நீங்க உண்டாக்கி வச்சிருக்கீக.

**கதீஜா** : இப்ப என்னா செய்யுறது காக்கா ?

**ஹஸன்** : இப்ப என்னா செய்யுறது காக்கா. நானொரு வேலை சொல்லித் தாரேன், சீக்கிரமா பொறவாச வளியா ஒளிஞ்சு நொளஞ்சு அங்கிட்டுப் போயிரு வாப்பாகிட்ட. இங்க இல்லைண்டு நான் சொல்லிக்கிடறேன்.

(கதீஜா உள்ளேயும் ஹஸன் வெளியேயும் போகிறார்கள்)

**ஆமினா** : (ஹஸனின் குரல் கேட்டு வந்து) பாத்தியா சைத்தானே, பாத்தியா, கண்ணயும் மூக்கயும் தெறந்து முளிச்சுப் பாரு. ஒன் ஒவ்வொரு காரியத்துனாலயும் இந்தக் குடும்பத்துக்காரவளும், ஊர்க்காரவளும் நம்மோட பெணங்குவாக. எனக்கு இத்தயொண்ணும் பாக்க முடியாது, என் பத்ரீங்களே! ஒனக்குக் கிறுக்குடோ, கிறுக்கு. (உள்ளே போகிறாள். காலிது பாத்தேயியைப் பார்க்கிறான். அவள் சோகத்துடன் தலைகுனிந்து கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கிறாள்)

**காலிது** : (சாந்தமாக) பாத்தேய், இப்பிடிப் பாரு ... காதர் குட்டி மொதலாளி மகனோட என்ன நடந்துச்சுண்டு எனக்குத் தெரியாது. தெருவுல சுத்திக்கிட்டிருந்த போதும் என்ன நடந்துச்சுண்டு நான் கேக்கலை, என்ன நடந்திருந்தாலும் எனக்குக் கொஞ்சமும் கவலையில்லை. ஆனா ஊர்க்காரவுக எல்லாம் பேசுவாக, அதக் கேக்கவும் சகிக்கவும் முடியணும். என் உம்மா ஏதாச்சும் இப்பிடிச் சொல்லிக் கிட்டிருப்பா, நீ இங்க இருக்கத் தீர்மானிச்சுட்டேண்டா அதக் கேட்டு வருத்தப் பட்டுக்கிட்டுருக்கக் கூடாது. என் உம்மா அப்பிடித்தாண்டு அப்பிடியே நெனச்சுக்கிட்டாப் போதும். (பாத்தேய் அழுகிறாள்) நீ அந்தப் பேப்பர இப்பிடி எடுத்துட்டுவா, இல்லாட்டா என்ன பேப்பர் ? அதெல்லாம் ஒனக்குத் தெரியுமா ? ஒன்னக் கொஞ்சம் படிக்க வைக்கணும். (உள்ளே போகிறாள்)

**(திரை)**

## காட்சி நான்கு

### *நல்ல வழியில் நடப்பதில்லை*

*(முதலாளியின் வீடு, மேஜை மேல் விளக்கில்லை, விசிறியால் வீசியவாறு முதலாளி நடக்கிறார். அராபிய மலையாளத்திலுள்ள ஒரு பாட்டுப் புத்தகத்துடன் கதீஜா நாற்காலியின் பின்புறம் நிற்கிறாள்)*

**முதலாளி :** *பாடுமூ, நான் அத ஒனக்காக வாங்கினேன்.*

**கதீஜா :** *இதோட மெட்டு என்னா வாப்பா ?*

**முதலாளி :** *ஒனக்குத் தெரியாதா ? வடக்கத்திப் பொண்ணுங்களோட கும்மிப் பாட்டில்லையாடி, ஒளக்கர்கானோட கல்யாணத்துல நீ கேட்டதில்லியா.*

**கதீஜா :** *எனக்கு நெனப்பில்லெ. நீங்க கொஞ்சம் பாடிக்காட்டுங்கோ.*

**முதலாளி :** *நானா ? எதுக்கு மவளே வாப்பாவப் பாட வைக்கிறே ?*

**கதீஜா :** *ஒரு வரி பாடினா போதும் வாப்பா.*

**முதலாளி :** *நீ முன்னாடியே அடிச்ச கம்பையே சொறிகிற ஜாதி (அருகில் சென்று பாட்டுப் புஸ்தகத்தைச் சற்றுக் கூர்ந்து நோக்கி, குரலை சரிப்படுத்திக் கொண்டு பாடுகிறார்)*

*குலு குலு மச்சம் பெண்ணுண்டோ*
*குஞ்ஞாலி மச்சம் பெண்ணுண்டோ ...*

*அதுதாண்டி மெட்டு அப்படியே சொல்லிப்போடு.*

**கதீஜா :** *(கவனத்துடன் நோக்கி விட்டுப் பாடுகிறாள்)*

*மயிரிளையை ஏளாய்ப் பிளந்துவிட்டு*
*அதனால் பாலம் கட்டிவிட்டு*
*அதில் நடக்கணுமென்றல்லவோ*
*சொல்றீங்க, இறந்த பின்னே,*

**முதலாளி** : அப்பிடிச் சொல்றதுக்கு என்னா அர்த்தமெண்டு தெரியுமா ஒனக்கு? மௌத் ஆன பொறவு நாம மேலோகத்துக்குப் போனா கெடைக்குற தண்டனகளப் பத்திச் சொல்றது. முத்து நபியோட மவ பாத்திமா உம்மா பீவி, ரளியல்லாஹு அன்ஹா! அவுக முடியோட எளையை ஏளு கீத்தாக்கி கீறப்போட்டு அதோட ஒரு எளையால நரகத்தும் மேல ஒரு பாலம் கெட்டுவாக. அதும் பேருதான் ஸிராத் பாலம். அதும் மேலா நாம நடக்கோணும். மவளே .... பாடு.

**கதீஜா** : கீளே எரியுற தீயாக்கும்.

ஏளுபத்தாயிரம் சூடாக்கும்.

தீயில தீண்டுற பாம்புக இருக்கே.

தீண்டியிளுத்து வெளையாடுதுங்க.

**முதலாளி** : இப்பிடிச் சொல்றது ஜஹனம் என்கிற நரகத்தப் பத்தி. ஸிராத் பாலத்துங்கீள. பாலத்தக் கடந்து போயிட்டா–கடக்கணுமுண்டா நாம புண்ணியம் செஞ்சவங்களா இருக்கோணும்–அப்படிண்டா நாம சொர்க்கத்துக்குப் போயிருவோம். அங்க பொறவு குஷிதான். காபிரிச்சிங்க புளு துடிக்குறாப்புல நரகத்துல துடிப்பாளுவ மவளே. நரகத்துத் தீயோட மிச்சந்தான் நாம இங்க பாக்குற தீயி. நரகத்துத் தீயி எளுபதினாயிரம் மடங்கு சூடாயிருக்கும் மவளே. அந்தத் தீயில கடிக்கிற பாம்புங்க இருக்குண்டு சொல்லுதாவ. முனாபீங்களும் அங்க காத்துக்கிட்டு வெளயாடிட்டிருக்கும் ... அப்புறம் பாக்கி.

**கதீஜா** : அடர்ந்த தீயிலே கரியாகிறார்.

தொண்டை வரண்டு அளுகிறார்.

கொதிக்கும் வெந்நீரெடுத்துத்

தொண்டையில் ஊற்றுகிறார்களாமே.

**முதலாளி** : அப்பிடி எல்லாரையும் நரகத்துல தள்ளிட்டா பொறவு நாம அங்கிட்டு கெடந்து பொரிஞ்சு போவோம். அல்லா நம்ம எல்லாரையும் தொட்டுக் காப்பாத்தட்டும். கொடுமையான தாகத்துனால நாம அப்ப கூப்புடுவோம். "எங்களுக்குத் தண்ணி கொடுங்கோ" அப்பிடிக் கூப்புடுறபோது நரகத்து பூதகணம் நம்பளுக்கு பெரிய சாடியில தண்ணி கொண்டு வருவாக. நாம ஆசயோட தொண்டயத் தொறந்தா காச்சின ஈயம் உருக்கு மாதிரியா கொதிக்கிற வெந்நீர நம்ம தொண்டையுள்ளார விடுவாக. அப்ப நம்ம ஒதடும் சிரிப்பும் ஒண்ணாயிப்புடும் மவளே. ரப்பே நீ காப்பாத்து... இதுக்குப் பொறவு என்னா சொல்லியிருக்குது, பாடு, பாட்டு எளுதினவன் பெரியவனாக்கும்டி.

**கதீஜா** : தலமயிரக் காட்டி நடந்தாலே ... (நிறுத்துகிறாள்)

**முதலாளி :** ஏன் அங்க நிறுத்திப்பிட்டே. அங்க ஏதாவது கல்லு கெடக்கோ ? பாடு மவளே சத்தமா.

**கதீஜா :** (சற்றுபயத்துடன்)

தலமயிரக் காட்டி நடந்தாலே ...
பெண்களுக்கொரு ஆபத்து.

**முதலாளி :** (இடைமறித்து) கேளு, கேளு, ஒன்னப் போலச் சின்னப் பொண்ணுங்களுக்காவ.

**கதீஜா :** தலமயிரக் காட்டி நடந்தாலே
பெண்களுக்கொரு ஆபத்து.
தீயாலான தலத்துணி போட்டு.
நடக்கணும் அவங்க கதிகேடு.

**முதலாளி :** கதிகேடு, (சற்றுக் கோபத்துடன்) இன்னும் படிக்கிறியோ ? வளயக்காரன் வந்தா அவன் முன்னால; மீன்காரன் வந்தா அவன் முன்னால. (முழங்கை வரை கை நீட்டிக் காட்டி) இத்தினி நீட்டிக்கிட்டுல்லெ அந்தப் பொம்புளங்க போறாவ. (பாவம் மாற்றி) மவளே, நம்ம பொண்ணுங்க மயிர் எளயக் கூட வேத்து ஆம்புள பாக்கப்புடாது. பாத்தா--பாத்துட்டா நாம தீயாலான தலத்துணியப் போட்டுக்கிட்டு நடக்க வேண்டி வரும். அப்ப நம்ம தலைச்சோறு ஒலைநீரப் போலக் கொதிக்கும் மவளே... படிம்மா, போக்கிரி, படி. நீ நேர்வளியில நடந்தா, நீ நல்லது செஞ்சா அதுல நமக்கும் கொஞ்சம் கெடைக்கும். (உள்ளே போகிறார், கதீஜா சிந்தனையிலாழ்ந்து விடுகிறாள். சற்று நேரத்திற்குப் பின் முதலாளி ஒரு பாத்திரத்தில் நீருடன் திரும்பி வருகிறார். கதீஜாவைக் கூர்ந்து பார்க்கிறார்.)

**முதலாளி :** என்னாடி நீ. தீப்பந்தம் கண்ட பெருச்சாளியப் போல நிக்கிறே, பயந்துட்டியா ?

**கதீஜா :** (சந்தேகத்துடன்) இல்லெ, வாப்பா!

**முதலாளி :** என்னா மவளே ? (கவனிக்கிறார்)

**கதீஜா :** இந்தத் தீயோட சூட்டுல அந்த மயிராலான பாலம் கரிஞ்சு போயிராதோ ?

**முதலாளி :** (பதைபதைப்பின் உச்சத்தில்) நிறுத்து, நிறுத்து, நிறுத்து, சைத்தானே நிறுத்து, எங்கையில பாத்திரமும் தண்ணியும் இருக்கு தெரியுமா. நாம அப்பிடிக் கேக்கப் புடாது. காலா காலமா அப்பிடி நடந்துக்கிட்டு வருது. நாம கேக்கக் கூடாத எத்தினியோ விசயங்கள் இருக்கு. அதெல்லாம் அல்லாவோட குதரத்துல அடங்குற விசயங்க ...எனக்கு வேர்த்தும் போச்சு. பொண்ணு கூடாத கேள்வியக் கேக்குறியோ ? நீ அந்தப் பாட்டப் படிச்சுக்கடி. ம். சொன்னபடி கேளு. (வெளியே போகிறார். மறுபுறத்திலிருந்து ஹஸன் நுழைந்து பயத்துடன் சுற்றுமுற்றும்

நோக்கிவிட்டு கதீஜாவினருகே சென்று அந்தப் பாட்டுப் புத்தகத்தைப் பார்த்து அதைப் பாட முயற்சிக்கிறான்)

**ஹஸன்** : (பாடுவதில்லை; சொல்கிறான்) தலமயிர் காட்டி நடந்தாலே–பெண்களுக்கொரு ஆபத்து–தீயாலான தலத்துணி போட்டு–நடக்கணும் அவங்க கதிகேடு. (கதீஜாவின் தலைத் துணியை எடுத்துக் கொண்டு நகர்ந்து நிற்கிறான்)

**கதீஜா** : (திடுக்கிட்டு) எந்துணி. எந்துணி. எந்துணிய இப்பிடிக் கொடுத்துரு சின்னக்காக்கா.

**ஹஸன்** : தலயில தீயாலான தலத்துணியப் போடட்டும்.

(கதீஜா கையை நீட்டிக் கொண்டு போகும்போது ஹஸன் விலகி விளையாடுகிறான்)

**கதீஜா** : நான் வாப்பாகிட்ட சொல்லிக் குடுத்துரட்டுமா ? நீங்க இதுவரை எங்கிட்டு இருந்தீங்கண்டும் எனக்குத் தெரியும். நான் இப்பவே வாப்பாகிட்ட சொல்லிக் குடுக்கட்டா ?

**ஹஸன்** : சொல்லிக்க

**கதீஜா** : (வெளியே போவது போல் பாவனை செய்தவாறு) வாப்பா! (கூப்பிடுகிறாள்)

**ஹஸன்** : (சொல்லிவிடுவாளென்று பயந்து) ந்தா பாரு. (அருகில் ஓடிச்சென்று தலைத்துணியை நீட்டியவாறு) நீ தேவையில்லாத வம்பொண்ணும் உண்டாக்காதே. ந்தா ஒந் துணி (கொடுக்கிறான். கதீஜா தலையில் போட்டுக் கொள்கிறாள்) யாருக்கும் தெரியாமல்லே நான் போனேன். ஒனக்கு எப்பிடித் தெரிஞ்சுது ?

**கதீஜா** : எங்க போனீங்க ?

**ஹஸன்** : அப்ப ஒனக்குத் தெரியாதா ? பொய் சொன்னேயில்லே ? எதுக்காவ ?

**கதீஜா** : ஆமா! வாப்பா சொன்னாகல்லா ? வாப்பாக்குத் தெரியும் எங்கிட்டு போனீகண்டு.

**ஹஸன்** : ஒருத்தருக்கும் தெரியாது. சும்மா எதுனா சொல்லி என்ன பயமுறுத்த வேண்டாம். எப்பவாச்சும்தானே இதுக்கெல்லாம் சந்தர்ப்பம் கெடைக்குது.

**கதீஜா** : ஆட்டம் பாக்கத்தானே ? ஆண்டவன் சத்யமா நான் இத வாப்பாகிட்ட சொல்லிக்குடுப்பேன்.

**ஹஸன்** : கதீசா! நீ ஏடாகூடம் பண்ணிராதே. எந்தலை போயிரும். (நாற்காலியிலமர்கிறான்)

**கதீஜா** : அப்படிண்டா நீங்க அந்த ஆட்டத்தோட கதயெ எனக்குச் சொல்லுவியளா ? அப்ப நான் வாப்பாகிட்ட சொல்ல மாட்டேன்.

**ஹஸன்** : சொல்றேன் பொண்ணே, சொல்றேன், வாப்பா கடைக்குப் போன பொறவு சொல்றேன். நாசமாப் போட்டும்! எத்தினிவாட்டி வேணுண்டாலும் நான் சொல்றேன். சரிதானே. (கதீஜா புன்சிரிப்புச் சிரிக்கிறாள்)

**கதீஜா** : வந்து, எப்பிடி சின்னக் காக்கா இந்த சினிமாவுல கத வருது. ஆடுறது உயிர் உள்ளவங்களா. பெரிய அதிசயம் தான்.

**ஹஸன்** : என்னால முடியாது இனிமெ சொல்லிக் குடுக்க. ஒண்ணு ரெண்டு வாட்டி நான் ஒனக்கு சொல்லியிருக் கேனில்லே, இனிமெ நீயே போயி பாத்துக்க. அதுக்கு நான் ஒரு காரியமும் சொல்லித் தாரேன். ஒரு சினிமா காண்பிச்சுத் தரது வரை அப்பிடியே பட்டினி கெட. நீராகார விரதம் அப்ப ...

**கதீஜா** : வாப்பாகிட்டல்லெ அதச் சொல்லணும். பட்டினி கிடக்க வேண்டி வராது. பெரியவரு அப்பிடியே கொண்ணு போட்டுருவாக.

**ஹஸன்** : இல்லாட்டாலும் கதீசா, நம்மள்ள பொம்புளங்களுக்கு ஒரு கஸ்டம். இந்தச் சினிமாவும் கினிமாவும் பாத்தா சீக்கிரம் கெட்டுப் போயிருவாக. சுருக்கமாச் சொன்னா, இப்ப வாப்பா பாத்து வச்சுருக்கிற மாப்பிள்ளையிருக்காரே, மைசூர் கடை மொதலாளி, அவன் கூட விட்டுருவான்.

**கதீஜா** : இல்லெ காக்கா, இந்த சினிமாண்றது அத்தினி மோசமா?

**ஹஸன்** : (எழுந்து குரலைத் தணித்து) சினிமா மோசமில்லெ பெண்ணே, 'அது கூடாது, தப்பு'ண்டெல்லாம் சொல்லித் திரியுற ஆளுங்க இருக்காவல்லெ, தாடிக்காரவகளும் தலக்கெட்டுக் காரவகளும்! அவுக தான் மோசம்!

**கதீஜா** : இனிமெ எந்தக் காலத்துல காக்கா நாமெல்லாம் நல்லாறதோ?

(முதலாளி சப்தமின்றி காலிப் பாத்திரத்துடன் நுழைகிறார்.. ஹஸன் பயந்து தொப்பியை சரிசெய்துகொண்டு விலகி நிற்கிறான். கதீஜா பாட்டுப் புத்தகத்தைத் திறந்து தலையைக் குனிந்து கொள்கிறாள்)

**முதலாளி** : யாரு இங்கிட்டுமிருந்து கதையளந்துட்டுருக்கறது? உம்? (ஹஸனைப் பார்த்து) நீங்க தானா. இந்தப் பாத்திரத்தை வாங்கி உள்ள வையி. (ஹஸன் பாத்திரத்தை வாங்கிக் கொண்டு உள்ளே போகிறான்) அப்பொறம் இங்கிட்டு வா (ஹஸன் வருகிறான்). யாரு இப்பம் நல்லாவணும்? யாரு நல்லாவணுண்டு கதீசா கேட்டா? நான் வாரப்ப கேட்டுதுல்லா? (ஹஸனும் கதீஜாவும் பயத்துடன் பதுங்கி நிற்கிறார்கள். ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறார்கள். ஹஸனிடம்) யாரு நல்லாலணும்டா,

சொல்லு, (கதீஜாவிடம்) யாருடி ஒனக்கு நல்லாவனும் ? நாம நல்லாக்கிப்புடலாமே! (யாரும் பதில் கூறாததினால்) நீங்க ரெண்டு பேரும் சொல்ல மாட்டிய. ஒங்களுக்கு நம்பளத் தெரியாது. (ஹஸனிடம்) யாருரா ? (மேஜைமேலிருந்து விசிறியையெடுத்துத் தலைகீழாகப் பிடிக்கிறார். அடிக்கப் போகும் பாவனையில்) சொல்லிரு!

**ஹஸன்** : (பயத்துடன்) அவுக நல்லாவனும்ண்டு ...

**முதலாளி** : அவுகண்டா ? சொல்லிரு மரியாதையா சைத்தானே!

**ஹஸன்** : கதீசா ... கதசா ...

(கதீஜா பயத்துடன் ஹஸனைப் பார்க்கிறாள்)

**முதலாளி** : ம், சொல்லிப்புடு.

**ஹஸன்** : சித்தப்பா ஊட்டு வெசயம் கேட்டுப்புட்டு சொல்லிக் கிட்டுருந்தோம்.

**முதலாளி** : இத மொல்லயே சொல்ல முடியலியா? (பெருமூச்சு விட்டு ஆசுவாசப் படுத்திக் கொள்கிறார்) இதுக்கா பூனைய கோணியில போட்டுக் கட்டி வெளயாடினீக ? நாயுங்க. (நாற்காலி யில் சென்றமர்ந்து கொண்டு) அது சரிதான். சரிதான். அவுக நல்லாவ மாட்டாவ, தேவடியாப் பொண்ணுங்க குடியிருப்பு அங்க. (கதீஜாவிடம்) ஒங்கிட்ட நான் இன்னொண்ணும் சொல்லணும். இன்னா சொல்லணும் ? நீ அந்த ஊட்டுப் படிய மிதிக்காதே. நான் கால முறிச்சுப் போடுவேன். கண்ணு தப்பினா நீ அங்கிட்டு கொடியேத்திருவே. அது எனக்குத் தெரியும். (ஹஸனிடம்) போ. போயி அங்கிட்டுருந்து ஒளக்கர்கான இங்கிட்டு வரச்சொல்லு (ஹஸன் போகிறான்) மவளே!

**கதீஜா** : இன்னா வாப்பா ?

**முதலாளி** : இப்பிடி வா மவளே, நீ ஓதுறியா இப்ப ? எத்தினி அத்தியாயம் ஆயிருக்கு ?

**கதீஜா** : ஒண்ணு ஆயிருக்குது. ரெண்டாவத ஓதிக்கிட்டிருக்கேன்.

**முதலாளி** : ஒனக்கு இப்ப ஆதுறதொண்ணுலயும் அத்தினி சைஸ் போதாதுண்டு தோணுது. அதெல்லாம் போதாது. நோம்பு புடிச்சா, நிஸ்காரும் ஓதுறதும் இல்லாம வேற என்ன சொவம். ரம்ஜான் மாசத்துல எத்தினியோ நல்ல வளியில நடந்துக்க வச்சதில்லியா? (மகளை நன்றாகக் கவனித்துப் பார்த்து) நீ நோம்பு புடிச்சு, நோம்பு புடிச்சு உப்பு வச்ச கெடங்கு மாதிரி ஆயிட்டிருக்கியே மவளே. (உட்புறமாகத் தலையைக் குனிந்து கடிகாரத்தைக் கூர்ந்து நோக்கி) இல்லெ, மவளே! இன்னும் அரமணி நேரம்தான் இருக்கு பாங்கு அளைக்க. அது வரயிலும் கொஞ்சம் பொறுத்துக்க. (ஒளக்கர் கோயா நுழைகிறான். கீழே

பார்த்தவாறே ஒரு நடை). நம்ம மூத்த கொரங்கு! டேய், நீ இன்னாடா கீள பாத்துக்கிட்டு நடக்கே ? பொறந்ததிலருந்தே ஒன் நடை இப்பிடித்தானே ! இல்லெ தெரியாமத்தான் கேக்கேன். ஏதாச்சும் கீள விளுந்து போச்சுண்டா நாமளும் தேடலாமில்லெ. டேய், நாளு நெருங்கி வந்து தலமேல ஏறிட்டுருக்குது. ஒண்ணுல்லெ, ரெண்டு வேலை. கல்யாணம் களிஞ்ச ஒடனே எனக்குப் போகவேண்டாமா.

**ஔக்கர்** : கல்யாணமும் களியும். நீங்களும் போவீக அதுக்கென்ன ? ஒரு தடங்கலும் வரப்போறதில்லெ.

**முதலாளி** : அது எனக்கும் தெரியாதா ? ஓம் பேச்சக் கேக்குறப்போ எனக்கு ஒத்தத் தலவலி புடிக்குது.

**ஔக்கர்** : அதவிடப் பெரிய வெசயம் இருக்கு இங்க. மனுஸன் தலய நிமிந்துக்கிட்டு நடக்க முடியாம ஆயிட்டுருக்குது. காலீது அந்தப் பொண்ண ஊட்டுல உட்டுவச்சுருக்கானில்லெ, எத்தினி அவமானம் அது. போதாததுக்கு (அருகில் சென்று குரலைத் தணித்து) அவளுக்கு இப்ப வயித்திலயும் இருக்குண்டு சொல்லிக்கிடுதாவ.

**முதலாளி** : (இடிந்து போய்) லாஹௌல ஒலாகுவத்த இல்லாபில்லா! (பரபரப்புடன்) சரிதான். எங்கே ? ஹஸனெங்கே ? (கூப்பிடுகிறார்) ஹஸனே, ஹஸனே! (திரும்பிப் பார்க்கையில் கதீஜாவைக் காண்கிறார்) ம், ம், ம்! நீ இங்க நிண்ணுட்டுருக்கே. அடீ, நீ கேக்கக் கூடாததுண்டா நீ உள்ளார போயிரப் புடாதா. (ஔக்கரை நோக்கி) அவன் அதுக்கும் மேல. (இடது கையில் வலது கையால் தட்டி மெதுவாக, கோபத்தில்) வயத்துல இருக்கு...

**கதீஜா** : இதெல்லாம் நான் கேக்கக் கூடாததா வாப்பா ?

**முதலாளி** : ம்

**கதீஜா** : அந்தப் பாத்தேயிய எனக்கு ரொம்பப் பிடிச்சுது. நல்ல கொணக்காரி.

**முதலாளி** : (குதித்தெழுந்து அருகில் சென்று) ஓம் வாய். ஒரு ஒத வப்பேன்.

**ஔக்கர்** : ஓம் முன்னால தானே நானும் வாப்பாவும் இத்தினிநேரம் தொண்டயக் கிளிச்சுக் கிட்டுருந்ததோம். அதெல்லாம் இங்கிலீஸா ?

**முதலாளி** : இங்கிலீஸா ?

**ஔக்கர்** : ஹமாரே!

**முத்லாளி** : ஹமாரே, (ஹஸன் நுழைகிறான்) போயி ஒஞ் சித்தப்பாகிட்ட இங்கிட்டு வரச்சொல்லு. சீக்கிரம் வரச் சொல்லு. அல்லா அனுமதியோட நான் சரி பண்ணிப்போடறேன்.

(ஹஸன் போகிறான். கதீஜாவிடம்) ஒங்கிட்ட நான் சொன்னது இன்னா ? அந்த ஊட்டுப் படிய இனிமெ மிதிக்கப் புடாது. அந்த மாதிரி நடத்துக்க. அதுக்கு அந்தப் பக்கம் இந்தப் பக்கம் நீ பாக்க வேண்டியதில்லெ.

**கதீஜா** : வாப்பாவும் பெரிய காக்காவும் சொல்றது எனக்குப் புரியலெ.

**ஔக்கர்** : புரியலெ, அதுக்குப் புத்தி வேண்டாமா ?

**கதீஜா** : எனக்குப் புத்தி கெடயாது. (உட்புறமாகப் பாய்கிறாள்)

**முதலாளி** : எப்பிடிப் பாயுறா! நாக்க அறுத்துப் போட்டுருவேன். சைத்தானே ! பேசாம அப்பிடிக் கெடடி. பொண்ணு துள்ளிக் குதிக்கிறியோ ? ரப்பர் பந்த தரையில போட்ட மாதிரி! எல்லாத்தயும் நான் சரி பண்ணிடுறேன். (அமர்கிறார்)

**ஔக்கர்** : இதுக்கெல்லாம் இந்த காலிதத்தான் சொல்லணும். அவமானம் முளுசும் ஒங்களுக்கும் இந்தக் குடும்பத்துக்குந்தான். இப்பவே நாலுபேரு கூடுற எடத்துல பேசுற விசயம் இன்னா தெரியுமா ? நீங்களே கொஞ்சம் போயிக் கேட்டுப் பாருங்கோ.

**முதலாளி** : எனக்கொரு மண்ணும் கேக்க வேண்டாண்டா. எல்லாம் எனக்குத் தெரியும். நீங்கள்ளாம் என்னவெல்லாமோ நெனைக்கிறதுக்கு முன்னாடி அல்லா அனுமதியோட நான் அதச் செய்திருவேன் ம் ... நீ அந்தப் பக்கம் போ கடைக்கு. அங்க அஸனாரு மட்டுந்தான் இருக்கான். உஸ்மான நான் பாத்துக்கிடறேன்.

**ஔக்கர்** : (வீரத்தைக் காட்டி முன்னால் வந்து) ஒங்களுக்கு முடியாதுண்டா சொல்லிருங்கோ, நான் அவுகள நல்லபடியா அடக்கிக்கிடறேன்.

**முதலாளி** : (இளப்பமாக) நீங்க அப்பிடிப் போங்கோ கோயா. அதுக்கு நாம செத்துட்டமா ? அடக்குறதுக்கு வந்துட்டாவ. நீங்க அப்பிடிப் போங்கோ. (அவமானத்துடன் ஔக்கர் வெளியே போகிறான்) நமக்கே இங்கே வேர்த்துப் போவுது. ஹூம் (எழுந்து நடக்கிறார்; வாசலைப் பார்க்கிறார்) எங்கே இந்த உஸ்மான் ? ஙே! .... அவன் வரமாட்டான். வர பயமாயிருக்கும். ஆடு திருடின கள்ளன மாதிரித்தானே? இல்லாட்டாலும் நம்ம சின்ன ஹமாரிட்டல்லா சொல்லியனுப்பிச்சிருக்கோம், ... (வருவதைக் கண்டு) ஹா ! வாங்க, ஒங்களத்தான். அப்பிடி வாராவ ஆடி அசஞ்சு. (ஹஸன் பயத்துடன் பிரவேசிக்கிறான்) ஒங்களக் காத்து வாங்கவா அனுப்பினாவ ? எங்கடா உஸ்மான் சித்தப்பா ?

**ஹஸன்** : சித்தப்பா அங்க இல்லெ, தொளப் போயிருக்காவ.

**முதலாளி** : அவனுக்குத் தொளுகை ஒண்ணுதான் வேணுமாக்கும். வேறெல்லாம் நெறஞ்சிருக்குல்லெ ? வந்தா இங்கிட்டு வரச் சொன்னியா ?

**ஹஸன் :** ம்!

**முதலாளி :** ஆருட்ட சொன்னே ?

**ஹஸன் :** பாத்தேயி கிட்ட

**முதலாளி :** (அருகில் சென்று அடிக்கக் கையோங்கி) டேய், நீ அவகிட்ட பேச்சு வேற வச்சுக்கிட்டிருக்கியா? அவ மாயக்காரியாக்கும். அவனக் கெடுத்ததப் போல ஒன்னயும் அவ கெடுத்துருவா. அதுதான் ஒனக்கு இத்தினி நேரம் ஆச்சுல்லெ? டேய், எனக்கு ஒன்ன நல்லாத் தெரியும், (ஹஸன் உட்புறம் போக முயல்கிறான். அப்போது அவன் துணியைக் கீழே இறக்கி உடுத்திருப்பதைக் கண்டு) இப்பிடி வாடா, இப்பிடி முன்னாடி வந்து நில்லுடா (ஹஸன் பணிகிறான்) ஒங்கிட்ட நான் எத்தினி வாட்டி சொல்லியிருக்கேண்டா, ஆபூஜஹள் துணி உடுக்கிற மாதிரி உடுக்காதேண்டு. ஏத்தும் ...

(ஹஸன் துணியை கணுக்காலுக்கு மேலே ஏற்றி உடுத்துகிறான்) ஒன்ன அப்பிடி உட்டுட்டா முடியாதுல்லே ? எனக்கு ஒங்கிட்ட கொஞ்சம் பேசணும். அங்க நில்லு. நீ எனக்கு ஆரு ?

**ஹஸன் :** மவன்

**முதலாளி :** ஏம் மவன். நீ நல்லாயிருக்கலைண்டா யாருக்குடா கஸ்டம் ?

**ஹஸன் :** எனக்குத் தான்

**முதலாளி :** யாருக்கு ?

**ஹஸன் :** எனக்குத் தான் வாப்பா.

**முதலாளி :** அதுக்கு அல்லாகிட்ட யாருடா பதில் சொல்ல வேண்டி வரும் ?

**ஹஸன் :** நான் சொல்ல வேண்டி வரும், வாப்பா.

**முதலாளி :** (கோபம் கொள்கிறார்) ஒங்கிட்ட அதக் கேக்கலை ஹஸன்கோயா. ஒங்காரியத்துக்கு அல்லாகிட்ட நான் முகாபு சொல்ல வேண்டி வருமில்லெ. (ஹஸன் அடிக்கு பயந்து அதிகமாகப் பதுங்குகிறான்) டேய், எத்தினி நாளாச்சு நீ பள்ளிக்குப் போயி ?

**ஹஸன் :** நான் தெனம் போறேன் வாப்பா.

**முதலாளி :** நான் பாக்குறதில்லெ, அங்கிட்டு யாரும் ஒன்னப் பாத்ததாவும் சொல்றதில்லெ.நீங்கல்லாம் 'ஜின்னா' 'மலக்'கா? நான் ஒங்கப்பனாயிட்டனே.

**ஹஸன் :** (மிகவும் பயத்துடன் பின்னால் ஓடத் தயாராக நின்று கொண்டு) மத்தவங்க பாக்குறதுக்காக தொளுகை செய்யுற

வங்களுக்குத்தான் நாசம்ண்டு அல்லா சொல்லியிருக்காவ. (பின் புறம் நகர்கிறான்)

**முதலாளி :** (ஓடி அருகில் சென்று அடிக்க ஓங்குகிறார்) வேண் டாததெல்லாம் படிச்சிட்டியா ? சைத்தானே ! (திரும்பி முன்னால் நடக்கிறார். அந்த சந்தர்ப்பத்தில் ஹஸன் உள்ளே ஓடுகிறான்) ஒன்னப்போல எத்தினிபேர நான் பாத்துருக்கேன் ! ஒரு சுருட்டுக்கு வாராத நீ. ஒரு அடி வச்சேனுண்டா ... (திரும்பி அடிக்கவே கிளம்புகிறார். ஹஸனைக் காணாததினால் வெறி பிடித்து) எங்கேயவன் ? கைச்சா, அந்தப் பக்கத்து வாசலை அடை. அவன அப்பிடி விட்டா நடக்காதுல்லெ. (உட்புறமாக ஓடுகிறார்)

**( திரை )**

## காட்சி ஐந்து

### *தின்ன பிற்பாடு துப்ப முடியாது*

*(உஸ்மான் வீடு. பாத்தேயி எழுதிக் கொண்டிருக்கிறாள் புத்தகத்தில். மேஜைமேல் ஸ்லேட்டும் புத்தங்களுமிருக்கின்றன. கதீஜா ஒரு (முஸ்லீம்) ஸபீனப் பாடலுடன் பிரவேசிக்கிறாள்; பாடியவாறே)*

**கதீஜா** : *தாமரைப் பூங்கா வனத்தில் தங்கிருப்பவளே*
*பஞ்சவர்ணப் பைங்கிளியின் பலவண்ணங்*
*கொண்டவளே*

*பாத்தேயக்கா, இந்தப் பாட்டு ஒங்களுக்குத் தெரியுமா? பாருங்க, நல்ல பாட்டு (பாத்தேயி கவனிக்காததைப் புரிந்து கொண்டு) இன்னா எளுதறீங்க ? ஹே ! இது நல்ல ரசமான பாட்டு. கைச்சாத்தாவுக்கு நல்லாப் பாடத் தெரியும். என்னா... என்னா நீங்க பேச மாட்டேங்கறிய. பாத்தேயக்கா, என்னா ஒங்களுக்குப் பேச முடியாதா ? ஒங்க நாக்குல ஏதாச்சும் புண்ணா? (அப்படியும் கேட்காமலிருப்பதால்) அப்ப நான் போறேன். (திரும்பி உட்புறம் நடக்க முயல்கையில் காலிது நுழைகிறான்)*

**காலிது** : *யாரது கதீசாவா ? (பாத்தேயி எழுந்து நிற்பதைக் கண்டு) நீ ஒக்காந்து எளுதிக்க (பாத்தேயி அமர்கிறாள்) என்னா கதீசா ?*

**கதீஜா** : *இதொரு பாட்டு காக்கா.*

**காலிது** : *என்னா பாட்டு ?*

**கதீஜா** : *கைச்சாத்தா பாடுற பாட்டு.*

**காலிது** : *(கையில் வாங்குகிறான்) எப்பிடி இதப் பாடுகிறது ? கொஞ்சம் பாடு.*

**கதீஜா** : *(பாடுகிறாள்)*

*தாமரைப் பூங்காவனத்தில் தங்கியிருப்பவளே*
*பஞ்சவர்ணப் பைங்கிளியின் பலவண்ணங் கொண்டவளே*

**காலிது** : (வேடிக்கையாக யோசித்து பாட்டைப் பார்த்து) இத அப்பிடிப் பாடப் புடாது.

**கதீஜா** : இப்பிடித் தான் பாடோணும்.

**கால்து** : கைச்சாத்தாளுக்குப் பாடத் தெரிய வேண்டாமா ? நான் பாடிக் காட்டுறேன். (பாட்டுப் புத்தகத்தைக் கூர்ந்து நோக்கி ஒரு மெட்டுப் போடுகிறான். அந்த மெட்டில் ஒரு முறை சொல்கிறான்) தாமரைப் பூங்காவனத்தில் தங்கியிருப்பவளே ... நான் பாடிக் காட்டட்டுமா கதீசா. (காலிது பாடத் தயாராகிறான். கதீஜா மேஜையினருகே சென்று மேஜைமேல் கையூன்றி நின்று, பாடும் முறையைக் கண்டு புன்சிரிப்புப் பூக்கிறாள். பாத்தேயி எல்லாவற்றையும் கவனிக்கிறபோதிலும் பேசாமல் அமர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறாள்)

**காலிது** : (பாடுகிறான்)

தாமரைப் பூங்காவனத்தில் தங்கியிருப்பவளே
பஞ்சவர்ணப் பைங்கிளியின் பல வண்ணங் கொண்டவளே.

**கதீஜா** : இப்பிடியில்லெ காக்கா அதப் பாடோணும்.

**காலிது** : இப்பிடித்தான் கதீசா. நீ பாத்துக்க (தொடர்ந்து அதிலுள்ளதாக பாவனை செய்து இல்லாத புதிய வரிகளைப் பாடத் தொடர்கிறான்) பூநிலா வந்து பூக்களைத் தூவுகிறது. பூக்களில் ராணியாகப் பூத்து நிற்பவளே ...

**கதீஜா** : இதெல்லாமொண்ணும் அதுல இல்லெ.

**காலிது**: இதெல்லாந்தான் இதுல இருக்கு. அதுக்கு ஒங்களுக்குப் பாடத் தெரிஞ்சிருக்க வேண்டாமா. இண்ணுமிருக்கு, பாத்துக்க. (தொடர்கிறான்) காத்திருந்து காத்திருந்து கால் மரத்துப் போச்சு—கண்மணியைக் காண்பதற்காகக் கண் துடித்துப் போச்சு—கண்களாலே இதயங்களில் கல்லையெறிபவளே ...

**கதீஜா** : இன்னாத்துக்கு காக்கா இப்பிடி இல்லாததையெல்லாம் பாடுறீக ?

**காலிது** : (பாட்டுப் புத்தகத்தை மேஜை மேல் வைத்தவாறே) இல்லாததா ? வாசிச்சுப் பாரு பொண்ணே. போதாதுண்டா இன்னுங் கொஞ்சம் சொல்லித் தாரேன். (மேஜையருகே சென்று பாட்டுப் புத்தகத்தைப் பார்த்து) அன்றொரு நாள் அம்புலிமான் வம்பனாக வந்தான்—வந்து உன்னைக் கண்டதும் மயங்கிப் போய் நின்றான்—கண்களாலே இதயங்களில் கல்லையெறிபவளே ... (காலிது கதீஜாவைப் பார்க்கிறான். கதீஜா வெளியே வாசல் வரை போய் வெளியே நோக்கிக் கொண்டிருக்கிறாள்—மிகவும் பயத்துடன்) வாப்பாகிட்ட ஒனக்கு அத்தினி பயம்முண்டா இங்கிட்டு என்னாத்துக்கு வாரே ?

**கதீஜா** : (திரும்பி வருகிறாள்) என் இஸ்டப்படி வாரேன்.

**காலிது** : இஸ்டப்படறவகள்ளாமொண்ணும் இங்கிட்டு வரக் கூடாது. பாத்தேய், கதீசா வந்தா இனிமெ புடிச்சு வெளியே தள்ளிப்புடு.

**கதீஜா** : முடியுமோ ? நான் என் சித்தப்பா ஊட்டுக்குல்லா வாரேன்.

**காலிது** : நான் அந்தச் சித்தப்பா மவன். புரிஞ்சுதா ? (கதீஜா சிரிக்கிறாள். காலிது இன்னொரு நாற்காலியிலமர்கிறான். பாத்தேயி எழுதுவதைக் கவனித்து, எழுந்து மேஜையருகே சென்று கதீஜாவைப் பார்த்து) பாத்தியா கதீசா, பாத்தேயி படிக்கிறத. படிச்சுப் படிச்சு எங்க போயிச் சேருவாண்டு அல்லாக்குத் தான் தெரியும்.

**கதீஜா** : இந்தப் பாத்தேயக்கா ஏன் யாரோடயும் பேசமாட்டேங்குது ?

**காலிது** : யாரோடயும் பேசுறதில்லியா ?

**கதீஜா** : நான் இங்கிட்டு வந்து எத்தினி நேரமாச்சு. இதுவரை பேசினாவளா ?

**காலிது** : பாத்தேய், அதுக்குள்ள பெரிய ஆளாயிட்டியோ ... (கதீஜாவிடம்) இதுதான் நம்ம சனங்க சொல்லுதாவ. பொம்புளப் புள்ளகளப் படிக்க வைக்கக் கூடாது, படிக்க வைக்கக் கூடாதுண்டு. படிக்க வச்சுட்டா அவுக மண்டைக் கனமும் ஜோரும் ஒண்ணும் சொல்லி முடியாது. (பாத்தேயியை நோக்கி அழைக்கிறான்) பாத்தேய், பாத்தேய் (எதையோ நினைத்துக் கொண்டு கண்ணை மூடி யோசிக்கிறான். சிரிக்கிறான். கதீஜா அதைக் கவனிக்கிறாள்)

**கதீஜா** : இன்னாத்துக்காவ சிரிக்கிறிய ?

**காலிது** : (கதீஜாவினருகே சென்று முணுமுணுக்கிறர்) ஃபாத்திமாண்டு கூப்புடாததுனாலதான்.

**கதீஜா** : ஹாங், எனக்கதுதான் வேலை! என்னால முடியாது ஃபாத்திமாண்டு கூப்புட, நான் பாத்தேயிண்டுதான் கூப்புடுவேன். நல்ல மனசுருந்தா கேட்டா போதும்.

**காலிது** : பாத்தேயி பெண்ணுண்டா கேக்க மாட்டா.

**கதீஜா** : கேக்க வேண்டாம்.

**ஆமினா** : (உள்ளேயிருந்து கூப்பிடுகிறாள்) பாத்தேய்! (பாத்தேய் தூக்கி வாரிப்போட்டு எழுந்திருக்கிறாள். ஆமினா நுழைகிறாள் கோபத்துடன், கதீஜாவும் காலிதும் சிரிக்கின்றனர். பாத்தேயியிடம்) ஒனக்கென்னா வேலை இங்க ? (காலிது சிரிப்பதைக் கண்டு அவனிடம்) இன்னாடா அத்தினி பெரிசா

சிரிக்க! ம்? நீங்கல்லாம் சேந்துக்கிட்டு என்னை முட்டாளாக்குறீகல்லே ? (பாத்தேயியிடம்) அடீ, நீ பாலு காச்சிட்டியா ?

**பாத்தேயி**: ஆமாம்மா.

**ஆமினா** : தட்டும் பீங்கானும் களுவி வச்சியா ?

**பாத்தேய்**: உம்

**ஆமினா** : முற்றத்த அடிச்சுப் பெருக்கினியாடி ?

**பாத்தேயி** : நானு எல்லா வேலயும் முடிஞ்ச பொறவுதான் இங்கிட்டு வந்தேன்.

**ஆமினா** : ம் ... நல்லாப் போச்சு, டே, ஒங்க சிரிப்பும் வெளயாட்டும் கொஞ்சம் தாஸ்தியாவுது கேட்டியா... இன்னா ஒன் நெனப்பு ?

**காலிது** : நான் என்னெல்லாம் நெனச்சுக்கிட்டிருக்கேம்மா.

**ஆமினா** : நீ என்னெல்லாம் முஸீபத்து உண்டாக்கிறேண்டு அல்லாக்குத் தெரியும்.

**காலிது** : நான் பல முஸீபத்து உண்டாக்கத்தான் தயாராயிட்டுருக்கேன்.

**ஆமினா** : ந்தா, நீ என் வாயக் கௌற வாண்டாம். ஒம் புத்திக்கு இன்னாவோ ஆயிருக்குடா, ஆயிருக்கு. இல்லாட்டா இந்த மாதிரி அவமானத்தல்லாம் நீ கொண்டார மாட்டே. (மனோ வேதனையுடன்) ஒனக்கு ஒரு கல்யாணத்தப் பண்ணிப் பார்க்கணுமுண்டுல்லாடா நான் ஆசப்பட்டுக்கிட்டுருந்தேன். அப்படியிருக்கையில் நீ உண்டாக்கி வைக்கிற ஒவ்வொரு முஸீபத்து...

**காலிது** : ம்மா, நீங்க ஒரு சரியான உம்மாதான். எதுக்கும் பொறுமை கெடயாது. நான் கல்யாணம் பண்ணிக்கிட மாட்டேண்டு சொன்னேனா எப்பவாச்சும் ?

**ஆமினா** : இப்படிண்டா நீ சொல்ல வேற வேணுமாடா. (கதீஜா பாத்தேயியின் கையைப் பிடித்து உள்ளே போகிறாள். அதைக் கண்டு சற்று மெதுவாக) ஹமாரே, அவளுக்கு வயத்துல உண் டாயிருக்குண்டு ஊருலல்லாம் பேசுறாவ. ஒனக்கு அது தெரியுமாடா.தெரியுமா?

**காலிது** : (சிரித்தவாறு) ஊர்க்காரங்க சொல்லிட்டா வயத்துல உண்டாயிருமா ? ஒங்களுக்கு என்னா தோணிச்சு ?

**ஆமினா** : எனக்கு என்னாடா தோணணும் ? ம், நீ ஒரு வயசுப் புள்ளெ இல்லியா ? கல்யாணமாகாத வளந்த வயசுப் புள்ளெ. அதுக்கு மேல சனங்களுக்கு எதுனாச்சும் வேணுமாடா ? இல்லெ, வேணுமா? நெருப்பக் கட்டிக்கிட்டுல்லெ நாம இங்க குந்தியிருக்கோம்.

**காலிது** : *சரிதாம்மா, இங்க நெருப்பு இருக்கு. ஆனா அதுனால சூடு ஊர்க்காரங்களுக்குத்தான். அதுனாலதான் அவுக சொல்லிக்கிட்டு திரியுறாவ.*

**ஆமினா** : நான் அவளப் புடிச்சு வெளியே தள்ளிப்புடுவேன் இங்கிட்டுருந்து

**காலிது** : *உம்மா !*

**ஆமினா** : இல்லைண்டா நான் எங்கிட்டாவது தொலஞ்சு போயிடறேன். நீயும் வாப்பாவும் அவளுமா சேந்துக்கிட்டு என்ன ஹலாக்கு ஒணுண்டாலும் செய்துக்கிடுங்கோ.

**காலிது** : *இன்னாம்மா சொல்றீக?*

**ஆமினா** : *நாஞ் சொல்றது ஒந்தலயில ஏறாதுடா. ஒனக்குப் பைத்தியமுல்லா! முளுப் பைத்தியம் !*

**காலிது** : மவனயும் வாப்பாவயும் உட்டுப் போறது ஒங்களுக்கு ரொம்ப மரியாதையான காரியம்ண்டா அப்படியே ஆவட்டும்.

**ஆமினா** : இந்த அவமானத்தோட இருக்குறத விட அது மேல் தான். *(சோர்வுற்ற முகத்துடன் உஸ்மான் பிரவேசிக்கிறான். மௌனமாகச் சென்று நாற்காலியில் அமர்கிறான், காலிதிடமே)* டேய், எல்லாரயும் விட ஒனக்குப் புத்தி இருக்குல்லெ ? நீ கொஞ்சம் யோசிச்சுப் பாரு நீ என்னா செய்யுறேண்டு *(உஸ்மானிடம்)* என்னா ஆயிருச்சு ? ... என்னாச்சு ஒங்களுக்கு ? நாக்குல அப்பம் வீங்கிருச்சா ? ம்க்கும் !

**உஸ்மான்** : *(சற்று சினத்துடன்)* ம்! *(காலிதிடம்)* டேய், நீ பண்ணுறதெல்லாம் என்னாண்டு நான் நல்லா யோசிக்குறதுண்டு. இதுவரை எனக்கு இதுல ஒரு வெறுப்பும் உண்டாகலெ. இப்ப நான் ஒங்கிட்ட சொல்றேன். அதும் ஓம் வாப்பாங்குறதுனால சொல்றேன். அவள இங்க உட்டு வைக்கணுமுண்டா வச்சுக்க. நான் அதுக்கு எதிர்ப்பு சொல்லலெ. ஆனா ஒரு விசயம், நீ சீக்கிரம் வேற ஒரு பொண்ணக் கல்யாணம் கட்டிக்கிடணும். அதுக்கு முடியாதுண்டா இப்பவே அவள நீ இங்கிட்டருந்து அனுப்பிச்சிரணும்.

**ஆமினா** : இதுவரை சொன்னதுக்கு இன்னா அர்த்தம்ண்டு ஒனக்குத் தெரிஞ்சுதாடா? தெரிஞ்சுதா? மனுசாளுக்கு கௌரவமா வெளிய போமுடியலெ. அதான். ஒங் காதுலயும் வந்து டமாரம் அடிச்சிருக்குமே.

**காலிது** : உம்மா! நான் அவள இங்கிட்டு அளச்சுக்கிட்டு வந்தது இங்கிட்டுருந்து மனம் போல வெளயாட இல்லெ.

**உஸ்மான்** : ஊர்க்காரவுகளுக்கு அதொண்ணும் புரியாதுடா. அவுக சொல்லித் திரியறது வேறயாக்கும்.

**காலிது** : அவுகள்ளாம் அவகிட்ட வெளயாட முடியாம நான் அவள இங்கிட்டு அளச்சுக்கிட்டு வந்துட்டேன். அதுனால அவுக அப்பிடியெல்லாம் பேசுவாக.

**ஆமினா** : நாங்க யாருக்காவ இப்ப ஒபதேசம் செய்யுறது. சொல்றத அப்பிடி கேக்க வாண்டாமா.

**காலிது** : நான் கொஞ்சம் யோசனை பண்ணட்டும், அப்புறம் சொல்றேன். (யோசிக்கிறான்)

**ஆமினா** : யோசன பண்ணு. கல்லறக்குள்ள போனாலும். ஒன் யோசனை தீராது. பின்னெ என்னா, நான் போறேன் (உள்ளே போகிறாள்)

**உஸ்மான்** : ஓம் பெரியப்பா என்னக் கூப்புட்டு என்னெல்லாம் சொன்னாகண்டு ஒனக்குத் தெரியாது. நீ செய்யுறதெல்லாம் கொஞ்சம் சரிதாண்டு நானும் சம்மதிக்கேன். ஆனா அதுக்காவ மனுசன் எத்தினி அவமானப்படனும். நீ நான் சொல்றதக் கேளு.

**கதீஜா** : (பிரவேசித்து) காலிது காக்கா, பாத்தேயக்கா அளுதுட்டுருக்கா. அவ இங்கிட்டுருந்து போயிடுறாளாம். (உஸ்மான் திரும்பி நோக்குகிறான்)

**காலிது** : ம் ?

**கதீஜா** : சித்தப்பாக்கும் சின்னம்மாக்கும் இஷ்டமில்லைண்டா அவ இங்க இருக்க மாட்டேண்டு சொல்லுதா. (காலிது உள்ளே போகிறான். கதீஜாவும் பின்னேலேயே போகிறாள். ஆமினா சுற்றுமுற்றும் நோக்கிவிட்டுக் கணவனருகே சென்று மெல்லிய குரலில்)

**ஆமினா** : அவங்கிட்ட இனிமெ அதப் பத்தி ஒண்ணும் பேசிட்டுருக்க வாண்டாம்; அவன் இல்லாத சமயத்துல நாம அவகிட்டப் பேசியனுப்பிச்சிரலாம். நம்ம மவனில்லையா. பின்னாடி சரியாயிருவான்.

**உஸ்மான்** : அப்பிடி எதுனாச்சும்தான் செய்ய வேண்டியிருக்கும். பெரியண்ணன்கிட்ட என்னால இனிமெ ஒரு வார்த்தை கூட பேச முடியாது. பேசுறதுக்கு ஒண்ணும் இல்லவும் இல்லெ. இன்னைக்குப் பள்ளியில பாத்தவங்களுக்குப் பதில் சொல்லிப் போதும் போதும்ண்டு ஆயிருச்சு.

**ஆமினா** : வாப்பா சொன்னா மவன் கேக்காம முடியுமா? கொஞ்சம் அப்பிடி பலமாச் சொல்ல வேண்டியதான், என்னா?

(காலிது வருகிறான். பெற்றோர்கள் சம்பாஷணையை நிறுத்துகிறார்கள், காலிதின் பின்னால் அழுதவாறே பாத்தேயியும், கவலையுடன் கதீஜாவும் பிரவேசிக்கிறார்கள்)

**காலிது** : (திடமாக) உம்மா, வாப்பா, பாத்தேயி இங்கிட்டுருந்து போறா. அவ இங்க வந்ததுனால உம்மாக்கும் வாப்பாக்கும்

கொஞ்சம் கஷ்டமாயிருச்சு. நமக்குள்ள அப்பிடியும் இப்பிடியும் பேசிக்கிடறோம். இதெல்லாம், இவ இங்க வந்ததுனாலதான், இல்லியா ? இங்க வாரத வரை அவ என்ன செய்தாண்டு நீங்க பாக்க வேண்டாம். இங்க வந்த பொறவு அவ ஒரு தப்பும் செய்யலெ. நீங்க சொன்னதக் கேக்காம இருக்கலெ. ஒங்களுக்கு மரியாதை கொடுக்காம இருக்கலே. இது ஒங்க சொந்த அனுபவம். ஊர்க்காரவுக சொல்லித் திரியறது ஒங்களுக்கு அத உடப் பெரிசுண்டா இனிமெ நான் தடுக்கலெ. அவ போறேண்டு சொல்றா. நீங்க சம்மதம் கொடுங்க. போகுறப்ப ஒங்ககிட்ட கேக்க வேண்டாமா ? (உஸ்மானும் ஆமினாவும் மௌனமாக நிற்கிறார்கள் ஒன்றும் சொல்லத் தோன்றாமல். காலிது வேதனையுடன் தொடர்கிறான்) அவ இங்கிருந்து போவா, ஒங்களப் போல எல்லா வாசப்படியிலருந்தும் அவள வெளிய தள்ளுவாக. அவ மேல உள்ள கதைகள் அப்பிடிப்பட்டது. பசிக்கிறப்போ அவ பிச்சையெடுக்க ஆரம்பிப்பா. அத வச்சுக்கிட்டு ஒரு எளம்வயசுப் பொண்ணுக்கு வாள முடியாது. பசிய விடப் பெரிசு என்னாம்மா? வேற வளியொண்ணும் இல்லைண்டு ஆகுறப்போ அவ வேற எதுனாச்சும் தொளில் பாப்பா (இதயத்தில் பாய்ந்து தரிக்குமளவு சக்தியைச் சேர்த்து) அப்பிடிம்மா, நீங்க இப்பச் சொல்ற ஊர்க்காரவுக கொணத்துனால அவ தெருவுல கெடந்து நாறி நாறிச் சாவா, அப்பிடிச் சாகுறதுக்காக அவளுக்கு இங்கிருந்து போகணும். அதுக்கு நீங்க சம்மதம் கொடுத்துக்குங்க, வாப்பா கொடுத்துக்குங்க. இனிமெ ஒங்களுக்கு இந்த சங்கடம் இருக்காது... என்னா நீங்க ஒருத்தரும் பேசலை ? ஒரு பயமும் வேண்டாம். சம்மதம் கொடுத்துருங்க. அவ போய்க்கிரட்டும் (உஸ்மான் மெல்ல எழுந்து மௌனமாக உள்ளே போகிறான் அவ போய்க்கிரட்டும்மா, போண்டு சொல்லிருங்கோ.

**ஆமினா** : (கோபத்துடன்) ஹெமாரெ, நீ என்னச் சொல்ல வைக்க வேண்டாம். நீங்கல்லாம் சேந்து என்னா மண்ணு வேணுண்டாலும் ஆகட்டும். நான் எதுக்கும் வரலெ. (திரும்பி உள்ளே போகிறாள். கதீஜா காலிதை நோக்கிச் சிரிக்கிறாள்)

**கதீஜா** : (பாத்தேயியைப் பிடித்துக் கொண்டு) பாத்தேயக்கா!

**( திரை )**



## காட்சி ஆறு

### உலகத்தின் நிறம்

(உஸ்மான் வீட்டின் பின்புறம் ஒரு கொடி தெரிகிறது. நனைத்துப் போட்ட சில துணிகள் அதில் உலர்ந்திருக்கின்றன. அவற்றை எடுக்கப் பாத்தேயி வந்திருக்கிறாள். எடுக்க ஆரம்பிக்கும்போது கதீஜா வருகிறாள். துணிகளையெடுத்து அவற்றை மடித்து ஒன்றாகக் கொடியின் ஒரு பாகத்தில் போடுவது வரை அந்த வேலை தொடர்கிறது)

**கதீஜா** : பாத்தேயக்கா, நாம இருக்குற ஒலகம் உருண்டைண்டுல்லா நீங்க சொல்லித் தந்தீக ?

**பாத்தேயி** : ஆமாம் பெண்ணே, உருண்டைதான். எலுமிச்சம்பளம் இருக்குல்லெ, அதமாதிரி உருண்டையாக்கும். அதோட அது அப்பிடியே சுத்திக்கிட்டேயும் இருக்கு.

**கதீஜா** : நான் கொஞ்சம் யோசிச்சுப் பாத்தேன். அப்ப நாம ஏன் கீள விளுந்துடலை

**பாத்தேயி** : அதுக்கு ஒலகத்துக்கு என்னவோ சக்தியெல்லாம இருக்காமெ. காலிதுகாக்காகிட்ட இன்னொரு வாட்டி கேட்டுப் பாக்கலாம் (தொலைவில் பார்த்து) இல்லாட்டாலும் வேண்டாம். ஒன் சின்னக் காக்கா அந்தா நிக்காவ, அவுகளுக்குத் தெரியும் கூப்பிட்டுப் பாரு.

**கதீஜா** : (கூப்பிடுகிறாள்) சின்னக் காக்கா, சின்னக் காக்கா, (பாத்தேயியிடம்) வாராக.

**ஹஸன்** : (பிரவேசிக்கிறான்) இன்னா பொண்ணே, மனுசனை ஒரு பக்கத்துல நிக்க உடமாட்டேன்றீக. கொக்காக்கா, கொக்காக்காண்டு கூப்புட்டுக்கிட்டே இருப்பீக. (இருவரையும் நோக்கி) அடே, இது பரவால்லியே ? வாப்பாவ ஏமாத்துறதுக்குத் தானே ? கதீசாவுக்குச் சித்தப்பா ஊட்டுக்குள்ளார நொளயக் கூடாது. பாத்தேயிக்கு நம்ம ஊட்டுக்கு வர முடியாது. அப்ப, பின்புறந்தான் புத்திசாலித்தனம். கடைசில வாப்பா அங்கிட்டு ஒரு வேலி கட்டிப்புடுவாகண்டுதான் தோணுது.

**கதீஜா** : நான் சித்தப்பா வீட்டுக்குள்ளார எப்பவும் போவேன்... இல்லெ காக்கா. நாம இருக்குற ஒலகம் உருண்டையா ?

**ஹஸன்** : (ஆச்சர்யத்துடன்) யாரு ஒனக்குச் சொல்லித் தந்தாக உருண்டைண்டு ?

**கதீஜா** : காலிது காக்கா சொல்லிக் கொடுத்தத பாத்தேயக்கா இங்க சொன்னா.

**ஹஸன்** : பாரு பாத்தேய், நீ இந்தத் தேவையில்லாத்த தெல்லாம் இந்த மண்டூஸுக்குக் கத்துக் கொடுக்க வேண்டாம்.

**பாத்தேயி** : நான் உள்ளதைத் தானே சொன்னேன்? ஒலகம் உருண்டைதானே ?

**ஹஸன்** : ஒஹோ, உருண்டையா ? மொகத்துல கண்ணுல்லெ, கொஞ்சம் பாரு. இப்பிடிப் பரந்து கெடக்குறது தெரியலியா? (கதீஜாவிடம்) இப்பிடியெல்லாம் வாப்பா முன்னல அவுத்து உட வாண்டாம். வெட்டித் துண்டு துண்டாப் போட்டுருவாக ஒன்ன, உருண்டைண்டு கண்டவகளும் சொல்றாக இல்லெ ? நீ பாக்குறத நம்பினாப் போதும்.

**பாத்தேயி** : ஒலகம் ஒரு அச்சுத் தண்டு மேல சுத்திக்கிட்டும், சூர்யனையும் அப்பிடிச் சுத்திக்கிட்டும் இருக்கு. அப்படிண்டு தான் நான் படிச்சேன். பூகோளப் புத்தகத்துல இருக்கே ?

**ஹஸன்** : (கேலியாக) பூகோள சாஸ்த்ரம். ஙே ... அப்ப என் கொளந்தே, அது பெரும்புளுகு. ஒலகம் நிக்கிறது ஒரு காளையோட கொம்பு மேல, நான் படிச்சதச் சொல்றேன். நடுநடுவுல வலியெடுக்குறப்போ காளை ஒரு கொம்புலருந்து இன்னொரு கொம்புக்கு மாத்தும், அப்பத்தான் இந்த பூமி குலுங்குது.

**கதீஜா** : (வியப்புடன்) அப்ப எத்தினி பலம் வேணும் அந்தக் காளைக்கு !

**ஹஸன்** : பெரிய காளைல்லா ?

**பாத்தேயி** : அது போகட்டும், அப்ப அந்தக் காளை எங்க நிக்குது, அதக் கேக்கட்டும்,

**ஹஸன்** : அது, அதவிடப் பெரிய ஒரு பாறாங்கல்லு மேல.

**கதீஜா** : அந்தப் பாறாங்கல்லு எங்க இருக்கும் அப்ப ?

**ஹஸன்** : அதுவா... அது... அத உடப் பெரிய ஒரு மீன் இருக்குண்டு சொல்லுதாவ. அதும் பல்லு மேல, (பாத்தேயி என்னவோ கேட்க வாயெடுப்பதைக் கண்டு) நில்லு , நில்லு, இந்த மீன் எங்கேண்டு கேக்கப் போறே இல்லே ? சொல்றேன், அது அத உடப் பெரிய ஒரு பஹருல, பஹருண்டு சொன்னா கடல், புரிஞ்சுதா ?

**கதீஜா** : அப்ப அந்தக் கடலு ?

**ஹஸன்** : அந்தக் கடல் ஜஹன்னம்ண்டு சொல்ற நரகத்தோட உள்ளேயிருந்து கௌம்புற புகையோட உச்சியில இருக்கு.

**கதீஜா** : அப்பொ நரகம் ? அதயும் சொல்லிருங்க.

**ஹஸன்** : ம்... நிறுத்து, நிறுத்து. அங்கதான் கண்ணி, அதுக்கப்புறம் யாரும் கேக்கப்புடாது. அதெல்லாம் அல்லாவோட குதுரத்துனால நடக்குற காரியம். படைப்புகள் அதுக்கு மேல கேக்கப் புடாது.

**கதீஜா** : அது ஏன் காக்கா ?

**ஹஸன்** : கேக்கக் கூடாதுண்டா கூடாது.

(பாத்தேயி சிரிக்கிறாள்)

**கதீஜா** : அப்ப நான் எத நம்புறது இப்ப ? ரெண்டையும் நம்பலை.

**ஹஸன்** : வேண்டாம், நீங்க ஒரு வேலை பண்ணுங்க. வாப்பாவோட கம்பு இருக்குல்லெ ? அதப்போல நீளமானதுண்டு நம்புங்க, என்ன! (பச்சாத்தாபத்துடன்) ஐயோ, கொளந்தே, இப்பிடி ஆகாயமும் பூமியும் இல்லாதவளாப் போயிட்டியே ?

**கதீஜா** : எனக்கு அத்தினி போதும்.

**ஹஸன்** : அது சரிதான், இப்ப அத்தினி போதும்லெ? கல்யாணம் பக்கத்துல நெருங்கிட்டுதுல்லெ! இனிமெ எதுனாச்சும் ஒணுண்டா அந்தக் கடை மொதலாளி சொல்லித் தருபாரு. (பாத்தேயியிடம்) காலிது காக்கா இருக்காரா அங்க ? கதீசாவப் பத்திக் கொஞ்சம் சொல்லணும் எனக்கு.

**பாத்தேயி** : என்ன, அத்தினி பெரிய வெசயம் சொல்ல ?

**ஹஸன்** : கதீசாவோட மாப்பிளையைப் பத்தி. பாரு பாத்தேய், இல்லை ஃபாத்திமா, கல்யாணம் நெருங்கிட்டுதுல்லெ ? ஆனா, நம்ம கதீசாவுக்கு மாப்பிள்ளை யாரு, எப்படிங்கிற எந்த விவரமும் தெரியாது, என்ன! (கதீஜா வெட்கத்துடனும் குழப்பத்துடனும் முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்) நான் பாத்துருக்கேன் பாத்தேய். ஒரு கொரங்குதான். நெசம்மா. நீளப் பல்லும் அரும்மையா வளஞ்ச மூக்கும் எல்லாமாச் சேந்து இப்பிடி இருக்கான். (முகத்தை விகாரமாக்கிக் காட்டுகிறான்) நல்ல கரும்பூனையோட நெறமும். (பாத்தேய் சிரிக்கிறாள்)

**பாத்தேயி** : கதீசாவோட மாப்பிள்ளைக்கு ஏராளமா சொத்தும் பணமும் இருக்குல்லெ?

(கதீஜா கண்களைப் பொத்தியழுகிறாள்)

**ஹஸன்** : (அதைக் கண்டு) அவ அளுறா. அப்ப நம்மால ஆவாது.

**பாத்தேயி** : அல்லாஹும் மஸலி ! இது என்னா கதீசா ? (கதீஜா அழுது கொண்டு போகிறாள்) நீங்க வீனா அவள அள வச்சுட்டீக.

**ஹஸன்** : அது இப்பமே தீந்துரும். அதப் போக்குறது பெரிய வேலையா. விமானம் எப்படிப் பறக்குதுண்டு கேட்டுக்கிட்டு இப்ப இப்பிடி வருவா. அப்ப அவளுக்கு சொல்லித் தந்தாப் போதும். அந்த அளுகை போயிரும்.

**பாத்தேயி** : கதீசாவும் நீங்களும் வாப்பா சொல்றபடி கேட்டு நடக்கப் புடாதா ? வாப்பாவுக்குக் கோபம் உண்டாக்கணுமா ? எப்பப் பாத்தாலும் ஊட்டுலருந்து சத்தமும் கூப்பாடும் கேக்குதுல்லா.

**ஹஸன்** : வாப்பா சொல்றது எல்லாத்தியும் கேக்க எனக்கு தைரியமில்லை ஃபாத்திமா

**பாத்தேயி** : மஹூம் ? அதென்னா இப்ப ?

**ஹஸன்** : தல முளுசும் மொட்டயடிக்கணும். ஒரு வெள்ளத் தொப்பி போடணும். துணி குதியங்காலுக்க மேல ஏத்திக் கட்டணும். (முழங்கையளவு என்று சமிக்ஞை காட்டி) இது வரைக் கை வச்ச சட்டை. அப்பொறம் கோளி கூவுறப்ப எளுந்து தொளணும். கடயத் தொறக்கணும். அஞ்சு நேரம் தொளுகை உண்டும்லா? அது களிஞ்சு கடயப் பூட்டித் திரும்பி வரணும். அப்பிடியே கல்யாணம் களிச்சு, புள்ளங்களுக்கு வாப்பாவாயி, கௌவனாயி சாவேன். அப்புறம் சொர்க்கத்துக்குப் போவேன், குசியாக் களியும். (பாத்தேயி சிரிக்கிறாள்) பொம்புளைங்கண்டா, மாத்தான் எவனும் பாக்காம ஊட்டுள்ளார குந்தியிருக்கணும். வாப்பா ஒரு மாப்பிளைக் கொண்டுத் தருவாக. அப்புறம் புள்ளெ பெறதும் அதோட நோம்பும் தொளுகையும், அப்பிடி வயசாயிச் செத்து சொர்க்கத்துக்குப் போயி குசியாக் களியும்.

**பாத்தேயி** : நம்ம பொம்புளங்களுக்கு அத்தினி தானே கடமை. இல்லாட்டி வளிதப்பிப் போயிருவாகல்லா ?

**ஹஸன்** : ஃபாத்திமா என்னா தப்பு செய்தே? ஆனா ஊர்க்காரவுக ஒன்னயப் பத்தி என்னெல்லாம் சொல்லுதாக? இதெல்லாம் நீ செய்ததா ? எங்க வாப்பாவோட கோபத்தச் சொல்லித் தீருமா ? சித்தப்பாவக் கூப்புட்டு நேத்தும் கொஞ்சம் சத்தமும் கூப்பாடும் போட்டாக. பாத்தேயிய இங்கிட்டுருந்து சொல்லி அனுப்பிச்சிர்றேண்டு ஒத்துக்கிட்டாக்கும் நேத்து சித்தப்பா போனாக. ஒன்ன இங்க இருக்க வைக்கிறதுக்கு காலிதுகாக்கா எத்தினி கஷ்டத்தப் பொறுத்துக்கிடறாக தெரியுமா? (பாத்தேயி சோக சிந்தனையில் துவள்கிறாள்) காலிதுகாக்கா கையுல கெடச்சா வாப்பா அரச்சுக் குடிச்சுப்புடுவா. காலிதுகாக்கா என்ன செஞ்சாலும் வாப்பாவுக்கும் கோவம். ஃபாத்திமா தானே இதுக்கெல்லாம்

காரணம் ? (பாத்தேயியின் கண்களில் நீர் நிறைகிறது) என்னா ஃபாத்திமா ?

**பாத்தேயி** : (அழுதவாறு) நான் இங்க இருக்குறதுனால எல்லாருக்கும் கஸ்டம். நான் என்னா செய்யணும்மண்டு எனக்குத் தெரியலெ. ஹஸன்காக்கா. நான் எப்பவும் நெனச்சுக்கிடறேன் இங்கிட்டுருந்து போயிரணும் போயிரணும்ண்டு. காலிது காக்காவ நெனச்சுக்கிட்டு ...

**ஹஸன்** : என்னா செஞ்சாலும் அது மட்டும் செய்துராதே. காலிதுகாக்காவ ஒனக்கு நல்லாத் தெரியாது.

**பாத்தேயி** : எனக்குத் தெரியும். என்னால போக முடியாது.

(கதீஜா பிரவேசிக்கிறாள்)

**கதீஜா** : (ஹஸனிடம்) ஒங்கள அந்தா வாப்பா கூப்புடுதாவ. சீக்கிரம் வரச் சொன்னாவ

**ஹஸன்** : அதுக்குள்ளார அங்க போயிச் சொல்லிட்டேண்டு தோணுது. நான் சும்மாத் தானேடி சொன்னேன்.

**கதீஜா** : அதொண்ணும் எனக்குத் தெரியாது.

**ஹஸன்** : ம் ! வாப்பாகிட்ட ஏதாச்சும் சொல்லு. அப்ப எங் கொளந்தைக்கு நான் நல்லாக் கொடுக்குறேன் என்ன! (போகிறான்)

**கதீஜா** : பாத்தேயக்கா,வாப்பா சின்னக்காக்காவக் கூப்பிட ஒண்ணும் இல்லெ, கேட்டியளா! சின்னக்காக்கா போயி வாப்பாவோட முன்னால நிண்டாப் போதும்-பெரியவரு ஏதாச்சும் சத்தமும் கூப்பாடும் போடுவாக. (பாத்தேயி அழுவதைக் கண்டு) பாத்தேயக்கா, நீங்க, அளுதுக்கிட்டிருக்கியளா ? என்னாத்துக்கு அளுறிய ? என்ன ஆயிருச்சு ? (பாத்தேயி தலைகுனிந்து அழுகிறாள்) சின்னக் காக்கா எதுனாச்சும் சொன்னாவளா?... ஏங்கிட்டச் சொல்ல மாட்டியளா?

(பாத்தேயி தலையை உயர்த்தி அழும் கண்களுடன் கதீஜாவை நோக்குகிறாள். துக்க மேலீட்டால் அவளைக் கட்டியணைக்கிறாள்)

**(திரை)**

## காட்சி ஏழு

### *நரகத்தின் அடிமட்டத்திற்கு*

*(உஸ்மானின் வீடு. ஆமினா பெருக்கிக் கொண்டிருக்கிறாள். காலிது வெளியேயிருந்து வந்து, தெரிவிக்காமல் உம்மாவின் பின்புறம் சென்று 'உம்மா' என்று உரக்கக் கூப்பிடுகிறான். அவன் கையில் ஒரு பொட்டலம் இருக்கிறது)*

**ஆமினா** : *(கூப்பாடு கேட்டுத் திடுக்கிட்டு)* என் பத்ரீங்களே! *(பார்த்தவுடன்)* வந்துட்டியா நாசம் கொண்டாரவனே !

**காலிது** : அப்பிடி யொண்ணும் கூப்புடாதேம்மா.

**ஆமினா** : பின்னெ என்னாண்டுடா கூப்புடணும் ?

**காலிது** : மவனேன்டு கூப்புட்டாப் போதாதா ?

**ஆமினா** : தேனேண்டா ... ? *(கையைப் பார்த்து)* என்னாடா ஒங்கையில ஒரு பொட்டலம் ?

**காலிது** : இது ஒரு ஒசந்த பொருளம்மா. *(சிரிப்புடன்)* இதக் காட்டுறதுக்கு இன்னும் நேரம் வரலெ. நான் அதோட மதிப்புக்குத் தகுந்த மாதிரி காட்டுறேன். *(உட்புறம் போகிறான். போகும்போது உள்ளேயிருந்து வரும் உஸ்மான் அவனைப் பார்த்துக் கையிலுள்ள பொட்டலத்தையும் கவனிக்கிறான்)*

**ஆமினா** : *(உஸ்மானிடம்)* இல்லெ, நாங் கேக்கட்டும். நீங்க ஏன் இப்பிடிப் பேசாம இருக்கீக ? நீங்க பாக்கலியா அவனோட ஒவ்வொரு தல சுத்தற வெளயாட்டும். அவன யாரோ என்னாவோ செஞ்சிருக்காங்கண்டுதான் தோணுது. மூளையில தெளிவில்லாத மாதிரில்லா வெளயாடுறான்.

**உஸ்மான்** : நீங்க ஒங்க வேலயப் பாத்துட்டுப் போங்க பீவி. போங்க. அவன் பைத்தியமண்டா, பெரியவுக, ஊர்க்காரவுக அவன ஆஸ்பத்திரியில கொண்டு சேத்துக்கிடுவாக. *(நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்கிறான்)*

**ஆமினா :** ஓஹா! என்னாடாண்டா அவுக வாப்பால்லா. அவன் இருக்கான் மத்தவங்க தோல உரிக்க. நீங்க அதுக்கு மேல உப்பத் தடவுங்க! போங்க. எம் மூத்த பத்ரீங்களே! நான் யாருட்டப் போயிச் சொல்லுவேன்!

**உஸ்மான் :** என் ஆமினேய், நான் என்னா செய்யணும். அவன் தலயில ஏறி ஒறைக்குற மாதிரி அவங்கிட்ட சொல்ல எனக்கு ஒரு வார்த்தையும் தெரியலெ. சில ச்மயம் அவன் செய்யுறதையெல்லாம் பாத்தா முளுசும் தப்புண்டு தோணும். யோசிச்சுப் பாத்தாலோ எல்லாம் சரிண்டும் தோணும்.

**ஆமினா :** ஒங்களுக்குக் கேக்கலெ ஊர்க்காரவுக சொல்றது ? கேக்கலியா? உம்மாவுக்கும் வாப்பாவுக்கும் முன்னால வச்சுக்கிட்டே மவன் ஒரு எளவ்யசுக்காரியோட நெனச்சபடி வெளயாடிட்டுருக்காண்டு அவுக பேசுதாவ. நாலு பேரு மொவத்த நல்லா நிமிந்து பாக்க முடியலெ, ஒங்களுக்குப் புரியுதாங்கேன். இல்லியா ?

**உஸ்மான் :** அண்ணைக்கு அவள அனுப்புறதுக்காக சம்மதம் கொடுத்துக்கண்டு சொன்னப்ப ஒனக்கு என்னா பேச முடியலியோ? அப்ப இந்த முஸீபத்து தீர்ந்துருக்கும்லா? அப்ப ஏன் ஒன் நாக்கு எளும்பலை? இப்ப என்னச் சொல்ல வந்துருக்கா !

**ஆமினா :** என்னக் குத்தம் சொல்லுதியளா? ஒங்களுக்கு எதுனாச்சும் பேச முடியலியோ?

**உஸ்மான் :** அதத் தான் சொன்னேன் ; நம்மால அவங்கிட்ட சொல்லி ஜெயிக்க முடியாதுண்டு. (ஆமினா துடைப்பத்தை ஒரு புறத்தில் கொண்டு வைத்து விட்டுத் திரும்பி வருகிறாள்)

**ஆமினா :** என்னண்டாலும் வாண்டாம். நான் இனிமெ ஒரு மண்ணும் சொல்ல வரப் போறதில்லெ. ஒங்களால முடிஞ்சா நீங்க பாத்துக்கிருங்க. யாராச்சும் மந்திரவாதிய அளச்சுக்கிட்டு வந்து காட்டவாவது செய்யுங்கோ. அவன் புத்தியில என்னாவோ தகராறுங்கேன். (மெதுவாக) அவன் அவனோட நாடகத்தோட ஆட்டத்தெல்லாம் அவளுக்குச் சொல்லிக் குடுக்கான், அது ஒங்களுக்குத் தெரியுமாங்கேன், தெரியுமா ?

**ஹஸன் :** (பிரவேசித்து) என்னா சின்னம்மா நீங்க ரகசியம் பேசுதிய ?

**ஆமினா :** அதுக்குள்ளார வந்துட்டியா ஹமாரெ ?

**ஹஸன் :** நான் என்னா செய்யட்டும் ? கதீசாவ அங்க காணோம். பின்னெ இங்க தானே இருப்பா ? அவளெங்கே ?

**ஆமினா :** உள்ளார இருப்பா.

**உஸ்மான் :** வாப்பா ஊட்டுல இருக்காவளா ?

**ஹஸன்** : ம் ... சரியான வேளைதான், நீங்க காலிது காக்காவக் கொஞ்சம் ஜாக்ரதையா இருக்கச் சொல்லுங்க. மௌல்வியாரும், வாப்பாவும், காதர் குட்டி மொதலாளியும் எல்லாரும் சேந்து இண்ணைக்கு ஒரு மீட்டிங் போடுதாவ. காலிதுகாக்காவோட ஒரு ட்ராமா இருக்குல்லெ, நாடகம் ; இது இஸ்லாமுக்கு எதிருண்டு அவுக சொல்லுதாவ. அது ஆடக் கூடாதுண்டு அவுக எண்ணம். வகாபுகளும், ஸுன்னிகளும் எல்லாக் கூட்டத்துக்காரவுகளும் இந்த வெசயத்துல ஒண்ணு சேந்துட்டாக.

**ஆமினா** : இந்தப் பய உண்டாக்கி வைக்கிற ஒவ்வொரு ஹலாக்கு! அவனோட ராமாவும், நாடகமும் !

**ஹஸன்** : அங்க கல்யாணத்தோட கெடுபிடியில்லெ ? அதுக்கு நடுவுலயாக்கும் அதெல்லாம்.ஔக்கர்காக்காவுக்கும் சீக்கிரமே இன்னொரு கல்யாணம் வேண்டி வருமுண்டு தோணுது. இப்ப உள்ள பொம்புளயோட பெரியவரு சண்டையில்லா? நம்ம சனங்களுக்கு அப்பிடியொரு கொணம் உண்டு, எத்தினி பொண்ணு வேணுண்டாலும் கட்டலாமில்லா.

**ஆமினா** : *(உஸ்மானிடம்)* இல்லெ, ஒங்ககிட்ட ஒரு வார்த்தை சொல்லாம அவுக ஏதாச்சும் செய்வாகளா ?

**உஸ்மான்** : இந்தப் பொண்ண இங்கிட்டுருந்து அனுப்பிச் சுடறேண்டு நான் ஏத்துக்கிட்டேன்லே, எம் மவன அதச் செய்ய வைக்க என்னால முடிஞ்சுதா ?

**ஹஸன்** : நெசத்தச் சொல்றதுண்டா ஃபாத்திமா ஒரு பாவம் தெரியுமா ? தெரிஞ்சவுகளுக்குத்தான் அது தெரியும்.

**ஆமினா** : ஒனக்கென்னாடா அது தெரியும். அவளோட ஒவ்வொரு தளுக்கும் குலுக்கும் நீ கொஞ்சம் பாத்துருக்கோணும். அவங்கிட்ட அவ வெளையாடுறதயெல்லாம் பாக்குறப்போ... அவன் வேத்து வயசுக்காரப் புள்ளெல்லாடா ? இல்லியா ?

**ஹஸன்** : அதுக்கென்னா சின்னம்மா, காலிது காக்கா ஃபாத்திமாவயே கட்டிக்கிரட்டுமே.

**ஆமினா** : *(அடிக்கக் கையோங்கிக் கொண்டு)* போ சைத்தானே இங்கிட்டுருந்து! வாய்க்கு வந்ததப் பேசுறியோ ? எம்மவனுக்கு அப்பிடியாப்பட்ட காலம் வந்துடலெ. டேய், அல்லா கருணெல நல்ல குடும்பத்துலதான் கட்டுவான். *(காலிது வருகிறான்)*

**ஹஸன்** : ம், காலிது காக்கா, நீங்க நாடகம் ஆட முடியாது. எல்லாரும் ஒங்களுக்கு எதிரு. வகாபுகளும், ஸுன்னிகளும் எல்லாம். நம்ம கூட்டத்தவுக நாடகம் ஆடக் கூடாது.

**காலிது** : நாடகம் ஆடினா அளியறது இஸ்லாம் மதமில்லெ. இந்தத் தாடிக்காரவுகளும் தலக்கட்டுக்காரவுகளும்தான். அவுக

அளிஞ்சாதான் மதம் நல்லாகும் ; மனுசாளும் நல்லாவாக. (ஹஸன் உஸ்மானின் தாடியை விழித்துப் பார்க்கிறான்)

**உஸ்மான்** : டேய், ஒனக்குப் பைத்யமண்டு சொன்னது சரிதான். உம் ... (கதீஜா உள்ளேயிருந்து வருகிறாள்)

**கதீஜா** : அதுக்குள்ள வந்தாச்சா சின்னக் காக்கா. ஒங்களுக்கு வேற வேலையொண்ணும் இல்லைங்கேன்.

**ஹஸன்** : வேற இருக்குற வேலையப் பாத்தாலும் ஒத படற பயம் கெடயாதே ? ஒனக்குக் காவலு நிக்கிறது தானே பெரிய தொந்திரவு.

**கதீஜா** : வாப்பா வாரப்போ நான் வந்துக்கிடறேன்... (உட்புறம் திரும்பிப் பார்த்து உல்லாசத்துடன்) சின்னம்மா, சின்னம்மா இதப் பாத்தியளா? (அழைக்கிறாள்) இங்கிட்டு வாங்கோ பாத்தேயக்கா. எல்லாரும் பாக்கட்டும்.

**ஆமினா** : என்னாடி இப்ப அது ?

**கதீஜா** : (உட்புறம் போய்ப் பார்த்த பின்னரே) சின்னம்மாவும் சித்தப்பாவும் கொஞ்சம் பாக்கட்டும் ... ஓ ... அந்தா வாராக.

**உஸ்மான்** : என்னா அது காலிது ?

(ஆமினா காலிதை நோக்குகிறாள் ஹஸன் வாயிற்புறம் நகர்ந்து பார்க்கிறான்)

**காலிது** : என் கையுல ஒரு பொட்டலம் இருந்துச்சுல்லெ ? அதான்.

**ஆமினா** : என்னா இருந்திச்சு அதுக்குள்ளார ? (காலிது சிரிக்கிறான்)

**ஹஸன்** : (ஒரு முறை கையைத் தட்டி) சபாசு ! ரொம்ப நல்லாருக்கு ; காலிது காக்கா, அப்பிடித்தான். எனக்கு இதான் ரொம்பப் புடிக்கும். ஃபாத்திமா கொஞ்சம் இப்பிடி வா. (ஆமினா போய்ப் பார்க்கிறாள். கோபமுற்று பேசாமல் ஒரு புறம் வந்து தாடையில் கையூன்றி நிற்கிறாள்)

**உஸ்மான்** : பாத்தேய், கொஞ்சம் இப்பிடி வா.

**கதீஜா** : அவளுக்கு வெக்கம்.

**ஹஸன்** : இப்ப என்னா வெக்கம் ? முன்ன உள்ளதவிட அதிகமில்லெ? (காலிது உட்புறம் போய் பாத்தேயியைக் கூட்டி வருகிறான். அவள் ஒரு நல்ல ஸாரி உடுத்திருக்கிறாள். உஸ்மான் அதைக் கண்டு மெல்ல நாற்காலியில் அமர்கிறான்) கதீசா, என்னா இப்பிடி நாக்குல தண்ணி ஊத்தது? இதொண்ணும் கனாக் கூடக் காங்கண்டாம். இதொண்ணும் ஒந்தலேல எளுதலெ, ஒனக்கு ஆசையாயிருந்துச்சுன்னா இதையே யாரும் பாக்காம ஒரு வாட்டி சுத்திப் பாத்துக்க.

(பாத்தேயி உள்ளே போகிறாள்)

**கதீஜா :** *சின்னக் காக்கா, நடங்க. நான் இப்ப வந்துர்றேன். (உட்புறம் போகக் கிளம்புகிறாள்)*

**ஹஸன் :** *நம்மால முடியாது இனிமே பொய் சொல்லுறதுக்கு. மரியாதையா இந்தப் பக்கம் போயிரு. (உட்புறம் பார்த்து பயத்தை வெளிப்படுத்தியவாறு) அந்தா வாராக வாப்பா! ஓடு கதீசா. (வெளியே ஓடுகிறான்; பின்னாலேயே கதீஜாவும் ஓடுகிறாள்.)*

**ஆமினா :** *(காலிதிடம்) இதெல்லாம் என்னடா? ஹும் !*

**காலிது :** *பாத்தேயிக்கு நான் ஒரு ஸாரி வாங்கினேன்,*

**ஆமினா :** *இப்பிடியெல்லாம் கோலம் கட்டிக்கிட்டு இங்க கெடக்க நான் சம்மதிக்க மாட்டேன். சும்மாவா அவள காத்ருட்டி மொலாளி ஊட்லருந்து வெளியே தள்ளினாக. பாக்கலியாடா. அவுக மவன சரிப்படுத்தின மாதிரி ஒன்னயும் மயக்கிட்டா. அவ வெறும் ஊர் சுத்திடா. ஒங்கண்ணு பொட்டையாகிட்டுருக்கா ?*

**காலிது :** *கண்ணு பொட்டையானதுனால இல்லெம்மா. நான் பாக்குறதுல கொஞ்சம் வித்தியாசம் இருக்கு.*

*(வாயிற்புறம் சென்று பாத்தேயியைக் கூப்பிட்டுக் கொண்டு வருகிறான், அவள் பயத்தினால் பதுங்குகிறாள். காலிதின் கட்டாயத்தினால் முன்புறம் நகர்கிறாள்.)*

**காலிது :** *அந்தப் பக்கமா நட. (வெளிப்புறத்தைச் சுட்டிக் காட்டுகிறான். கஷ்டத்துடன் பாத்தேயி அதற்குப் பணிகிறாள். வெளியே போகிறாள். உஸ்மான் சுய நினைவுடன் அதைக் கவனிக்காதது போல அமர்ந்திருக்கிறான். ஆமினா கோபவசப்படுகிறாள்.)*

**ஆமினா :** *எங்கேடா ?*

**காலிது :** *(எச்சரிக்கையுடன்) உம்மா, ஃபாத்திமா இது வரை சினிமாண்டா என்னண்டு தெரிஞ்சுக்கிட்டதில்லெ, இண்ணைக்குப் பெண்களுக்குப் பார்க்கக் கூடிய ஒரு ஆட்டம் இருக்கு. அதக் கொஞ்சம் காட்டிக் குடுக்கட்டும். (ஆமினா என்னவோ அலறத் தயாராகிறாளென்பதை உதடுகளைப் பார்த்துப் புரிந்து கொண்டு) உம்மா, பேசாதிய, பேசாதியம்மா, நான் இப்பச் சொன்னா ஒங்களுக்கு முளுசும் புரியாது. (பின்புறமாகக் காலடிகளை வைத்து) பேசாதியம்மா ! (திரும்பி நடக்கிறான்).*

**ஆமினா :** *(சட்டென்று எதுவும் சொல்ல முடியவில்லை யாயினும் பிறகு சேர்த்து வைத்துக் கோப நடுக்கத்துடன்) திருட்டு சைத்தானே! நீ போ. ஒன் உம்மாவோடயும் வாப்பாவோடையும் பொணத்த நீ தூக்க வெச்சுடுவே. (கணவனிடம்) என்னாங் கறேன். வாயப் பொளந்துக்கிட்டுப் பாத்துக்கிட்டிருக்கிய. ஒங்களுக்குக்குக் கீளதானே இந்த மாதிரியெல்லாம் அவன் செய்யுறான். அப்பிடியும் பேசாம எப்பிடி இருக்கிய? ஒங்க அண்*

ணாக்குல அப்பம் வீங்கிப் போயிருச்காங்கேன். மனுசாளு மானம் கெட்டுப் போச்சுல்லா! என் ரப்பே! இப்பிடி ஏதுக்காவ் தர்பார்ல ஒக்காந்துட்டிருக்கிய? என் கோஜராஜாவான தம்புரானே! என் இருதயம் ஒடஞ்சு போகுதல்லா பதரீங்களே!' (உஸ்மான் எழுந்து உலவுகிறான்) வளியில அவன யாராச்சும் எதுனாச்சும் செய்துருவாங்கள்ளா. எனக்கொண்ணும் தெரியல. என் மம்பரத் தெத்தங்களே! நான் சொன்னேனில்லே என் கொளந்தையோட புத்திக்கு என்னாவோ ஆயிட்டுருக்குதுண்டு. ஒங்களுக்கு எதுனா சொரணை இருக்காங்கேன், இருக்கா? நான் எப்பவோ சொல்லத் தொடங்கிட்டேன். எதுனாச்சும் ஒண்ணு செய்யாம இருக்க முடியுமா ! நமக்கு இருக்குறதே ஒத்தன் தானே... கடவுளே. நான் ஒரு பொம்புளயாப் போயிட்டேனே, என்னால எதுனாச்சும் முடியுமா !

**ஹஸன்** : (ஓடி வந்து) எங்கிட்டு போறாக அவுக ? யாதொரு சேதியும் இல்லாமெ.

**ஆமினா** : என் முத்து ஹஸனே, நீ கொஞ்சம் போயிப் பாருப்பா. சீக்கிரம் போ. அவன யாராச்சும் ......

**ஹஸன்** : அவுக போறத வாப்பா பாத்துட்டாகண்டு தோணுது. அங்க பிசாசு புடிச்சு ஆடுறாக. பெரியவரு இங்கிட்டு வரலாம்.

**ஆமினா** : (உஸ்மானிடம்) நீங்க என்னாங்கறேன் வாள மரம் நட்ட மாதிரி நிக்கிய, ஹூக்கும்......

**ஹஸன்** : உண்மயச் சொல்லணுண்டா இப்பிடியெல்லாந்தான் இருக்கணும். பொம்புளங்கள ஊட்டுள்ளார வச்சு மூச்சுத் தெணறி . நரைச்சுச் சாவுறதுக்கு உடக்கூடாது. அவுகளும் வெளிச்சத்தப் பாக்கட்டும். இந்த ஒலகத்துல உள்ளதெல்லாம் மனுசாளுக்கு வேண்டி அல்லா படைச்சாருண்டுல்லா சொல்லுதாவ. அவுக மட்டும் எதுக்காவ அத அனுபவிக்காம இருக்கணும்.

**ஆமினா** : இது என்னால்லாண்டா சொல்லுதே ?

**ஹஸன்** : இப்ப நாம செய்யுறதெல்லாம் கொஞ்சம் மாத்துணுமண்டு.

(முதலாளி கூப்பாடு போட்டவாறு கம்புடன் பிரவேசிக்கிறார். ஹஸன் உட்புறம் ஒரே ஓட்டமாக ஓடிவிடுகிறான்.)

**முதலாளி** : (கோபம் முற்றி விறைத்து) நீ என்னடா பாத்துட்டுருக்கே. மனுசன மானம் போக்குறதுக்குத் தயாராக் கௌம்பியிருக்கியா ! அப்படிண்டா அதச் சொல்லு. நான் என் வேலயப் பாத்துக்கிடுவேன்லா. (ஆமினாவிடம்) என்னா ஆமினா நீ பாத்துட்டுருக்கே. இதுவரை நான் தள்ளிட்டேன். ஒங்களுக்கு மானம் அவமானம் இல்லெண்டா அல்லாவோட அனுமதியினால எனக்கு இது இருக்கு சனங்களா ! இல்லாட்டா நீங்கல்லாம்

சேந்து எதுக்கால என் தெருவுல வந்து தொலஞ்சீங்க; மனுசாளப் பேச வைக்க. ஒழுக்கங் கெட்டவள உள்ளார ஏத்தினது மட்டுமில்லெ. இப்ப தெருவு மேல அப்படி உலாத்துறாக. அதோட தீந்துதா. எங்கொளந்தைங்களக் கெடுக்கத் தானே நீங்கல்லாம் தயாராக் கெளம்பியிருக்கீக.

**ஆமினா** : *(பணிவைக் காட்டி)* அவங்கிட்ட நாங்க முடிஞ்சளவு சொல்லிப் பாத்துட்டம். எத்திணிண்டு நெனக்கிறிய. அவன் ஒளச்சுக் கொண்டாந்துதானே நாங்க இங்க நாளக் களிக்கிறோம்.

**முதலாளி** : அதுனால இஸ்லாமோட பந்து வெளயாட்டா? இம்மாதிரி எரப்பு நியாயம் எங்கிட்டச் சொல்லாதிய. *(உஸ் மானிடம்)* நீ எந் தம்பியா இருக்கேல்லே ... இல்லாட்டா ஒனக்கு என் மவனே வேண்டியளவு தந்துருப்பான். நான் ஒங்கிட்டக் கேக்குறது இதுதான். அவன் மனம் போற போக்க நிறுத்தலையிண்டா, ஒன்னால நிறுத்த முடியலைண்டா அல்லாவோட ஒதவியால நான் அத நிறுத்துவேன்.

**உஸ்மான்** : *(திடமாக)* நீங்க எம் பெரியண்ணன். என் மவனோட விசயத்துல நீங்க தலையிட வேண்டாம். அவன் விசயத்த நான் பாத்துக்கிடறேன்.

**முதலாளி** : *(திகைத்து)* ம் ?

**உஸ்மான்** : ம் !

*(முதலாளி பல்லைக் கடித்துக் கொண்டு போகிறார். ஆமினா உஸ்மானை உற்று நோக்குகிறாள்)*

**( திரை )**

## காட்சி எட்டு

### *நாடகம் ஆரம்பமாகிறது*

*(உஸ்மானின் வீடு. பாத்தேயி ஸாரியணிந்து ஒரு புத்தகத்தை வாசித்துக் கொண்டு நடக்கிறாள். காட்சி துவங்கும்போது ஒரு புறத்திலிருந்து காலிது கோபாவேசமாக அவளை நோக்கிக் கொண்டிருக்கிறான். அவள் அதைப் பாப்பதில்லை. சட்டென்று காலிது முன்புறம் நகர்ந்து அவளது கையிலிருந்து புத்தகத்தைத் தட்டிப் பறித்து மேஜை மேல் தூக்கியெறிகிறான். மேஜை மேல் பைண்டு செய்த புத்தகம் இருக்கிறது)*

**காலிது** : நீ இத நிறுத்த மாட்டே. நான் சொன்னாக் கேக்க மாட்டே

**பாத்தேயி** : மாட்டேண்டு நான் சொன்னேனா ?

**காலிது** : சொல்லல ; ஆனா செய்யுறது அப்பிடித்தான்.

**பாத்தேயி** : நான் என்னா தப்பு செஞ்சேன் ? நீங்க சொல்றது எனக்குப் புரியலெ.

**காலிது** : புரியுறதுக்குப் படிச்சாப் போதாது. புத்தி வேணும். எப்பப் பாத்தாலும் ஒரு வாசிப்பு. இந்த வாசிப்புக்கு ஒரு முடிவில்லையா ?

**பாத்தேயி** : நான் என்னோட எல்லா வேலையும் முடிச்சுட்டுத் தானே வாசிக்க ஒக்கார்ரேன்.

**காலிது** : அப்பிடி வாசிக்கப் புடாது. நானும் என் வாப்பாவும் உம்மாவும் சொல்றபடி நீ கேக்கணும்.

**பாத்தேயி** : என்னாத்த நான் இதுவரை கேக்காம இருந்தேன். எனக்குப் புரியலை.

**காலிது** : ஒனக்கு அது புரியாம இருக்கிறது எந்தப்புத்தான். பொம்புளைங்க படிக்கிறது நல்லதுண்டு நான் நெனச்சேன். அதுனால தான் நான் ஒன்னக் கல்யாணம் கட்டிக்கிட்டேன். அது முட்டாள்தனம்ண்டு இப்ப எனக்குப் புரிஞ்சு போச்சு.

**பாத்தேயி** : அப்படிண்டா எந்த சமயத்துல வேணுண்டாலும் தலாக் சொல்ற உரிமை உங்களுக்கு உண்டே ? எதுக்காவ தயங்கறீக ?

**காலிது** : எனக்கு அதுக்குத் தயக்கமில்லை. யாருகிட்டேயும் பயமுமில்லை.

**பாத்தேயி** : அப்ப நான் என்ன சொல்ல.

**காலிது** : நீ என் மனைவின்னு நெனப்பு வச்சுகிட்டாப் போதும்.

**பாத்தேயி** : நான் அப்பிடி நெனச்சுக்கிடறதில்லை; வாழ்ந்துக்கிட்டிருக்கேன்.

**காலிது** : (சற்றுக் கூடக் கோபம் ஏறி) என்னை வீணாகக் கெட்டதைப் பேச வைக்காதே. ஒன் அடுக்களை வேலை செய்ய என்னால முடியாது.

**பாத்தேயி** : உங்களுக்கேன் கோபம் வருது. லைப்ரரியிலிருந்து புஸ்தகம் கொண்டுத்தர உங்ககிட்ட சொன்னேன். நான் போனா உங்களுக்கு அவமானம்ண்டு நெனச்சேன்.

**காலிது** : என்னால அது முடியாது.

**பாத்தேயி** : (பிடிவாதத்தை வெளிக்காட்டாமல்) அப்படிண்டா நான் போறேன்.

**காலிது** : (கோபம் அதிகரிக்கிறது) அப்படிண்டா எனக்கு அதக் கொஞ்சம் பாக்கணும்.

**பாத்தேயி** : கட்டாயம்ண்டா பாக்க வேண்டி வரும். நான் உங்களை எதிர்க்கலை, பெண்களுக்கும் வாழ்க்கையில் கொஞ்சம் பங்குண்டு. இவ்வுலகம் அவர்களுக்கும் உரிமையுள்ளது.

**காலிது** : பெண்களுக்கு ஆண்களை ஆளும் உரிமை வேணும். அதுதான் நீ படித்தது. அதுதான் நீ சொல்றது.

**பாத்தேயி** : (தைரியத்துடன் திடமாகப் பேச ஆரம்பிக்கிறாள்) உரிமை வேணும் என்றில்லை. பெண்களை நீங்கள் உங்கள் அடிமைகளாக்காதீர்கள்.

**காலிது** : கொஞ்சம் அடிமைகளாக்காமலிருந்தால் அவர்கள் இவ்வுலகத்தை முடித்து விடுவார்கள்.

**பாத்தேயி** : ஆண்களின் உலகத்தை முடிப்பார்கள் என்று மட்டும்சொன்னால்போதும்.

**காலிது** : (உரக்க) நீ சற்றுப் பேசாமலிருந்தால் போதும்.

**பாத்தேயி** : ஒரு கணவன் என்ற முறையில் நான் உங்களிடம் எப்போதும் பணிவாக இருக்க முடியும். அன்பு காட்ட நான்

முயற்சியும் செய்வேன். (காலிது அவளைக் கடுமையாக நோக்குகிறான்) அவசியமான கல்வியறிவு என் கணவனுக்கு உண்டென்பதையறிந்த போது நான் சந்தோஷப் படவே செய்தேன்.

**காலிது** : அப்புறம் இப்போ என்னாயிட்டுது ? உன் மனம் போனபடி நான் விட்டுத்தரலை இல்லியா ?

**பாத்தேயி** : இதைவிட இன்னும் ஆக வேண்டியதொன்று மில்லை.

**காலிது** : (மேஜைக்கருகே நகர்ந்து அதன் மேலிருக்கும் பௌண்டு புத்தகத்தை எடுக்கிறான்) உனக்கு உன் மதத்தைப் பற்றி நினைவிருக்கா ? அது உனக்கு இத்தனையதிகமான சுதந்திரம் கொடுக்கிறதா ?

**பாத்தேயி** : நான் எல்லா மதங்களையும் மதிக்கிறேன். இஸ்லாம் மதத்தில் நான் பெருமை கொள்கிறேன். நான் அதில் நம்பிக்கை வைத்திருக்கிறேன். ஒரு மதமும் மனிதனை நாசமாக்கத் தோன்றியதல்ல.

**காலிது** : (புத்தகத்தைத் திருப்பி அதில் கவனமாக ஓரிடத்தை நோக்கி) அப்ப நீ இஸ்லாம் மதத்தில் அணுவளவு கூட தவறாமல் வாள்கிறாயாக்கும்! அப்படித்தானே நான் புரிந்து கொள்ளணும்?

**பாத்தேயி** : ஆமாம், இஸ்லாம் மதத்தில் பெண்கள் ஆண்களின் அடிமைகளல்ல, பெண்களுக்குக் கல்வி கூடாதென்று மதம் சொல்லவில்லை. நான் படித்தேன், என்னுடையவும் என்னோடு சம்பந்தப் பட்டவர்களுடையவும் வாழ்க்கையைத் திருத்த அதனால் நான் ஆசைப்பட்டேன். நீங்கள் என்னைத் திருமணம் செய்து கொண்டபோது நான் உங்களுடைய நல்லவொரு மனைவியாக ஆவதற்கும் முயற்சி செய்கிறேன். நான் தொளுவதுண்டு. நோம்பு நோற்பதுண்டு. இதெல்லாம் இஸ்லாம் மதத்திற்கு எதிர் என்று நான் புரிந்து கொள்ளவில்லை. (காலிது சொல்ல எதுவுமின்றி நிற்கிறான்). ஏன் பேசாமலிருக்கீங்க? வேண்டுமென்றால் பெண்கள் ஆண்களுக்கு உபதேசிக்கலாம் என்று தான் படித்திருக்கிறேன்.

**காலிது** : எனக்கு உபதேசிக்க வேண்டிய அவசியம் உனக்கில்லை.

**பாத்தேயி** : உண்டு. நீங்கள் என் கணவர். நீங்கள் நன்றாக வேண்டியது எனது அவசியமாகும்.

**காலிது** : (உரக்க) என்னைத் திருத்த நீ சிரமப்பட வேண்டாம்.

**பாத்தேயி** : அப்படியானால் உங்களுக்காகக் கெட்டுப் போக நான் விரும்பவில்லை.

**காலிது** : (கோபம் அதிகரிக்கிறது) அதற்கு நீ உன் வீட்டிற்குப் போக வேண்டி வரும். இங்கே நடக்காது.

**பாத்தேயி** : (படபடப்பு அதிகரிக்காமல்) போவதற்கு எனக்கு யாருடைய அனுமதியும் வேண்டுமென்பதில்லை.

**காலிது** : (கணவனின் அதிகாரங்களில் கைவைக்கும்போது உண்டாகக் கூடிய கோபாதிக்கத்துடன் அருகில் சென்று) என் அனுமதியில்லாமல் நீ இந்த வீட்டுப் படிக்கு வெளியே போவாயோ? (கோபத்தால் நடுங்குகிறான். அப்போது கையிலுள்ள புத்தகத்தைப் பிரித்து நோக்குகிறான்)

**பாத்தேயி** : அந்த நினைப்பு வீண். தவறு செய்யலாமென்றால் பெண்ணும் தவறு செய்யலாம். நான்கு சுவர்களுக்குள் கிடந்து பிள்ளைபெற்று வேலை செய்ய இனிமேல் உங்களுக்கு ரொம்பக் காலம் பெண்கள் கிடைக்க மாட்டார்கள். நீங்கள் பெண்களின் மூளையை மரத்துப் போகச் செய்கிறீர்கள். அவர்களுக்கு வெளிச்சத்தைக் காட்டாமல், கல்வி புகட்டாமல் அவர்களை நாகமாக்குகிறீர்கள். அதனால் நாசமாவது பெண்கள் மட்டுமல்ல; ஆண்களும் கூடத்தான்; நமது சமுதாயமும்.

**காலிது** : நிறுத்தவாக்கும் சொன்னேன்.

**பாத்தேயி** : நிறுத்தினால் உங்களுக்குப் புரிவதில்லை, நமது வாழ்க்கை இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது. நல்ல வெளிச்சத்தில் நம்பிக்கையோடும், சிநேகத்தோடும் வாள நாம் முயற்சிக்கக் கூடாதா ?

**காலிது** : அப்படியென்றால் இன்று வரை உள்ளதெல்லாம் தவறு; இஸ்லாம் மதம் கொஞ்சம் சீர்கேடு கொண்டது; இல்லையா ?

**பாத்தேயி** : எனக்கு அப்படி அபிப்பிராயமில்லை

**ஹஸன்** : (சட்டென்று நுழைகின்றபோதிலும் விஷயங்களொன்றும் புரிந்து கொள்ளாமலேயே) எனக்கு அப்படித்தான் அபிப்பிராயம். இஸ்லாம் மதம் கொஞ்சம் சீர்கேடு கொண்டது தான். (காலிதும் பாத்தேயியும் அவர்களது மோதலிலிருந்து பின் வாங்கி, முகபாவங்களை மாற்றிச் சிரிக்கின்றனர். காலிது பேசாதே என்று சைகையும் காட்டுகிறான்) ஏன் நீங்க சிரிக்கிறீக?

**காலிது** : நீ சொன்னதக் கேட்டுச் சிரிக்கேன். சொல்லு.

**ஹஸன்** : (நாற்காலியிலமர்கிறான்) என்னண்டா, நம்ம பள்ளிகள்ள அடிபிடி உண்டாகுது. பள்ளிகளப் பூட்டி வைக்கிறாவ. 144 போட்டு சிப்பாயிங்க வந்து தொளுகை நடக்குது. சாவு தெருவளியா அங்கிட்டும் இங்கிட்டுமா இளுத்துப் பறிக்குது. கல்யாணங்க கட்சி பிரிஞ்சு நடக்காமப் போவுது. இதெல்லாம் நம்ம மதத்தோட பேரச் சொல்லி. எல்லாருட்டயும் இருக்கு முஸீஹபு. நாமள்ளாம் எப்பவும் சொல்றது என்னண்டா வரிந்துக்கொள்ள நூறு ஜாதிங்க இருக்குண்டு. இப்ப நாம அப்பிடி ஆயிடப் போறோமுண்டு தோணுது.

**காலிது** : அப்படின்டா நீ இந்தத் தொளுகைக்கெல்லாம் எதிர்.

**ஹஸன்** : நீங்க வீணானதெல்லாம் சொல்லிக் கௌப்பாதீக. மனுசனுக்கு இப்ப ஒதைபட முடியாது. நான் அப்படியொண்ணும் சொல்லலை, ஆனா ஒரு விசயம் சொல்லணும். இப்படித் தொளுது நோம்பு புடிக்கிறவகள்ளாம் நல்லவுக இல்லெ. நெறயப் பேருங்களும் கடனேன்டுதான் அதெல்லாம் செய்துக்கிட்டுருக்காக.

**பாத்தேயி** : இந்த ஹஸன்காக்கா சொல்றது எனக்குப் புரிய மாட்டேங்குது.

**காலிது** : ஹஸன் சொல்றதுல விசயமிருக்கு ஃபாத்திமா. இஸ்லாம் மதம் கடைப்பிடிக்கச் சொல்ற கடமைகள் இருக்குல்லெ ? நோம்பு, தொளுகை, ஹஜ்ஜு எல்லாம்–இதெல்லாம் மனுசனோட மனசையும் வாள்க்கையையும் சீர்படுத்துறதுக்காக. அதற்கான சக்தியும் அவைகளுக்குண்டு. மதம், நரகத்தினுடையவும் சொர்க்கத்தினுடையவும் கதை சொல்றதுக்காக ஏற்பட்டதில்லை. மனுசனையும் அது மூலமா இந்த ஒலகத்தையும் திருத்துறதுக்காக ஏற்பட்டது. நம்ம மதக்காரங்க என்னடாண்டா மதத்தோட பேர வச்சு உலகத்தையே மறந்துடறாங்க.

**ஹஸன்** : அதான், ஆனா என்னா ? எனக்கு அப்பிடி காலிது காக்கா சொல்ற மாதிரி சொல்ல முடியாது.

**காலிது** : போதும் ஹஸன். நீ எங்களுக்குக் கொஞ்சம் தொந்திரவு கொடுத்திட்டே. நாங்க நாடக ரிஹர்ஸல் பாத்துக்கிட்டுந்தோம். அப்போதான் நீ வந்து இந்த சங்கடத்தையெல்லாம் உண்டாக்கினெ.

**ஹஸன்** : நீங்க நாடகம் படிச்சிட்டிருந்தீகளா ? அப்ப அத மொதல்லயே நம்மட்ட சொல்லியிருக்கப் புடாதா ?

**காலிது** : அதுனால ஒன் அபிப்பிராயங்களத் தெரிஞ்சுக்கிட முடிஞ்சுதுல்லா ? (புத்தகத்தைப் பிரித்து ஹஸனுக்கு நேரே நீட்டி) புடி. (அவ்வாறே செய்கிறான்) இந்தா இங்கிட்டுருந்து, எங்களுக்கு நெனப்பு இல்லாத்ததச் சொல்லித் தா.

**ஹஸன்** : பெரிய சங்கடமாப் போச்சே கடவுளே.

**காலிது** : ஆரம்பிக்கட்டும் (பாத்தேயியைப் பார்த்துக் கோபத்துடன்) இஸ்லாம் மதம் கொஞ்சம் சீர்கேடு கொண்டது இல்லையா ?

**ஹஸன்** : நில்லுங்க, நில்லுங்க. அவசரப் படுத்தாதிங்க. நான் ஒண்ணு கேக்கட்டுமே .... நாடகத்துல ஃபாத்திமா உண்டா ?

**காலிது** : நம்ம பெண்களப் பத்தின கதை. ஃபாத்திமா இப்பக் கொஞ்சம் படிச்சு நல்லாயிருக்கால்லெ? பேசுறதக் கேட்டேல்லெ? அப்ப அவளே நடிக்கட்டுமேண்டு நெனச்சேன். நானு இங்கேயிருந்தே படிக்க வச்சுப் பாக்குறேன்.

**ஹஸன்** : *(புத்தகத்தை மூடி நாற்காலியில் வைத்துவிட்டு எழுந்திருக்கிறான்)* என்ன விட்டுருங்க. எப்பிடியாவது ஒளிஞ்சு கிளிஞ்சு நாடகம் பாக்க வரலாமுண்டு இருந்தேன். இப்படியிண்டா தலை தெரியாது.

**காலிது** : அதெல்லாம் பளைய கதை. சும்மா கூப்பாடும் சத்தமும் போடுறதத் தவிர அவுகளுக்கு வேறொண்ணும் முடியாது. மதத்தோட பேரச் சொல்லி அவுக வருவாக. மதம் அவங்களோட இருக்காது. எனக்கு என்ன பயம் ? ஃபாத்திமா தெருவோரத்துல கெடந்து கஷ்டப்பட்டபோது கண்ணத் தொறந்து பாக்காதவுகதானே கல்ல எடுத்து எறிய வாராக? வரட்டும், மீதிய நாம அப்பச் சொல்லிக்கிரலாம்.

*(உள்ளேயிருந்து சிறு சப்தங்கள் கேட்கின்றன)*

**பாத்தேயி** : யாரு என் அறையில ? *(போகிறாள்)*

**காலிது** : நீ நாடகத்துல நடிக்கிறியா ? ஒரு வேசம் தாரேன் என்ன ?

**ஹஸன்** : நீங்க ஆளச் சாகடிக்கப் பாக்கிறிய. இப்பவே உள்ள திட்டும் ஒதயும் ஒங்க கேராஃபில்தான் நமக்குக் கெடைக்குது.

*(உள்ளேயிருந்து சிரிப்பொலி கேட்கிறது. காலிதும் ஹஸனும் திரும்பிப் பார்க்கிறார்கள். பாத்தேயி கதீஜாவைப் பிடித்து இழுத்துக் கொண்டு வருகிறாள். அவள் தனது ஆடையின் மேல் பாத்தேயியின் ஒரு ஸாரியைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். ஒரு வினோதமான கோலம். தலையில் தலைத் துணியுமிருக்கிறது)*

**ஹஸன்** : நல்ல கோலம் !

*(கதீஜா வெட்கமுற்று பின்புறமாக இழுத்துக் கொண்டு விளையாடுகிறாள்)*

**பாத்தேய்** : நில்லு கதீசா. எல்லாரும் பாக்கட்டும்.

*(வெளியேயிருந்து ஆமினா பிரவேசிக்கிறாள். 'புர்கா' அணிந்திருக்கிறாள். கையில் மூடின குடையுமிருக்கிறது)*

**ஆமினா** : என்னா இங்கிட்டு எல்லாருமாச் சேந்துக்கிட்டு *(கதீஜாவும் பாத்தேயியும் உள்ளே ஒடுகிறார்கள்)* என்னெல்லாம் ஹலாக் இங்கே உண்டாவப் போவுதோ, அல்லாக்குத் தான் தெரியும்.

**ஹஸன்** : ஒரு ஹலாக்குமில்லெ. வார மாதிரி வரட்டும். அப்பச் சொல்ல வேண்டியத அந்தப் பக்கம் சொல்லிக்கிரலாம்.

**ஆமினா** : *(காலிதிடம்)* ஒனக்கென்னாடா, பேசாமப் பாத்துக்கிட்டுருந்தா ? என்னோடயும் ஒன் வாப்பாவோடயும் பொணப்பொட்டி இங்கிருந்து எடுத்த பொறவு நீ என்னஎல்லாம் வேணுண்டாலும் செய்துக்க.

**காலிது** : நீங்க இப்ப ஒண்ணும் சொன்னாத் தீராது. நீங்க உள்ளாரப்போயி அதையெல்லாம் மாத்துங்க. (ஆடைகளைக் குறிப்பிடுகிறான்)

**ஆமினா** : நீ சொன்னாலும் இப்பத் தீராதுண்டுதான் எனக்குத் தோணுது. (உஸ்மான் வருகிறான், எதுவும் பேசுவதில்லை. எல்லோரும் கவனிக்கிறார்கள்) என்னாங்கறேன்? ஒங்க கொரவளையில துணி கெட்டிருக்கியளா? கொஞ்ச நாளாச்சுதே இப்பிடி.

**ஊஸ்மான்** : இனிமெ இப்பப் பேசாம இருக்குறதுதான் நல்லது. யாரு சொன்னாலும் தீராதளவு போயிட்டுது.

(திரை)

## காட்சி ஒன்பது

### *இது உலகம்*

*(முதலாளியின் வீடு, அவர் முற்றிய கோபத்துடன் உலவிக் கொண்டிருக்கிறார். கையில் விரித்துப் பிடித்த ஒரு கடிதம் இருக்கிறது. கதீஜா பயந்து சப்தமின்றி ஒரு புறத்தில் நிற்கிறாள். முதலாளி சட்டென்று உட்புறம் போய்விட்டு நிமிடங்களுக்குப் பிறகு திரும்பி வருகிறார்)*

**முதலாளி** : *(திரும்பி வரும்போது) சீக்கிரமா வரச் சொல்லு. நான் யாருண்டு இதுவரையிலும் யாருக்கும் தெரியலெ. (கதீஜாவின் நேராகத் திரும்பி) அடீ, ஒனக்குத் திருப்தியாச்சுதா ? இனிமே ஒங்க மனம்போனபடியெல்லாம் ஆவட்டும். இந்தக் கடுதாசு என்னாண்டு ஒனக்குத் தெரியுமா ?... தெரியுமாங்கேன் ?*

**கதீஜா** : *எனக்குத் தெரியாது வாப்பா.*

**முதலாளி** : *ஒனக்குத் தெரியும். ஆமாண்டி, தெரியும். ம்... போயி எங்கனாச்சும் ஒரு மூலயில ஒக்காந்துக்க. ஒரேயடியா என்னக் குளியில தள்ளிப்போட்டா ஒனக்கு வருத்தமில்லெடீ. யாரபுல் ஆலமின் ! (கதீஜா உள்ளே போக யத்தனிக்கிறாள்) எங்கிட்டுடீ போறே ? இப்பிடி வா, இந்தக் கடுதாசி என்னேன்டு ஒனக்குத் தெரியுமாடி, தெரியுமா ?*

**கதீஜா** : *எனக்குத் தெரிஞ்சுக்கிட வேண்டாம், வாப்பா.*

**முதலாளி** : *நீ தெரிஞ்சுக்கிடணும். இது நீயே வருத்திக்கிட்ட பலனாக்கும்.*

**கதீஜா** : *நான் ஒரு பலனும் வருத்திக்கிடலை, வாப்பா.*

**முதலாளி** : *பின்னே நானாடி ? (கோபம் பொறுக்காமல்) என் ரப்பே ! (வெளிப்புறம் நோக்கி) இங்கிட்டு வாடா, இங்கிட்டு வா, (ஹஸன் பயந்து மிரண்டு நழைகிறான்) எங்கிருந்தேடா இத்தனி நேரம்? எங்கிருந்தே? அங்கதானே? (கழுத்தைப் பிடித்து உள்ளே தள்ளுகிறார். பெரியவரும் போகிறார் அடிக்கும் சப்தமும் ஹசனின் கூக்குரலும் கேட்கின்றன)*

**கதீஜா :** *சின்னக்காக்காவ அடிக்காதீய வாப்பா. (உள்ளே செல்கிறாள். கூடவே அவளுடைய கூக்குரலும் கேட்கிறது)*

**முதலாளி :** *(உள்ளிருந்து) அவன் மட்டுமில்லெ. நீயும் படிக்கணும் (அடியின் ஒலியும் கூக்குரல்களும் கேட்கின்றன, பெரியவர் வருகிறார்) ஒண்ணு நீங்க, இல்லெ நானு. அல்லாவோட ஒதவியினால நான் ஒங்கள அடக்குவேன். அத்தினிக்காயிடிச்சா ? காட்டுல கெடக்குற ஆனை மனுசங்க காலுக்குக் கீள அடங்கிப் போவுது. அப்புறம் நீங்க என்னா. (கடிதத்தை நோக்குகிறார்) கோஜராஜாவான தம்புரானே! நான் என்னெல்லாம் கனாக் கண்டேன். (ஔக்கர் கையில் கனமான கணக்குப் புத்தகங்களுடன் பிரவேசிக்கிறான்)*

**ஔக்கர் :** *எல்லாம் ஒங்க தப்புனால வந்ததுதான். கொளந்தங்கள அடக்கி வைக்க முடியாததுனாலதானே. எல்லாத்தயும் கொஞ்சி தலமேல தூக்கி வச்சுக்கிருங்க.*

**முதலாளி :** *அவுகளுக்கு இந்த விசயங்கள்ளாம் யாருடா எளுதித் தெரிவிச்சது ?*

**ஔக்கர் :** *அதுக்கு வேற யாராச்சும் வேணுமா? இந்த ஊட்டுல நடக்குறதெல்லாம் ஊருலபாட்டு. ஆனா இது இப்பிடி ஆயிட்டதும் நல்லதுதான்ண்டு என் நெனப்பு. (புத்தகங்களை மேஜை மேல் வைக்கிறான்)*

**முதலாளி :** *என்னாடா நீ சொல்றே?*

**ஔக்கர் :** *அவுனுக்கு அங்க மைசூர்ல இன்னொரு பொண்டாட்டியும் ஒண்ணு ரெண்டு கொளந்தைங்களும் இருக்காவ. ஏங்கிட்ட அத வேறோருத்தர் சொன்னாவ. நான் அத அப்புறமா ஒங்க கிட்டச் சொல்லலாண்டு இருந்தேன்.*

**முதலாளி :** *(குரலைச் சற்றுத் தணித்து) அது எனக்கும் தெரியும்டா. எப்பிடியாச்சும் இது அடிச்சுப் புடிச்சு நடந்துரட்டுமண்டு நெனச்சுல்லா. எங்கிட்டானாலும் ஒரு நேரம் கஞ்சி கெடைக்கிற எடத்துக்கு அனுப்புறதுல்லா என் ஹாஜத்.*

**ஔக்கர் :** *இல்லாட்டாலும் இதெல்லம் சாதாரணந்தானே ?*

**முதலாளி :** *சாதாரணம்! ஒன் விசயம் கெடக்கே முள்ளும்மேல. நீ எப்பிடிடா அவளதலாக் சொல்லப் போறே ?*

**ஔக்கர் :** *எல்லாரும் செய்யுற மாயிரி.*

**முதலாளி :** *அவளுக்கு வயத்துல உண்டாயிருக்காண்டு என் அம்மோசான்காக்கா சொன்னாவ. அது தெரியுமா ஒனக்கு.*

**ஔக்கர் :** *தெரியும்.*

**முதலாளி :** *உண்டாகியிருக்குறப்ப தலாக் சொல்லக் கூடாது தெரியுமா ?*

**ஔக்கர்** : கூடாதுண்டா அவ கேஸ் போட்டுக்கிரட்டும். அதெல்லாம் சாதாரணந்தானே – கல்யாணம் செய்துக்கிடறதும், தலாக் சொல்றதும், கேஸ் போடறதும் எல்லாம்.

**முதலாளி** : எனக்கு ஒன் சாதாரணத்தக் கேக்குறப்ப தலநோவு புடிக்குது. எங்க பாத்தாலும் நிம்மதி இல்லெ. உள்ளயும் இல்லெ, வெளியிலயும் இல்லெ. துனியாவுக்கு வயசாயிப் போச்சுடா வயசாயிப் போச்சு! (போய் நாற்காலியில் அமர்கிறார்)

**ஔக்கர்** : ஓங்க ஏலாமை தான். ஓங்க குடும்பத்துக்காரங்கள ஓங்களால நெலயில நிறுத்த முடியலெ.

**முதலாளி** : நான் பொறுக்கப் பாத்தேண்டா, இனிமெ முடியாது. என் சரியான உருவத்த இப்பக் காட்டுறேன். ம்.

**ஔக்கர்** : நாஞ்செய்யுறதுல்லியே விசயம் ? அந்த காலிது செய்யுறது என்னாண்டு ஓங்களுக்குத் தெரியுமா ? அவன் அவளுக்கு மலையாளமும் இங்கிலீசும் கத்துத் தாரானாமே ?

**முதலாளி** : (அதற்கேற்ப) கட்டுப்பாடில்லாம கடைத்தெரு வளியா சுத்தித் திரியறாவளாமே ?

**ஔக்கர்** : (அது போலவே) சினிமாவுக்குப் போறதும் வாசக சாலைக்குப் போறதும் எல்லாம் ஆரம்பிச்சிருக்காவளாமே. சனங்க விசிலடிச்சாலும், கேலி செஞ்சாலும் அவனுக்கு ஒரு குலுக்கமும் இல்லெ. இப்ப நாடகமும் ஆடறானாமே.

**முதலாளி** : லாஹௌல ஒலா கவ்வத்த இல்லாபில்லா !

**ஔக்கர்** : இந்தக் காஃபீர்ரிங்க இருக்காவல்லெ ? பயலுவ மொவத்துல முளிக்க லாயக்கில்லாதவனுக. அவனுக அர்த்தம் வச்சுக்கிட்டு நம்ம மொவத்தப் பாக்கானுக. நாம யாரும் இந்த ஊருல இல்லியாண்டு அவுக கேள்வி.

**முதலாளி** : இண்ணைக்குத் தொளுகைக்குப் பொறவு ரெண்டுல ஒண்ணு முடிவு செய்யணும். அல்லாவோட ஒதவியால நான் இத நிறுத்துவேன். முஸல்மாண்டு சொல்லிக்கிட்டு நாம பொறவு தாடியும் தலக்கட்டுமா நடக்கறதா. நான் போனவருசம் ஹஜ்ஜுக்குப் போக வேண்டாண்டு வச்சது ஏனெண்டு தெரியுமாடா? நான் எதுக்கும் தயங்காதவனாக்கும்.

**ஔக்கர்** : இல்லாட்டா நீங்க போயிவாரதுக்குள்ள ஓங்க புள்ளங்களெ புடிக்க முடியாது. இப்பிடி இங்க இருக்கும் போதே இந்த மாதிரி.

**முதலாளி** : இந்த அறையில் போட்டுப் பூட்டுத் தொலையிடா. எதுனாச்சும் கொஞ்சம் தின்னுறதுக்கு வச்சுக் கொடுத்தாப் போதும்.

**ஔக்கர்** : அதுவும் அதுக்கு மேலேயும் செய்ய வேண்டி வருமுண்டு தோணுது.

**முதலாளி** : என் ரப்பே ! (எழுந்திருக்கிறார்) நீ அவுகள இங்கிட்டு அளச்சுக்கிட்டு வா. அந்தாக் கெடக்குற அந்தத் துருவி. (ஔக்கர் போகிறான்) எல்லாத்துக்கும் நான் காட்டுறேன், வேண்டாம், வேண்டாம்ண்டு பாத்தா கொளந்தங்க தலயில ஏறுதாவ. ஹோ! (ஹஸனும் ஔக்கரும் பின்னால கதீஜாவும் பிரவேசிக்கிறார்கள். ஹஸனும் கதீஜாவும் அழுது கொண்டிருக்கிறார்கள். அடிபட்ட பாகங்களைத் தடவிக் கொண்டிருக்கிறார்கள். ஹஸனிடம்) டேய், போதுமா ஒங்களுக்கு? (அருகில் சென்று கடிதத்தைக் காட்டியவாறு) இது என்னாண்டு தெரியுமா ஹமாரே? ஒங்களால முஸீபத்து. நீ தான் கதீசாவ முளுசும் கெடுத்தது. அங்கிட்டுருக்குற அந்த ஒதவாக்கரைங்களும். கேட்டுக்கடா, கேட்டுக்க. கதீசாவோட மாப்பிள்ளைக்கு இந்தக் கல்யாணம் வேண்டாமாம். பொம்புளப் புள்ளைங்கண்டா அடக்கம், ஒதுக்கம் வேணும். அந்தத் திருட்டு வேலை, குடும்பத்துல முளுசும் சேத்த வாரித் தெளிச்சுட்டுதுல்லா? (கதீஜாவை உக்கிரமாய் நோக்கி) நிக்கிறா பாரு சைத்தான்! ஒரு அடி ... இனிமெ உள்ளாரக் குந்தியிரு. (மீண்டும் நடக்கிறார் சட்டென்று உள்ளே போய்த் தன் கம்பை எடுத்துக்கொண்டு வந்து, இருவரையும் தடுப்பாக கம்பை முன்னால நீட்டி) நான் இப்ப ஒங்க ரெண்டு பேர்கிட்டயும் கேக்குறது நீங்க நல்லாகணும்ண்டு ... நீங்க நல்லாகணுமங்குறதுக்காக நான் கேக்குறேன், சொல்லுங்க.

**ஹஸன்** : எப்பிடி வாப்பா நாம நல்லாவுறதுக்காக ?

**முதலாளி** : கேக்குறதப் பாத்தியா ஹெம்ரூது! பேசாதேடா, என் கையில் கம்பு இருக்கு. நான் கேக்குறேன் தொளுகை செஞ்சு வாப்பா சொல்றதக் கேட்டு நடப்பியாங்கேன்.

**ஹஸன்** : அதுனால மட்டும நாம நல்லாயிருவோமா ?

**முதலாளி** : (அலறுகிறார்) போடா இங்கிருந்து ... (பிடித்து பலமாகத் தள்ளுகிறார்) என் கண் முன்னாலருந்து. (ஹஸன் உட்புறம் ஒடுகிறான். கதீஜாவும். கோபத்தால் உடல் நடுங்குகிறது) போங்கடா நாய்க்குப் பொறந்தவுகளா, ரெண்டு பேரயும் நான் சலக்குளியில தள்ளிப் புடறேன்! கம்பு எங்கையில சும்மா கெடக்காது. (ஔக்கர் நிற்பதைக் கண்டு) நீ போயி ஒம் வேலயப் பாரு. (ஔக்கர் போகிறான். பெரியவர் அங்குமிங்கும் நடந்து கொண்டிருக்கிறார். சட்டென்று வெளியே நோக்கி) ஆங், ஒன்னக் கூப்புட்டுக்கிட்டு வரச் சொல்லித்தான் அனுப்பிச்சேன். இப்பிடி வா. இப்பிடி உள்ளார நில்லு, (ஸாரியுடுத்து சுத்தமாக பாத்தேயி பிரவேசிக்கிறாள்) ஹோ! என்ன கோலம்! ஒங் குடும்பத்துல யாராச்சும் இப்பிடி உடுத்திக்கிட்டுருக்காங்களாடி ? (இன்னும் சற்று மேடையின் நடுவில் சுட்டிக் காட்டி) இப்பிடி நில்லு.

(அப்படியே செய்கிறாள்) நாங்களா இருக்குறதுனால நாங்க மொதல்ல விசயத்தச் சொல்றோம். எம் முன்னால வாரதுக்கு ஒனக்குத் தைர்யம் வராதுண்டு நான் நெனச்சேன்.

**பாத்தேயி** : (சாந்தமாக) ஒங்களுக்கு பயப்பட்டு நான் இங்கிட்டு வரலை. ஒங்ககிட்ட பயப்பட எனக்கு ஒரு தேவையும் இல்லெ.

**முதலாளி** : ம்ஹூம் ? நாக்க அறுத்து எறிஞ்சுப்புடுவேன். துள்ளிக் குதிக்கிறியோ ? எதுக்காவ ஒன்னக் கூப்புட்டேண்டு ஒனக்குத் தெரியுமா ?

**பாத்தேயி** : தெரியாது.

**முதலாளி** : ஒன்ன அந்த ஊட்டுலருந்து சீக்கிரமா மூட்டயக் கட்டணும்ண்டு. நீ அங்க வந்ததுனால எங்குடும்பத்துல சேறு தெறிச்சுப் போச்சு. எங்கொளந்தைங்க கெட்டுப் போயிட்டாக. நீ இங்கிட்டுருந்து போக மாட்டே ?

**பாத்தேய்** : நீங்க சொன்னா போமாட்டேன்.

**முதலாளி** : பின்னே யாரு சொன்னாடி நீ போவே? உஸ்மான் ஏந்தம்பி. காலிது அவன் மவன். ஒன்ன மிதிச்சு வெளிய தள்றதுக்குள்ள சீக்கிரம் போயிடு. அடீ, நீ நாடகம் ஆடுறியோ ? அத்தினிக்கு வந்துட்டியாடி நீ ? ஒன் உசிர எடுத்துப்புடுவேன்.

**பாத்தேயி** : அதொண்ணும் ஒங்களால நிறுத்த முடியாது. காலிது காக்காதான் என்ன அளச்சுக்கிட்டு வந்தாக. அவுக சொன்னாத்தான் நான் போவேன். நீங்க சொல்றது நான் நாசமாகப் போறதுக்கு. அவுரு சொல்றது நான் வாளறதுக்கு.

**முதலாளி** : அடீ, நீ எனக்குப் பிரசங்கம் பண்ண வேண்டாம். (உடல் குலுங்க) வேண்டாம். (கம்பை உயர்த்தி அடிக்கப் போகிறார், காலிது குதித்து வருகிறான்)

**காலிது** : பெரியப்பா ! (நடுவே குதிக்கிறான்) அவளத் தொட்டுராதீக. அவள நானாக்கும் இங்கிட்டுச் சொல்லி யனுப்பிச்சேன். நீங்க என்னாத்துக்கு அவளைக் கூப்பிடறியண்டு தெரிஞ்சுக்கிடரதுக்காக.

**முதலாளி** : நீ எங்கிட்ட கேக்க வந்தியோ ?

**காலிது** : அவளக் கூப்பிட்டுக் கேக்க வேண்டிய எந்த அவசியமும் ஒங்களுக்கு இல்லெ (பாத்தேயியிடம்) நீ இனிமெ போய்க்கோ (உஸ்மானும் ஆமினாவும் கவலையுடன் நுழைகிறார்கள். காலிது பாத்தேயியிடம்) நீ இங்க நிக்க வேண்டாம். (அவள் போகிறாள்)

**உஸ்மான்** : (முதலாளியிடம்) என்னாச்சு காக்கா ஒங்களுக்கு ?

**முதலாளி** : எனக்கா? எனக்கு என்னாண்டு நான் சொல்லணுமோ?

**ஔக்கர்** : (பிரவேசித்து) வாப்பா, நீங்க கொஞ்சம் பேசாம இருங்க.

**முதலாளி** : என்னால இனிமெ பேசாம இருக்க முடியாதுடா. (காலிதை நோக்கி) டேய், ஒரே அடில ஒன்னக் கொண்ணு போட்டாலும் பாவம் இல்லெ. (கம்பு இலேசாக உயர்கிறது)

**காலிது** : அப்பிடிண்டா கொண்ணு போடுங்க.

**ஆமினா** : அங்கிட்டு வெலகி நிண்ணுக்க காலிது.

**முதலாளி** : (உஸ்மானிடம்) ஓம் மவன்ட்ட சொல்லு. அவன் இத நிறுத்துவானா மாட்டானாண்டு. (காலிதிடம்) டேய், நீ ஒரு இஸ்லாம் மதத்துல பொறந்த பொண்ண நாடகத்துல ஆட வக்கிறியா ? டேய், நீ நரகத்துல அடிமட்டத்துக்கு எடம் போட்டுப்பிட்டேடா. டேய், அந்த ஆசை ஒனக்கு வாண்டாம். நாமல்லாம் இங்க ஹயாத்துல இருக்கறப்ப அதுக்கு சம்மதிக்க முடியாது. அல்லாவோட ஒதவியால என் நெசமான நெறத்த நான் காட்டுவேன். எங் கொளந்தங்க இனிமே ஒம் மனம் போன போக்குக்குக் கெடைக்க மாட்டாவ. இனிமே அவுக அந்த ஊட்டுப் படிய மிதிச்சா அவுக பொணத்தத்தான் அங்கிட்டுருந்து இங்கிட்டுக் கொண்டு வரது. உசுரோட அவுக அப்புறம் எனக்கு வேண்டாம்!

**ஆமினா** : (இயலாமை வெளிப்பட) நாங்க என்னா காக்கா செய்யணும் ?

**முதலாளி** : டேய், நான் போன வருசம் ஹஜ்ஜு வேண்டாம்ண்டு வச்சது ஏனெண்டு தெரியுமா? இப்பிடிப் போயிப் பிரயோசனமில்லை, நான் நல்லாகுறதுக்கு இங்க நூறு கெட்டுப் போகுமே. ஒங்களுக்கு மவன் வேணுமுண்டா கய்யும் காலும் புடிச்சு அங்கக் கட்டிப் போடுங்கோ. இல்லாட்டி அவன் பொணத்த ஒங்களுக்குப் பாக்க வேண்டி வரும். (காலிதினெதிரே திரும்பி) என்னடா ஒன் நாடகத்தும் பேரு ? 'இது உலகம்' னா? ஒரு பேரு வச்சுருக்கான், 'இது உலகம்' ண்டு. யாருக்குடா தெரியாது? நாங்கள்ளாம் இது ஆகாயம்ண்டா சொல்றோம்? (உஸ்மானிடம்) டேய், இதுலயே தெரியலியா, அவன் தலயில என்னவோ கோளாறுண்டு.

**காலிது** : (உரக்க) இது ஒலகம்ண்டு ஒங்களுக்குத் தெரியும் பெரியப்பா. ஆனா அத ஞாபகம் வச்சுக்கிடறதில்லை. ஆகாயத்தப் பார்த்துக்கிட்டுத்தான் நீங்க பேசுறிய. (நாற்காலியைச் சுட்டிக்காட்டி) நீங்க அங்க உக்காருங்க. எனக்கு ஒங்ககிட்ட சில விசயங்கள் சொல்லணும்.

**முதலாளி** : என் ஊட்டுல உக்கார்ரதுக்கு நீ எனக்குச் சொல்றியோடா ? நீ எனக்கு ஒண்ணும் சொல்லவும் வேண்டாம்.

**காலிது** : அப்ப நான் ஒண்ணு சொல்லட்டா. ஒங்களால அந்தக் கம்பால ஒங்க கொளந்தைகள நல்லாக்க முடியாது.

**முதலாளி** : அந்தக் கம்பால நான் அவுகள நல்லாக்கப் போறதில்லை. கொன்னுப் போடப்போறேன்.... போங்க. நீங்கள்ளாம் இங்கிட்டுருந்து போயிடறதுதான் நல்லது, எனக்கு வெறி பிடிக்குது.

**உஸ்மான்** : ஆமினா, காலிது, நடங்க.

(ஆமினா நடக்கிறாள். உஸ்மான் காலிதின் கையைப் பிடித்துக் கூப்பிடுகிறான்).

**காலிது** : (முதலாளியிடம்) இங்கிட்டுருந்து நீங்க போகச் சொன்னா நாங்க போயிருவோம். அதுக்கு மேல ஒங்களால ஒண்ணுஞ் செய்ய முடியாது.

**முதலாளி** : (அலறுகிறார்) போடா... தொண்டையக் கௌறாதே. (பாய்ந்து நெருங்குகிறார்)

(மூவரும் போகிறார்கள். முதலாளியின் நடவடிக்கைகளில் வேகம் கூடுகிறது.)

**ஔக்கர்** : என்னால ஒண்ணும் சொல்ல முடியாது. எல்லாம் நீங்களே செய்துக்கிடுங்க.

**முதலாளி** : போடா. நீயும் ஒன் வேலயப் பாத்துக்கிட்டுப் போ. எனக்கு இங்க யாரும் தேவையில்லை. போய்க்கிடு. (போய் நாற்காலியிலமர்கிறார்) இப்பிடி ஹஜ்ஜுக்குப் போகாம இருந்தது நல்லதாப் போச்சு !

**ஔக்கர்** : நானும் அதான் சொல்லுதேன்.

**முதலாளி** : (எழுந்திருக்கிறார்) பேசாமப் போயிருண்டாக்கும் சொன்னென் நான் . ம் .... (கோபத்துடன் போகிறான். பெரியவர் நடக்கிறார், நாற்காலியிலமர்கிறார். சட்டென்று எழுந்து மீண்டும் நடக்க ஆரம்பிக்கிறார்) நான் எங்கேயும் போகலியா! நான் எங்கயும் போகலை. எனக்குப் பயித்தியம் புடிக்குது. எனக்குப் பைத்தியம் புடிக்குது. (நடப்பதும், நாற்காலியில் அமர்வதும், உடனே எழுந்திருப்பதும், திரும்பவும் நடப்பதுமாக இருக்கிறார்) எங்கே கதீசா? கதீசா எங்கே? ஹசன் எங்கே? எங்கே எல்லாரும்? (கூப்பிடுகிறார்) ஔக்கரே, ஔக்கரே! (திரும்பவும் கூப்பிடுகிறார்) ஔக்கரே, ஔக்கரே! (ஔக்கர் பிரவேசிக்கிறான்) எங்கடா, எங்க ? கதீசாவையும் ஹஸனையும் இங்கிட்டுக் கூப்பிடுடா, சீக்கிரம் கூப்புடு. எனக்குப் பைத்தியம் புடிக்குது! எனக்குப் பைத்தியம் புடிக்குது. (முதலாளி பைத்தியக்காரனைப் போல் நடந்து கொண்டிருக்கிறார். ஔக்கர் வருவதைக் கண்டு) இங்கிட்டு இருக்கச் சொல்லு அவுக கிட்ட, இங்கிட்டு இருக்கச் சொல்லு !

**ஔக்கர்** : அவுகள அங்கிட்டுக் காணோம்லா ?

**முதலாளி**: ம் !...

**ஔக்கர்** : இங்க எங்கியும் காணோம் !

**முதலாளி** : டேய், போய் சவப்பெட்டி ரெண்டு கொண்டு வா ! அவுக பொணத்த நான் இப்பக் கொண்டாரேன் ! டேய், அவுக பொணத்தயர்க்கும்டா நான் இப்பக் கொண்டாருவேன். (பைத்தியக்காரனைப் போல கம்பை நீட்டிக்கொண்டு வெளியே ஓடுகிறார்)

**ஔக்கர்** : இப்ப அந்தக் கம்பெடுத்துக்கிட்டுப் போறாக. இனிமே அதால ஒரு மண்ணும் செய்ய ஆவாது.

(திரை)

Printed by Bharat Mudranalaya, Shahdara, Delhi-110032